பனந்துண்டங்கள் மூன்று பழங்களைத்தருவதும் உண்மையாகுமென்று சிந்தித்து என்னைப்பெற்ற அன்னையாகிய ஔவை ஒரு செய்யுளைப்பாடினாள். எ-று. (௫அ)

திங்களொன்றெடுத்துப்பாடத்துண்டம்வேர்கொண்டெழுந்து
பைங்குலைமடற்கருத்துப்பாளைகள்விரித்துநின்று
நுங்குகண்முற்றிக்காயினுனிமுகங்கறுப்படைந்து
பங்கெனமூவருக்கும்பழங்கள்மூன்றளித்ததன்றே.

(இ - ள்) திங்கள் என்று தொடங்கி ஒரு செய்யுளை ஔவை பாடி முடிக்கவே, அப்பனந்துண்டுகள் பூமியில் வேரூன்றி மரமாகவெழுந்து, குருத்தையும் பூமடலையும் விரிந்தபாளையையும் பசியகுலையையும் உடையதாய் நின்று, நுங்குகள் முதிர்ந்து, காயின் நுனிமுகம் கறுத்து, பங்காக அரசர் மூவருக்கும் மூன்று பழங்களைத்தந்தது எ-று. (௫௯)

வீழ்ந்திடுகனியைக்கண்டார்வியப்பின்வேற்றுடலமானா
ராழ்ந்தநீர்விளிம்புடுத்தவவனியிற்றிருவிழாப்போற்
சூழ்ந்தனரதிசயித்துத்துதித்தனர்நினைத்ததெய்தி
வாழ்ந்தனர்போலவுள்ளமகிழ்ச்சியின்மூழ்கினாரே.

(இ - ள்) அப்பனமரத்திலிருந்து பூமியில் விழுந்த பழங்களைப்பார்த்தார்கள்; ஆச்சரியத்தால் மெய்ம்மறந்து பரவசமானார்கள். கடல் சூழ்ந்த இவ்வுலகில் திருவிழாவுக்கு வருவதுபோல் திரண்டு வந்த ஜனங்கள் வியப்படைந்து புகழ்ந்து, இச்சித்த பொருள் கிடைக்கப்பெற்றவர்களைப்போல, மனதில் அளவற்ற சந்தோஷம் அடைந்தார்கள். எ-று. (௬0)

அரசரேபெரியோரென்பாரவ்வையேதெய்வமென்பார்
பரசுறுமிடைச்சியெய்தும்பாக்கியம்பாருமென்பார்
விரைசெறிகமலக்கோயின்மெல்லியலிடைப்பெண்ணான
வுருவென்பார்பனையைப்பார்த்தேயுருகுவார்வணங்கிநிற்பார்.

(இ - ள்) சிலர் இம்மன்னர்களே மகான்களென்று சொல்வார்கள். சிலர் ஔவையே பிரத்தியக்ஷதெய்வமென்று கூறுவார்கள். சிலர் கீர்த்திபெற்ற இவ்விடைச்சியடைந்த செல்வத்தைப்பாருங்களென்று மொழிவார்கள். வாசனை பொருந்திய தாமரை மலரில் வாழும் இலட்சுமியே இவ்விடைச்சியாய் அவதரித்தாளென்று சிலர் சொல்வார்கள். சிலர் பனமரத்தைப்பார்த்து மனமுருகிப்பணிவார்கள். எ-று. (௬௧)

ஔவைதன்கான்மேல்வீழ்வாரரசர்தாள்சென்னிசேர்ப்பார்
கொவ்வைவாயிடைச்சிதாளில்வீழ்ந்துகும்பிட்டுநிற்பார்
தெய்வமிங்கில்லையென்பார்வாய்திறவாதபித்தம்
பொய்யிதுமாப்பேயன்றேபுகழ்பனையிதுமாப்பென்பார்.

(இ - ள்) சிலர் ஔவையாருடைய திருவடிகளில் விழுந்து கும்பிடுவார்கள். சிலர் மூவேந்தர்களுடைய பாத தாமரைகள் தமது முடியிற் பொருந்தும்படி பணிவார்கள். சிலர் கோவைகனிக்கொப்பான இதழையுடைய இடைச்சியின் திருவடிகளுக்குத் தெண்டனிடுவார்கள். சிலர் இவர்களைத்தவிர வேறு தெய்வமில்லை யென்பார்கள். வாய் திறவாத வுன்மத்தம் பொய்யான மகிழ்ச்சியால் வந்ததல்ல. யாவரும் புகழும்படியான பனமரத்தைப்பார்த்ததினால் வந்த பெருமகிழ்ச்சியினால் என்று சொல்வார்கள். எ-று. (சுஉ)

முடிபுனைதெய்வமன்னர்மூவருமொருங்கெழுந்தே
யுடைதிரைகடனமுழக்காய்ப்பல்லியவோதையாப்பக்
கடிமணப்பந்தற்காலைக்கன்னிக்குமறுகிட்டார்கள்
வடிவதாய்க்கனகத்தாலிமாதுக்குப்புனைவித்தார்கள்.

(இ - ள்) கிரீடங்களைத் தரித்த தெய்வத்தன்மையுள்ள மூன்றரசர்களும் ஒன்றாகப்புறப்பட்டு வந்து, மோதுகின்ற அலைவாய்ந்த கடலின் ஆரவாரத்தைப் போலப்பலவாத்தியங்கள் முழங்க, அழகு பொருந்திய கலியாணப்பந்தலில் மணப்பெண்ணுக்கும் மாப்பிளைக்கும் சேஷை அரிசியிட்டு உருவமைக்கப் பெற்ற பொன்னாலாய மாங்கல்யத்தை மணமகளைக்கொண்டு மங்கைக்குத்தரிக்கச்செய்தார்கள். எ-று. (சுஙு)

குரும்பையங்கொம்மையொண்கட்குலவுதோடணிமுகத்துக்
கரும்பனையாளைநோக்கிக்காவலர்மணமுடித்தார்
குரும்பையங்கொம்மையொண்கட்குலவுதோடணிமுகத்துக்
கரும்பனையாளைநோக்கிக்காவலர்மணமுடித்தார்.

(பதவுரை) குலவு-விளங்குகின்ற, தோடு-பூவிதழ்களின் ஏடுகளையும், அம்-அழகிய, கொம்மை-திரட்சியுள்ள, குரும்பை-இளங்காய்களையும், அணி-ஆபரணமாகத்தரித்த, முகத்து உச்சியையும், ஒண்கண்-ஒளி பொருந்திய கணுக்களையும், கருமை-கறுத்த நிறத்தையும் உடைய, பனையாளை-பனமரத்தைச்செம்மையாக, நோக்கி-பார்த்து, கா-சோலையிலுள்ள, மணம்-வாசனை நிறைந்த அலர்-புஷ்பங்களினால்தொடுத்த, தார்-மாலைகளையும், முடி-கிரீடங்களையும்தரித்த, காவலர்-மூன்று அரசர்களும், குரும்பை-தென்னங்குரும்பைக்கொப்பான,

அம்-அழகிய, கொம்மை-தனங்களையும், ஒள்-பிரகாசமுள்ள, கண்-கண்களையும், தோடு-காதணியின், நிலவு-விளங்கும், அணி-அழகிய முகத்து-முகத்தையும் உடைய, கரும்பு-கரும்புக்கு, அனையாளை-ஒப்பான மொழியாளாகிய இடைப்பெண்ணை, நோக்கி-அன்புடன் பார்த்து, மணம்-திருக்கலியாணத்தை, முடித்தார்-சிறப்பாக முடித்தார்கள். எ-று. (கூச)

4-வது அடியில் அனையாள் என்பது அனையார் என்றானது ஒருமையிற் பன்மைவந்தவழுவமைதி. கொம்மை-ஆகுபெயர். 2-வது அடியில் பனை என்பது உயர்வுபற்றி ஆர் விகுதி பெற்றுப் பனையார் என நின்றது.

அந்தணர்பூரிதானத்தளப்பிலாநிதிபெற்றார்கள்
பைந்தமிழோர்கள்வேண்டும்பரிசெலாநிதியும்பெற்றார்
வந்தவாபசிகடீரச்சத்திரம்வழங்குவித்தா
ரிந்திரதருக்கனொப்பார்மணிமுத்தாற்றிருதீரத்தே.

(இ - ள்) கல்யாணவாசலில் செய்த பூரிதானத்தினால் பிராமணர்கள் அளவில்லாததிரவியத்தைப்பெற்றார்கள். செந்தமிழ்ப்புலவர்கள் தாங்கள்விரும்பிய வண்ணம் திரவியத்தை அடைந்தார்கள். கற்பக விருக்ஷத்தைப்போன்ற அரசர்கள், வந்த சனங்களுடைய பசி நீங்கும்படி திருமணிமுத்தா நதியின் இருகரையிலும் அன்னசத்திரங்களை ஏற்படுத்தி வழங்குவித்தார்கள். எ-று. (கூரு)

சீதனமாகமூன்றூர்கறவைமுன்செழிக்கச்செய்யும்
மாதனங்கோடியாடைவரிசைபூண்பலகொடுத்தார்
தாதியர்பலர்கள்சூழத்தண்டிகைவாசியீந்தார்
காதடர்கண்ணினாளைத்தங்கையாய்க்கருத்துள்வைத்தார்.

(இ - ள்) காதுகளுடன் போர்செய்யுங் கண்களையுடைய அந்தப்பெண்ணைத்தங்கள் தங்கையாக மனதிற்கொண்ட அரசர் மூவரும் மூன்று ஊர்களையும், கறவைப்பசுக்களையும், மிகவும் செழிக்கச்செய்யும்பெருஞ்செல்வத்தையும், பல வஸ்திராபரணங்களையும்,சீதனமாகக்கொடுத்துப் பல தாதிமார்கள் சூழ்ந்து வரும் பல்லக்குகளையும், குதிரைகளையும் கொடுத்தார்கள். எ-று. (கூகூ)

அவ்வையங்குரைத்தஞானவநுபவத்துள்ளந்தேறிச்
செவ்விநூற்றெளிவடைந்துகழிந்துசின்னாட்கள்செல்ல
ஐவகையெழுத்தாறீசனருளப்பாடவனிப்பேறு
மெய்யுண்மைமூவருக்கும்விளங்கவேயறிவித்திட்டாள்.

(இ - ள்) அவ்விடத்தில் ஔவையார் உபதேசித்த ஞானநுபவத்தால் அரசர் மூவரும் அறிவுமுதிர்ந்து நல்ல சாஸ்திரவிசாரணையால் தத்துவஞானம்

மடைந்து சிலநாள்கள் கழிந்து போகப்பின்பு சிவபெருமான் உலகத்தாருக்கு மெய்ச்செல்வமாகத்திருப்பஞ்சாட்சரநதியைக்கருணை கூர்ந்தளித்ததின் உண்மையைஅவ்வரசர் மூவருக்கும் விளங்கத்தெரிவித்தான். எ-று. (கூஎ)

இந்நதிவாசஞ்செய்தார்க்கியமனூர்வாசமில்லை
இந்நதிக்கண்மேவிட்டாலில்லைமேலினியோர்மெய்யு
மிந்நதிப்பஞ்சலிங்கந்தெரிசித்தாரொல்லாங்கண்டா
ரிந்நதிக்கொப்பாய்வேறுநதியிலையெனவுரைத்தாள்.

(இ - ள்) இந்தத்திருமணிமுத்தா நதி தீரத்தில் வாசஞ்செய்தவர்களுக்கு நரகப்பிராப்தியில்லை, இதில் ஸ்நானஞ் செய்தால் இனிமேலுண்டாகும் சரீரமில்லை. இந்நதி தீரத்தில் விளங்கும் பஞ்சலிங்கங்களைத் தெரிசித்தவர்கள் மற்றெல்லாலிங்கங்களையும் தெரிசித்தவர்களாவார்கள். ஆகையால இந்நதிக்கொப்பாக வேறு நதி யில்லையென்று ஔவைசொன்னாள். எ-று. (கூஅ)

தையல்பங்காளர்சேலத்தலமொடுமணிமுத்தாறு
மெய்யெனவெண்ணினார்கள்வெவ்வினையொழிப்பார்
பொய்யெனவெண்ணினோர்பொய்மையேயாமவர்க்கே
யையமிலவ்வைபாட்டாற்பனந்துண்டமதுவேதிட்டம்.

(இ - ள்) பார்வதி பங்களுகிய சிவபெருமான் வீற்றிருக்கும் சேலமென்னும் தலமும், திருமணிமுத்தாநதியும் உண்மையென்று எண்ணினவர்கள் கொடுமையான பாவத்தை நீக்கிக்கொள்வார்கள். பொய்யென்று நினைத்தாராயின் அவர்களுக்குப்பொய்யே யாகும். இதற்குச்சந்தேகமில்லை. ஔவையாருடைய பாட்டினால் பனந்துண்டுகள் எழுந்து மரமானதே சாக்ஷியாகும். எ-று. (கூகூ)

## வேறு.

சேரன்வளஞ்செய்நகராமாற்சேரபுரியென்ெருருநகரஞ்
சோர்வில்சோழனியற்றுதலாற்சோழபுரமென்ெருருநகரம்
வீரபாண்டியன்செயலால்வீரபாண்டியென்ேறாரூர்
தீரவாசம்பலர்செய்யச்செய்தார்மடங்களகரங்கள்.

(இ - ள்) சேராஜன் அமைத்த நகரமாகையால் சேரபுரி யென்கிற பெயரையுடைய நகரமும், தருமஞ்செய்வதில் தளர்ச்சியில்லாத சோழ ராஜன் ஸ்தாபித்தபடியால் உத்தமச்சோழபுரம் என்ெருரு நகரமும், வீரபாண்டிய ராஜன் உண்டாக்கியபடியால் வீரபாண்டி யென்னும் நகரமும் மடாலயங்களும் அக்

கிராமங்களும் பல வருணத்தார்களும் இந்நகரத்தில் வாசஞ்செய்யும்படி உண்டாக்கினார்கள். எ-று. (எ௰)

காலைநதியின்மூழ்கிச்செய்கடன்கள்கழித்துப்பட்டீச
ராலயத்தைவலம்புரிந்தேயன்பாயுருகிப்பணிந்துகொன்றை
மாலைமுடியார்புகழ்நாவில்வழுத்தியிருவரருட்காளாய்ச்
சாலவொருவன்சுந்தரனைச்சார்ந்தான்சேரன்றோழனென.

(இ-ள்) அதிகாலையில் எழுந்து திருமணிமுத்தாநதியில்ஸநாநம்செய்து, நித்தியகருமங்களைப்புரிந்து, சுகவனேசர் திருக்கோயிலைப்பிரதக்ஷிணம் செய்து அன்பினால் மனங்கரைந்து தொழுது வணங்கிக்கொன்றைமாலையணிந்த சிவபெருமான் புகழை, சோழராஜன, பாண்டியராஜன ஆகிய இருவரும் தமது நாவினால் போற்றுதல் செய்து, திருவருளைப்பெற்றார்கள். சேரராஜனாகிய மற்றொருவர் சுந்தரமூர்த்தி நாயனாருக்குத்தோழராக அவரை அடுத்துக் கொண்டார். எ-று. (எக)

பாவநாசப்பதிவாசம்பலித்தபலத்தானீறணிந்து
தேவதேவன்றிருநடனசிலம்பினோசைசெவிகேட்க
மேவுகாலமறிந்தபின்புவிமலர்க்கன்பாமடியாரைக்
கூவியுண்பதல்லாமற்கொள்ளாரனனந்தினந்தோறும்.

(இ-ள்) பாவநாசமென்னும் இப்பதியில் செய்த தலவாசத்தினாலடைந்த பிரயோசனத்தினால் திருவெண்ணீறு அணிந்து சிவபூசைசெய்யத்தொடங்கிச்சிவபெருமானுடைய ஆனந்த நிர்த்தனச்சிலம்பினோசையைச்செவியாரக்கேட்டுப் பூசைமுடித்துப்பரமசிவத்துக்கு அன்புசெய்யுந்திருத்தொண்டர்களை அழைத்து வந்து அமுதுபடைத்தபின் புசிப்பு எடுத்துக்கொள்வதேயல்லாமல தனியே ஒருநாளும் சாப்பிடமாட்டார். எ-று. (எஉ)

பனந்தார்மார்பன்பரமன்றாள்வழுத்துமதனாற்பலவுயிரு
நினைந்தேபேசும்பாடையெல்லாநெறியினுணர்ந்தானந்தாதி
புனைந்தானோர்மும்மணிக்கோவையாதியுலாப்பின்புனைந்தா
னனந்தாதரிக்குங்கங்கைமுடிநாதற்கடிமைத்திறமுதிர்ந்தான்.

(இ-ள்) பனம்பூந்தார் புரளுமார்பினராகிய சேரமான் பெருமாணாயனார் சிவபெருமான் திருவடிகளைப்பூசித்த தன்மையால், சீவகோடிகளெல்லாம் நினைத்துப்பேசுகிற எல்லாப்பாஷைகளையும் நின்றநிலையில் அறிந்து கொள்ளும தன்மையைப்பெற்றார். பொன்வண்ணத்தந்தாதி, மும்மணிக்கோவை, ஆதியுலா என்னும் பாமாலைகளைச்சூடி, ஆன்மகோடிகளைக்காக்கும் குளிர்ந்தகங்கை

யையணிந்த சடாமகுடத்தையுடைய நடராஜப்பெருமானுக்குத்தொண்டு செய்யும் தன்மையிற் சிறந்தவரானார். எ-று. (எங)

தேருஞானத்திடனுடனேசென்றுகயிலைக்கிரிமேவுஞ்
சீரினாவலூராளித்துணையாய்ச்செலவேசிந்தித்துப்
பாரின்விளங்கியேயோங்கும்பாவநாசப்பதியினிற்றன்
னீருநதியும்புனைந்தமுடிநித்தரருட்பார்த்திருந்திடுநாள்.

(இ - ள்) பெரியோர்கள் தேடும் சத்திய ஞானபலத்துடன் கயிலையங்கிரிக்குச்செல்லும் சிறப்புற்ற திருநாவலூர்க்குஅரசராகிய சுந்தரமூர்த்தி நாயனாரைத் துணையாகக்கொண்டு, அவருடன் கயிலாயகிரிக்குச்செல்லத்திருவருளைச்சிந்தித்துப்பூலோகத்தில் மிகுந்த மேன்மையோடு விளங்கும் பாவநாசபபதியில் குளிர்ந்த கங்கையையும், சந்திரனையும் சடையிற்றரித்த சிவபெருமான் திருவருளுக்கு எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். எ-று. (எச)

மலைநாட்டுள்ளோரமைச்சர்சிலர்வந்துவணங்கிமுறைநாக்கக்
கொலைநாட்டயிலாவருகவென்றுகூறியிரந்துவேண்டுதலுஞ்
சிலைநாட்டுமேபொற்கொடியானுஞ்சிவன்றாள்பணிந்துவிடைகொண்டு
நிலைநாட்டுஞ்சீர்க்குடதிசைக்குநிறையுமன்பாற்செலநினைந்தான்.

(இ - ள்) மலைநாட்டிலுள்ளவர்களும், மந்திரிகளிற் சிலரும் அங்கு வந்து வணக்கஞ்செய்து, பகைவரைக்கொல்லும் வேலையுடைய மகாராஜாவே! இராச்சியபரிபாலனஞ் செய்ய வாருங்களென்று சொல்லிப்பிரார்த்திக்க, வில் உருவம் நாட்டப்பெற்ற அழகிய கொடியையுடைய சேரமான்பெருமாணாயனார் சிவபெருமான் திருவடிகளைப்பணிந்து விடைபெற்றுக்கொண்டு குறைவில்லாத பெருமை வாய்ந்த மேற்றிசையை நோக்கி, ஆசையோடு செல்ல நினைத்தார். எ-று. (எரு)

## வேறு.

இவ்வவனிக்கண்வந்தகாயமுமிறந்திடாம
லவ்வைதான்கயிலைக்கேகுங்காலமுமறிவிற்கண்டாள்
செவ்வழிவண்டுபாடுஞ்செழும்பொழின்மணிமுத்தாற்றின்
மெய்வளர்நீரவாசம்புரிபலன்விளைவுபெற்றாள்.

(இ - ள்) இந்த வுலகத்தில் எடுத்த சரீரத்தோடு கயிலாயத்துக்குச்செல்லுங்காலத்தை ஔவை தனது அறிவில் உணர்ந்தாள். செவ்வழி என்னும் பண்

லேப்போல், வண்டுகள் பாடுகின்ற வளப்பமுள்ள சோலை சூழ்ந்த திருமணிமுத்தாநதி தீரத்தில் மெய்மையான தலவாசம் செய்த பிரயோசனத்தை இம்மையிற்றானே பெற்றான். எ-று. (எசு)

அரன்றரவாலயஞ்செய்செங்கலையாற்றிலிட்டு
விரிகுளத்திற்பொன்கொண்டார்கயிலைக்கேமேவுங்காலம்
பொருளையாற்றோனுஞ்செல்வன்றுணைக்கொடுபோகத்தானுந்
திருவுளத்தெண்ணினானாற்சேரன்பாற்சென்றுசொல்வான்.

(இ - ள்) சிவாலயப்பணிக்கு வைத்திருந்த செங்கல்லைச் சிவபெருமான் பொன் ஆக்கித்தர, அதை அவர் கட்டளைப்படியே விருத்தாசலத்தில் ஓடும் மணிமுத்தாற்றில் இட்டுத் திருவாரூர்க் கமலாலயம் என்னுந் திருக்குளத்தில் அந்தப் பொன்னாகவே எடுத்த சுந்தரமூர்த்திசுவாமி திருக்கைலாயத்திற்கு எழுந்தருளுஞ் சமயத்தில் தாமிரபருணியையுடைய சேரமான் பெருமானாயனாரும் எழுந்தருளுவார். அவர்களைத் துணையாகக்கொண்டு ஔவை தானும் திருக்கைலாயத்திற்குப்போகத் திருவுளத்தில் நினைத்துச் சேரமான்பெருமானாயனாரிடஞ் சென்று சொல்லலானாள். எ-று. (எஎ)

ஆதிதான்பகவற்கூடியளித்தனளெனையிவ்வூரி
னேதமில்செனனபூமியிதுமகாதலமேகண்டாய்
காதலாய்க்கஞ்சவெற்பிற்கருநெல்லிக்கனியைச்சித்த
சீதலாற்பெற்றான்சேலத்ததிகமானென்னும்வேந்தன்.

(இ - ள்) ஆதி யென்பவள் பகவனென்பவனோடுசேர்ந்து என்னை இத்தலத்திற்பெற்றாள். இது எனது செனனநாடு; அன்றியும் இது மகிமை தங்கிய தலமாம். இந்தச்சேலத்தில் அதிகமான் என்னும் அரசன் கஞ்சமலையிலுள்ளகருநெல்லிக்கனியை ஒரு சித்தர் கொடுக்கப்பெற்றான். எ-று. (எஅ)

அக்கனிதானுண்ணாதேயருளினாலெனக்கேயீந்தான்
மிக்கவிந்நாடுபோலவிளங்கியநாடுமுண்டோ
திக்குநின்போலும்வேந்தரில்லையாற்செய்தேன்வாச
மிக்கணநின்பாலொன்றுசொலவந்தேனிதுமறாதே.

(இ - ள்) அவ்வரசன் அப்பழத்தைத் தான் தின்னாமல் அன்பாய் எனக்கே கொடுத்தான். இந்த நாட்டைப்போல் கீர்த்திபெற்ற நாடு வேறு இல்லை. உன்னைப்போலும் சனங்களுக்கு ஆதரவு செய்யும் அரசர் வேறில்லை. ஆகையால்

இந்தத்தலத்தில் யான் வாசம் செய்தேன். இச்சமயம் உன்னிடத்தில் ஒரு வார்த்தை சொல்லவந்தேன்; இதைத்தடுக்காதே. எ-று. (எக)

பயில்புகழொற்றியூரிற்சங்கிலிபரவைகொண்கன்
கயிலைக்கேயேகுங்காலமணித்துனைக்கைவிட்டேகான்
மயலறுதுணைநீராகவருகின்றேன்கொடுபோகாயென்
றியையவேயவ்வைசொல்லவெதிர்மொழிசேரன்சொல்வான்.

(இ - ள்) புகழ்பெற்ற திருவொற்றியூரில் சங்கிலியையும், திருவாரூரில் பரவையையும் திருமணஞ்செய்து கொண்ட சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கயிலாயத்துக்கு எழுந்தருளும் சமயம் நெருங்கிவிட்டது. தோழனுகிய உன்னைக் கைவிட்டுப்போகமாட்டார். நீங்களே நல்ல துணைவர் ஆவீர்கள்; யானும் வருகிறேன்; என்னையும் கூட்டிக்கொண்டு போக வேண்டுமென்று ஔவையார் பொருத்தமாகச்சொல்ல, சேரமான் பெருமாளுயனுர் விடை சொல்லத்தொடங்கினுர். எ-று. (அ0)

## வேறு.

ஔவைநீதாயுன்சொல்மறேனருமையுடைத்துநெடுந்தூர
மெவ்வமுறுதியாநடந்துமுடியாதினிப்பாமென்மெலவே
பவ்வவாடைமருங்குடுத்தபாரில்வரல்போலன்றெனுவே
செவ்விதுரைத்துநில்லாதுசென்முன்விரைவின்மகிழ்சிறக்க.

(இ - ள்) ஔவையே! நீ யெனது தாய் போல்வாய்; ஆதலால் உனது வார்த்தையை மறக்கமாட்டேன்; ஆயினும் கைலைக்குச்செல்லும் வழி கஷ்டமானது; நீண்ட தூரமாயுமிருக்கிறது; நீ வருத்தமடைவாய்; நம்மால் நடந்து போக முடியாது; மெள்ள மெள்ளப்போனுலும் களைத்துப்போவோம். சமுத்திரத்தையலதிரமாக இடையிற்றரித்தவுலகத்தில் வழி நடப்பதுபோல் அல்லவென்று பொருத்தமாகச்சொலலிச் சேரமான் பெருமாளுயனுர் மனக்களிப்புடன் சீக்கிரமாகப்போய் விட்டார். எ-று. (அக)

கொந்துவிரியுமலர்ச்சோலைமலைநாட்டுள்ளகொடும்படைக்கை
மைந்தர்கலினவான்பரிகணமதநீராருவிக்குன்றங்கண்
முந்துநெருங்கியெதிர்கொள்ளமூதூர்திருவஞ்சைக்களத்திற்
சிந்தையுருகவந்தரனைவணங்கித்தெரிசித்துளங்களித்தான்.

(இ - ள்) மலர்ந்த மலர்க்கொத்துகளையுடைய சோலைகள் சூழ்ந்த மலைநாட்டியத்தில் கொடிய ஆயுதங்களைக்கையில் ஏந்திய ஆடவர்களும், கடிவாளம்பூட்

டிய சிறந்த குதிரைகளும், மும்மதங்களை அருவிபோல் ஒழுக்கா நின்ற மலை போன்ற யானைகளும், முன்னே நெருங்கி வந்து தம்மை எதிர்கொண்டழைக்கச் சேரமான்பெருமாளுயனுர் பழைய நகரமாகிய திருவஞ்சைக்களத்துக்கு வந்து அவ்விடத்தில் எழுந்தருளியிராநின்ற சிவபெருமானைத்தெரிசித்து மனதுருகத் துதித்து வணங்கிச் சந்தோஷம் அடைந்தார். எ-று. (அ௨)

உரிமையரசுகொடுங்கோளூர்க்குற்றபெருஞ்சேனைகள்சூழ்
விரிவுகடல்போலியமுழங்கவீதிபுகுந்துநகர்வலமாய்த்
திருவின்விளங்குமணிக்கோயிற்செம்பொறசிவிகைநின்றிழிந்தே
யரனைநினைந்தருவகையாயரியாசனத்திலமர்ந்தனனால்.

(இ - ள்) நால்வகைப்பெருஞ்சேனைகள் சூழவும், கடல் போல் வாத்தி யங்கள் முழங்கவும், சொந்தமான அரசு செய்யும் ராஜதானியாகிய கொடுங்கோளூர் வந்து, ராஜ வீதியிற் பிரவேசித்துப்பட்டணத்தைப்பிரதக்ஷிணம் செய்து, ஒளி மிகுந்த பொன்னால் அலங்கரித்த பல்லக்கை விட்டு இறங்கிச் செல்வம்திகழும் அழகிய அரணமனையிற் புகுந்து சிவபெருமான்திருவடிகளைத்தியானித்துச்சந்தோஷத்தோடு சிம்மாசனத்தில் வீற்றிருந்தார். எ-று. (அ௩)

அஞ்சலாகச்சைவமறையவரைநிறுவித்தினந்தோறு
மஞ்சுவடையறுமஞ்சனநீராட்டமணிமுத்தாநதிநீர்
விஞ்சுமன்பாற்றருவித்துவிளங்குங்கொடுங்கோளூர்த்தவத்தாற்
செஞ்சொலபாடிப்பரமனடித்திருத்தொண்டின்சீர்முறைநின்றான்.

(இ - ள்) பலவளங்களால் விளங்குந்திருக்கொடுங்கோளூரில் வீற்றிருக்கின்ற சிவபெருமானுக்குத் தினந்தோறும் திருமஞ்சன நீராட்டும் பொருட்டுச் சைவபிராமணாகளை அஞ்சலாக வைத்துத்திருமணிமுத்தாநதியிலிருந்து தெண்ணீர் தருவித்து அபிஷேகம் பண்ணித் தபோபலத்தால் செந்தமிழ்ப்பாடல் பாடிச் சிவபெருமான் திருவடிக்குரிய திருத்தொண்டின் சிறப்பான நெறியில சிறிதும் தவருது நிலைபெற்றிருந்தார். எ-று. (அ௪)

சுரருக்கரியவெண்ணெய்நல்லூர்தம்மைப்பாடென்னப்
பரிவிற்பித்தாவென்றெடுத்துப்பாடுஞ்சைவசிகாமணியார்
கருதித்துணைக்கொள்சேரலனைக்காணும்விருப்பாயாரூரி
லரனைப்பணிந்துவிடைகொண்டங்ககன்றூர்சென்றொருகொங்கில்.

(இ - ள்) தேவர்களும் தெரிசித்தற்கரிய திருவெண்ணெய் நல்லூரில் வீற்றிருக்கும் சிவபெருமான் தம்மைப்பாடும்படி கட்டளையிட, அன்போடு பித்தா

வென்றெடுத்துத்தேவாரம் ஓதிய சைவசமயாசாரியாராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் மதித்துத் தமக்கு நண்பராகக்கொண்ட சேரமான்பெருமாணயனாரைப் பார்க்க விருப்பங்கொண்டு திருவாரூரில சிவபெருமான் திருவடிகளை வணங்கி விடைபெற்று அப்பதியை விட்டுப் புறப்பட்டுக் கொங்குநாடு வந்து சேர்ந்தார். எ-று. (அரு)

ஆலைமுழக்கமள்ளர்வயலறையின்முழக்கமறைமுழக்கம்
வேலைமுழக்கஞ்சிலைக்காமன்வெற்றிமுழக்கமணஞ்செய்வார்
மாலைமுழக்கமுகிலென்னுமயிலின்முழக்கஞ்சிவன்கோயிற்
காலைமுழக்கமிகுபாவநாசநகரைக்கண்ணுற்றார்.

(இ-ள்) கரும்பாலையின் சத்தமும், வயலில் பள்ளர்களுடைய பறையொலியும், வேதகோஷ்டியும், தொழில புரிவோருடைய இரைச்சலும், கரும்புவில்லையுடைய மன்மதனுடைய வெற்றியோசையும், கல்யாணஞ் செய்வோர்களது வீடுகளில் மாலைப்பொழுதில் மிகுந்து விளங்கும் மஙகல வாத்திய முழக்கத்தை மேககர்ச்சனை யென்று கருதும் மயில்களின் ஆரவாரமும், சிவாலயத்தில் காலைப்பொழுதில் மிகுந்து விளங்கும் ஆடல் பாடல் முதலான கோஷ்டியும் விசேடமாகபபெற்ற பாவநாசமென்னும பதியைப்பார்த்தார். எ-று. (அசு)

வேறு.

தெண்டனிட்டெழுந்துநின்றுசிந்தையன்புபொங்கவே
மண்டுகாதலாகியேமரம்விலங்குபுட்குல
மெண்டிசாமுகங்களுமிலிங்கரூபமாகவே
கண்டுகண்களிப்படைந்துகயிலையென்னவுன்னினார்.

(இ-ள்) மனதில் அன்பு வெள்ளம்போல் பெருக நெருங்கிய ஆவலுடையவராய் மரங்களும், மிருகங்களும், பலவகைப்பக்ஷிகளும், எட்டுதிக்குப்புறங்களும் சிவலிங்க வடிவமாய் விளங்கக்கண்டு தெரிசித்துப் பணிந்து எழுந்துநின்று ஆனந்த மடைந்து, இத்தலம் கைலாயமென்று கருதினார். எ-று. (அஎ)

வண்டுகிண்டுமாலையோதிமாதரார்குருக்கண்மார்
தொண்டுசெய்யுமன்பாகற்றகருதியந்தணாளர்கள்
கொண்டல்போன்முழங்குபல்லியங்கறங்குகொள்கையா
யெண்டருடியெனறுவந்தெதிர்ந்துதான்வணங்கினார்.

(இ-ள்) வண்டுகள் கிண்டும் பூமாலையணிந்த கூந்தலையுடைய ஸ்திரிகளும், குருக்கள்மார்களும், அன்பு செய்யும் தொண்டர்களும், வேதாகமங்களைக்கற்

றணாந்த பிராமணர்களும், மேக கர்ச்சனையைப்போல ஒலிக்கும் பல வாத்திய முழக்கத்தோடு அந்தச் சுந்தரமூர்த்தி சுவாமிகளைச் சிவபெருமானாகப்பாவிக்குந் தன்மையுடையவராய் எதிர்கொண்டுவந்து அவரது திருவடிகளைப்பணிந்தார்கள். எ-று. (அஅ)

## வேறு.

கண்பனிருந்தவளஞ்செய்யுநதிவாசஞ்செய்நகரிதுவோ
பண்பினவன்பேரால்விளங்கும்பதியோவிதுவென்றகமகிழ்ந்து
வெண்மைபைங்கதிரோமுடிசூடும்விமலர்கோயிலுட்புகுந்து
வண்பவளச்செவ்வாய்மலர்ந்துபதிகம்பாடிவணங்கினார்.

(இ - ள்) தோழமை பூண்ட சேரமான் பெருமானாயனார் வளப்பத்தைத் தரும் பஞ்சாக்கரநதி நிரவாசம் செய்த திவ்வியஸ்தலம் இதுவோ? என்றும் அவரது பெயரால் செம்மையாக விளங்குந்திருப்பதி இதுவோ? என்றும் சொல்லி உள்ளத்திற் சந்தோஷமடைந்து, வெண்மையான குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரனைச்சடையில் தரித்த சிவபெருமான் ஆலயத்துள் சென்று நல்ல பவளம் போலும் சிவந்த திருவாய் மலர்ந்து தேவாரம் ஒதிப்பணிந்தார். எ-று. (அகூ)

"வேதமுறையிட்டறியாதவிமலர்கோயில்சூழ்நதியை
யாதிநதியென்பதுமறிந்தார்பஞ்சாக்கரநீரானதுவு
நீதியனந்தன்செய்வாவிநீருந்தலத்தின்மகிமையுங்கண்
டீதுபுவிக்கோர்கைலாயமிதுபோலில்லைதலமென்றார்.

(இ - ள்) இருக்கு முதலிய நான்கு வேதங்களும் முறையிட்டுக் காணக்கூடாத நிர்மல சொரூபியாகிய சிவபெருமான் வீற்றிருக்கும் ஆலயத்தைச் சூழ்ந்து ஓடுகின்ற மணிமுத்தா நதியானது பூர்வாதி யென்றும், ஸ்ரீபஞ்சாக்ஷரமே இந்நதி ரூபங்கொண்டதென்றும், திருவருளாலுணர்ந்து, நீதியுள்ள ஆதிசேடன் உண்டாக்கி வைத்த திருக்குளத்தையும், இப்பதியின் மகத்துவங்களையும் கண்டு, இது பூலோக கைலாயமென்றும், இதற்கொப்பாக வேறு தலம் இல்லையென்றும், சுந்தரமூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளினார். எ-று.(௯௦)

சேரராணைசெலுத்துகின்றதிறத்தின்மூதன்மைசிறந்தன்னோர்
சீரிணுதியர்கோன்வந்தாணடக்குஞ்சிறப்பெல்லாஞ்செய்தார்
காரின்விளங்குமலர்ச்சோலைகின்னைவனட்வாழ்கண்ணுதலை
யீரமனத்தால்வணங்கியேவிடைகொண்டப்பாலேகினரால்.

(இ - ள்) சேர ராஜன் கட்டளையின்படி நடந்தொழுகும் ஏவற்றன்மையில் மிகவுஞ் சிறந்த பேர்கள், கீர்த்திபெற்ற தங்கள் அரசன் வந்தால் நடத்தும் எல்லாச்சிறப்புகளையும் சுந்தர மூர்த்திசுவாமிகளுக்கும் செய்தார்கள். மேகஞ் சூழ்ந்த அழகிய சோலைகளையுடைய சுகவனத்தில் எழுந்தருளியிருக்கும் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானை அன்பு மிகுந்த மனதினால் விடைவணங்கி பெற்றுக்கொண்டு அந்த இடம் விட்டுப்புறப்பட்டார். எ-று. (௧௧)

கொங்கிலரனார்மகிழ்தலங்கள்பலவும்பாடிக்குலவுபிறைத்
திங்கண்முடியாரருள்விளங்கத்திருப்புக்கொளியூர்சென்றடைந்தார்
வெங்கராமுன்னுண்டபிள்ளைமீளவழைத்தார்தமிழ்பாடி
யங்குமகிழ்ந்துமலைநாட்டிலணைந்தார்நம்பியாரூரர்

(இ - ள்) கொங்கு நாட்டில் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலங்களில் போய்த் தேவாரம் ஓதி, மூன்றாம் பிறைச்சந்திரனைச்சடாமகுடத்திற்றரித்த சிவபிரான் திருவருள் விளங்கும்படி திருப்புக்கொளியூருக்குச்சென்று முதலையுண்ட பிள்ளை அம்முதலை வாயினின்று வரும்படி பதிகம் பாடி, அங்கு சில நாள் மகிழ்ச்சியோடிருந்து, பின்பு சுந்தரமூர்த்திசுவாமிகள் மலை நாட்டுக்குப் போயினார். எ-று. (௧௨)

சேரபெருமானெதிர்கொண்டுசிறந்ததிருவஞ்சைக்களத்து
நாரிபாகரருள்போற்றிநான்மஞ்சனநீராடியிங்கு
சார்வலென்றுகொடுங்கோளூர்ச்சார்ந்தான்கமஞ்சூற்புனற்றுளிக்குங்
கார்கொள்சோலைத்திருவஞ்சைக்களத்திலுறைந்தாராரூரர்.

(இ - ள்) சேரமான் பெருமானாயனார் சுந்தர மூர்த்தி சுவாமிகளை எதிர்கொண்டழைத்துத் திருவஞ்சைக்களத்துக்கு வந்து, அங்கு பார்வதி பங்கன் திருவருளைத்துதித்துத் திருமஞ்சனம் செய்துகொண்டு, இவ்விடத்திற்கு நான் வருகிறேன் என்று கொடுங்கோளூருக்குப்போனார். நிறைவான கருவுற்று நீர் ஒழுக்கும் மேகஞ் சூழ்ந்த சோலைகளையுடைய திருவஞ்சைக்களத்தில் சுந்தர மூர்த்தி சுவாமிகள் தங்கியிருந்தார். எ-று. (௧௩)

சுருதிக்கரியார்கயிலைமலைத்தூயகணநாதனைநோக்கி
விரைவிற்சென்றுசுந்தரனைவெள்ளையானைமீதேற்றிக்
கருதித்தருவீரென்னலுமேகணநாதருந்தாள்விடைகொண்டு
பரிவின்றிருவஞ்சைக்களமாம்பதியிற்பரமாலயமுன்.

(இ - ள்) வேதங்களும் காணுதற்கரிய சிவபெருமான் கைலாயகிரியிலிருக்கும் பரிசுத்தமான சிவகணத்தலைவர்களைப்பார்த்து நீங்கள் துரிதமாகப்போய் வெள்ளை யானையின் பேரில் வன்றொண்டனை ஏற்றிக்கொண்டு இங்கு அழைத்து வாருங்களென்று கட்டளையிடச் சிவகணத்தலைவர்கள் கைலாயபதியின் திருவடிகளைப்பணிந்து விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டு அன்புடன் திருவஞ்சைக்களத்தையடைந்து பரமசிவத்தின் திருக்கோயிலின் முன்பாக. எ-று. (கச)

வந்துபணிந்தார்கைலைக்கேவருதற்கருளப்பாடென்னச்
சுந்தரர்க்குக்கைகூப்பிச்சொல்லவெழுந்தார்சேரலனைச்
சிந்தைநினைந்தார்களிற்றெருத்தஞ்சேர்ந்தார்சிவனைத்துதித்துருகி
யந்தரத்திலெழுந்தேகவதனையறிந்தான்சேரவனும்.

(இ - ள்) வந்து வணங்கி, சுந்தரமூர்த்தி நாயனார்க்குமுன் கை குவித்து நின்றுதேவரீரைத் திருக்கைலாயத்துக்கழைத்து வரும்படி சிவபெருமான் கட்டளையிட்டிருக்கிறாரென்று விண்ணப்பம் செய்ய, வன்றொண்டர் உடனே எழுந்து சேரமான் பெருமாணாயனாரைத்திருவுளத்தில் நினைத்து அந்த வெள்ளை யானைமேலேறி மனமுருகச்சிவபெருமான் திருவருளைத்துதித்துகொண்டே ஆகாயமார்க்கமாக எழுந்தருள, அப்படி எழுந்தருளுவதைச்சேரமான் பெருமாணாயனாருந்தெரிந்துகொண்டார். எ-று. (கரு)

கவரிவீசச்சிலமாதர்கற்பகப்பூமழைபொழியத்
திவலைவாரிமுழக்கம்போற்சிலம்பவானத்துந்துமிக
ளுவமையில்லாக்கணநாதருபசாரங்கள்மிகக்கூறச்
சிவனதுலகம்வழிக்கொண்டுசென்றார்மகிழ்ந்துதிசைபோற்ற.

(இ - ள்) சில மாதர்கள் சாமரம்போடவும், தேவர்கள் கற்பகப்பூமாரி பொழியவும், வானதுந்துமிகள் கடலொலிபோல் முழங்கவும், ஒப்பில்லாத சிவகணத்தலைவர்கள் உபசாரவார்த்தைகள் சொல்லவும், எல்லாத்திசைகளும் போற்றும்படி சுந்தர மூர்த்தி சுவாமிகள் களிப்போடு திருக்கைலையை நோக்கிச்சென்றார். எ-று. (கசு)

மனத்தின்வேகக்கொய்சுவல்வார்மாவின்சேறலைவெழுத்தை
நினைத்துக்காதிலோதவுமேவிகரிவெள்ளையானைமுன்னே
யனைத்துமுணர்ந்தசுந்தரனாண்பர்வருகவென்றருள
வினைத்துன்பிம்வீழ்த்தேகுகின்றான்கைலைக்கிரிக்கேவில்லவனும்.

(இ - ள்) மனோவேகம் போலும் வேகத்தையும், கத்திரித்து நீண்ட பிடரி மயிரையுமுடைய குதிரை மேல் ஏறும்படி திருப்பஞ்சாட்சரத்தை அந்தக் குதிரையின் காதில் ஓதிய மாத்திரத்தில், அது தனக்கு நிகரில்லாத வெள்ளை யானைக்கு முன்னே சென்றது. எல்லாவற்றையும் உணர்ந்த சுந்தரமூர்த்திசுவாமிகள் அன்பரோ! வருக! என்று திருவாய் மலர்ந்தருள விற்கொடியுடையவராகிய சேரமான் பெருமாளுயனாரும் தமது பிறவித்துன்பங்கள் எல்லாவற்றையும் ஒழித்துத் திருக்கைலாயத்திற்குச் செல்லுகின்றார். எ-று. (கூ௯)

## வேறு.

பிறைமதிசூடும்வெள்ளைப்பிள்ளையார்திருமுன்பேசி
நிறைதருமன்பாலவ்வைநீடிருக்கைலைக்கேகச்
செறிதுணைநினைந்தேசேரன்செல்கின்றான்சுந்தரன்பின்
குறையறுவரமீதென்றுகும்பிட்டுக்கூறிநிற்க.

(இ - ள்) நீண்ட கைலாயத்திற்குப் போகத் தன்மனதில் நிறைந்த ஆவலோடு ஔவை இளம்பிறையணிந்த நிர்மலராகிய விநாயகர் சந்நிதானத்திற் சென்று சுவாமி! சேரமான் பெருமாளுயனார் தக்கதுணை யென்றெண்ணிச்சுந்தரமூர்த்திசுவாமிகள்பின் கைலாயத்திற்குப்போகின்றார் இதுவே அடியேன் குறையைத்தீர்க்கும் வரம் என்று கும்பிட்டு விண்ணப்பஞ்செய்து நிற்கையில், எ-று. (கூ௰)

முக்கண்மும்மதக்கணேசர்மொழிவருமுகையார்ப்பூசை
யிக்கணங்கொள்ளவுள்ளமெண்ணினேன்விருபபோதென்னத்
தக்கதாந்துணைமுந்திப்போமெனவவ்வைதனிக்கொம்புள்ள
மிக்கவர்சேரன்முன்னமுனைமேவுவிப்பேனென்ன

(இ - ள்) சொல்லுதற்கரிய பூமொட்டுகளைக்கொண்டு இந்த நிமிஷம்செய்யும் பூசையை யேற்றுக்கொள்ள நினைக்கிறேன். உன் இஷ்டம் என்ன? என்று மூன்று நேத்திரங்களையும், மும்மதங்களையும் உடைய யானைமுகக்கடவுள் திருவாய்மலர்ந்தருள, அதற்கு ஔவை தனக்குத்தகுதியான துணை முன்னதாய்ப் போய்விடுமென்று விண்ணப்பஞ்செய்ய, ஒற்றைக் கொம்புடைய விக்கினேச்சுரர், முன்னே செல்லும் சேர ராஜனுக்கு முன்னதாக உன்னைக்கைலாயத்தில் சேர்த்துவிடுகிறேன் என்று மறுமொழிசொன்னார். எ று (கூக)

எவ்வண்ணமேவுவிப்பாயெனவவ்வையியம்பச்சொல்வா
ரவ்வழியவர்க்குத்தூரமணித்தாகும்வழியொன்றுண்டு
தெய்வநேர்சுந்தரற்குஞ்சேரற்குமறிவொணாதாங்
கையின்கனிபோற்காட்டக்கடிதுசெய்பூசையென்று.

(இ - ள்) எந்த விதத்தினால் அவ்வாறு விரைவிற் சேர்ப்பீரென்று ஔவை கேட்க, அந்த வழி அவர்களுக்கு மிகவும் தூரமானது; மிகச்சமீபமான வழி ஒன்றுளது; அது தெய்வத்தன்மையுள்ள சுந்தரனுக்கும் சேரனுக்கும் தெரிய மாட்டாது; அதை யுனக்குயான் உள்ளங்கை நெல்லிக்கனி போல் காட்டுகி றேன்- நீ சீக்கிரத்தில் என்னைப்பூசிப்பாயென்று கணேசர் திருவாய் மலர்ந்து அருளினார். எ-று. (கoo)

அன்புளமுருகிப்பொங்கவபிடேகத்திரவியங்க
ளென்பலவையாவுந்தந்தேவிதிப்படியிசையும்வண்ண
முன்புறத்தூபதீபமொழிசந்தனுதிமாலை
யினபுறவெல்லாஞ்செய்தாள்நிவேத்தியமிலையச்செய்தாள்.

(இ - ள்) மனங்கரைந்து அன்புமிகுந்து அபிடேகஞ்செய்வதற்குரிய பொருள்கள் எல்லாவற்றையுஞ் சேகரித்து ஆகமத்திற்குறித்த விதிப்படி அபிடேகம் செய்து, பூம்பட்டாடைசாத்தி, சந்தனப்பொட்டிட்டு, பூமாலை சூட்டி, அர்ச்சித்துப் பின்பு தூப தீபங்கொடுத்து, சந்தோஷத்தோடு நிவேத்தியமும் செய்தாள். எ-று. (கoக)

வடவரையேடாகமருப்பெழுத்தாணியாகப்
படியுளோருய்யும்வண்ணம்பாரதம்பொறித்தாய்போற்றி
கடகரிமுகத்தாய்போற்றிகந்தற்குமூத்தாய்போற்றி
அடியனேன்றன்னையாளுமைங்கராபோற்றிபோற்றி.

(இ - ள்) மகமேருவே ஏடாகவும், கொம்பே எழுத்தாணியாகவும், இந்தப் பூலோகத்திலுள்ளவர்கள் பிழைக்கும்படிபாரதமென்னும் இதிகாசத்தைத்திருக் கரத்தாலெழுதிய தேவே! சரணம்; மும்மதங்களையுடைய யானைமுகக்கடவுளே! சரணம்; கந்தசாமிக்கு முன் அவதரித்த கணேசனே! சரணம்; நாயினேனையடிமையாககொண்ட ஐந்து கரங்களையுடையானே! சரணஞ் சரணம். எ-று.

மறைமுதலாகியீறாய்மன்னுயிர்க்குயிராய்வைகு
நிறைதருமூலமாகிநிரஞ்சனமாகிநின்றாய்
முறைபினெக்கருமமேனுமுன்னுனைச்சிந்தியாரோற்
குறையுறச்செய்வாய்முன்னிற்கொடுப்பைநீவரங்களெல்லாம்.

(இ - ள்) வேதத்துக்குமுதலாகியும், அந்தமாகியும், நிலைபெற்ற சகலவுயிர்களுக்கும் உயிராகியும், நிறைந்த மூலப்பொருளாகியும், பரிபூரணசொரூபமாகியும் விளங்குகின்றாய்! எந்தக்காரியத்தையும் முறைமையாக உன்னை முதலில்

தியானஞ்செய்யாமல் ஒருவர் தொடங்கினல் அது நிறைவெருமற்போகச் செய்வாய்! உன்னைச்சிந்திப்பவர்களுக்கு எல்லா வரங்களையும் முன்னின்று கொடுப்பாய்! எ-று. (கO௩)

மலைமகடிருமுலைப்பால்மணத்திடும்வாயாய்போற்றி
அலைவிடமுண்டோர்தம்மைவலம்வந்தாயருங்கனிக்கிவ்
வுலகிடையுள்குவார்தமுள்ளத்திலுறைவாய்போற்றி
நிலைபெறுவரங்கொள்வோர்கணினையமுன்னிற்பாய்போற்றி.

(இ - ள்) பார்வதியம்மையின் திருமுலைப்பால் மணம் வீசும் வாயையுடையோனே! சரணம்; திருப்பாற்கடலிலுண்டான விஷத்தை உண்டருளிய சிவபெருமானை மாங்கனியைப்பெறும்படி பிரதக்ஷணம் செய்தவனே! சரணம்; இப்பூவுலகத்தில் அன்போடு தியானிப்பவர்களுடைய மனதில் வாழ்பவனே! சரணம்; அழியாத வரங்களைப்பெறத்தக்க அன்பர்கள் நினைக்கும்போது எதிர்நிற்பவனே! சரணம். எ-று. (கOச)

என்னவேதுதிகள்கூறியிறைஞ்சியவெவ்வைதன்னைத்
தன்னொருதுதிக்கையாலேதடவியேநுனியிலேந்தி
யுன்னியகருமம்வேறொன்றுண்டெனிலோதுகென்ன
வென்னையேந்தியதிப்பாரோரறியுமாறினிதுசெய்வாய்.

(இ - ள்) இவ்விதமாகத்தோத்திரங்கள் சொல்லி வணங்கிய ஔவையை ஒப்பற்ற துதிக்கையினுல் தடவி நுனியில் தூக்கிக்கொண்டு நீ கோரும் காரியம் இன்னம் இருந்தால் சொல்? என்று கேட்கவும், என்னை உயரமாகத்தாங்கிப் பிடித்ததை இவவுலகத்தார் காணும்படி செய்தருளுவாய். எறு. (கO௫)

என்றலுமௌவைசொற்கேட்டினனருள்சுரந்துமென்மே
னன்றெனவலம்புரிக்கைக்கணேசனூர்நாமமாக
வின்றுதொட்டெவரும்போற்றவிக்கரமிருக்குங்கண்டாய்
பொன்றிகழ்பூவின்மாரிபொழிந்தனரிமையோரொல்லாம்

(இ - ள்) என்று ஔவை சொன்ன வார்த்தைகளைக்கேட்டு, மேலும் இனிமையானகருணை மிகுந்து உனதெண்ணம் போற்செய்கின்றேன்; வலம்புரிக்கைக்கணேசர் என்று எனக்கு நாமம் வழங்கும்படி இன்று முதலாக என்னுடைய இக்கரத்தில் வலம்புரிச்சங்கு விளங்கும். இதை நீ அறியக்கடவாய் என்று விநாயகர் திருவாய் மலர்ந்தருளத்தேவர்களெல்லாரும் பொன்போலப் பிரகாசிக்கும் பூமழை பொழிந்தார்கள். எ-று. (கO௬)

## வேறு.

கருணைநிறையுங்கடலனையகைம்மாமுகத்தோனவ்வையைக்கொண்
டருணநிறத்தன்றுதிக்கையாலண்டகோடிக்கப்பால்வெள்
வருணவரைக்கோபுரமுகப்புவாயில்வைக்கவருள்கொண்டா
டருணமாதுபாகன்வரைச்சாரற்சேரன்வரக்கண்டாள்.

(இ - ள்) கருணை நிறைந்த கடலுக்கொப்பாகிய யானைமுகக்கடவுள் மிகவுஞ் சிவந்த நிறமுள்ள தனது துதிக்கையினால் ஒளவையை ஏந்திச் சகல அண்டங்களுக்கும் அப்புறத்தில் விளங்கும் கைலைமலைக்கோபுரத் தலைவாசலில் வைக்கும்படியான அருளை ஒளவை பெற்றவளாய் இளமைப்பருவமுள்ள பார்வதிபங்களுகிய சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கயிலாய பர்வதத்துக்குச் சமீபமாகச் சேர ராஜன் வருவதைப்பார்த்தாள். எ-று. (௧0௭)

வாளார்செங்கைவில்லவர்கோன்வருகவென்னவில்லவனுந்
தாளால்வரமாட்டாயென்றேனெனக்குமுன்னேசார்ந்திருந்தாய்
கோளார்துணையார்வியப்பென்றுகுடகன்கூறவவ்வைசொல்வாள்
கேளாய்குதிரைக்குங்காதங்கிழவிக்குங்காதமென்றாள்.

(இ - ள்) சிவந்தகரத்தில் வாளாயுதத்தைத் தரித்தவில்லவருடைய அரசனே! வருக என்று ஒளவை சொல்ல, அவ்வேந்தன், நீ காலால் நடந்து வர முடியாதென்றுரைத்தேன், எனக்கு முந்தியே நீ இவ்விடம் வந்திருக்கிறாய். இது ஆச்சரியம்! வலிமையான துணை யார்! என்று சேரமான் பெருமாளுயனர் கேட்கவும், அரசே! நீ கேள் குதிரை சவாரி செய்து வந்த உனக்கும் காதவழி; கிழவியாகிய எனக்கும் காதவழி, என்று ஒளவை மறுமொழி சொன்னாள். எ-று. (௧0௮)

சிந்தாமணியினிரையொளிருந்திருக்கோபுரத்தின்வில்லவர்கோன்
வந்தான்றடையாய்நின்றிடலும்வள்ளலருளப்பாடதனால்
முந்தாதரவிற்றடுத்தாண்டமுறைமையெண்ணிவன்றொண்டர்
கொந்தார்கொன்றையணிந்தபிரான்கோயிற்புகுந்தார்திருமுன்பு.

(இ - ள்) சிந்தாமணியின் கூட்டம் ஒளி வீசும் திருக்கோபுரத்தருகில் சேர ராஜன் வந்து உள்ளே செல்லக்கூடாமல் நந்திதேவரால் தடுக்கப்பட்டு வெளியிலேயே இருந்திடவும், சிவபெருமான் திருவருளினால் முன்பு தன்னைத்தடுத்தாட்கொண்ட தன்மையை நினைந்துச் சுந்தரமூர்த்திநாயனார் கொத்துகளால்

அடர்ந்திருக்கும் கொன்றைமாலையைத்தரித்த பரமசிவம் எழுந்தருளியிருக்கும் ஆலயத்திற்குள் சென்று சந்நிதியிலிருந்து, எ-று. (கoக)

நயனமூன்றுங்கருங்களமுநகுவெண்டலையுமான்மழுவும்
பயிலுமணிப்பன்னகப்பூணும்பனிவெண்மதியுஞ்சடைமுடியு
மியலுங்கொன்றைநறுந்தாருட்படைத்துள்ளார்கணெண்ணிலரா
லயலதொருபாலெதிர்நின்றேயானைவாராவேங்கன்றொத்தார்.

(இ - ள்) மூன்று கண்களையும், கறுத்த கண்டத்தையும், தலைமாலையையும், மானையும், மழுவையும், மாணிக்கத்தையுச்சியிலுடைய சர்ப்பாபரணத்தையும், சீதளமும் வெண்மையுமான இளஞ் சந்திரனையும், சடைமுடியையும், வாசனை பொருந்திய கொன்றைமாலையையும், உடைய ருத்திரகணத்தவர்கள் கணக்கிட்டுச்சொல்ல முடியாதபடி அங்கிருந்ததைக்கண்டு, ஒரு பக்கமாக எதிர் நின்று பசுவைக்காணாத கன்றைப்போலிருந்தார். எ-று. (ககo)

விரைவாடங்கைமலர்கூப்பவீழ்ந்துவீழ்ந்துபணிந்தெழலு
மருவார்பதிகத்தமிழ்பாடவந்தாயோசுந்தராவென்று
திருவாய்மலரவாய்புதைத்துச்சேரன்வந்தான்விண்ணப்ப
மருளாயென்னவேன்வந்தானென்னவுலாவொன்றதகொணர்ந்தான்.

(இ - ள்) துரிதமாக அழகிய கைம்மலர்களைக் குவித்துச்சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிட்டு எழுந்து, புகழென்னும் வாசனை நிறைந்த தேவாரம் ஓதவும், "சுந்தராவந்தாயோ" என்று பரமசிவம் திருவாய் மலர்ந்தருள, வன்றொண்டர் மிகுந்த வணக்கத்தோடு வாயைக்கையினாற் பொத்திக்கொண்டு சேர ராஜனும் வந்திருக்கிறான்; உள்ளேவர உத்தரவாகவேண்டுமென்று விண்ணப்பம் செய்யச்சிவபெருமான் அவன் இங்கு வந்த காரணம் என்னவென்று கேட்க, உலா ஒன்றுகொண்டு வந்திருக்கிறான். என்று சொன்னார். எ-று. (ககக)

வருகவென்றுபெருங்கருணைவாரித்திருவாய்மலர்ந்திடலுந்
தருவைநிகர்க்கைச்சேரலனுந்தடையைநீங்கியுட்புகுந்து
திருமுன்பெய்திவீழ்ந்திறைஞ்சிச்சிந்தையன்புபெருக்கெடுத்தே
யுருகவ்டியேனுலாவொன்றுகொணர்ந்தேனென்னவோதுகின்றான்.

(இ - ள்) வரலாமென்று பெருங்கருணைத்தடங்கடலாகிய சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளக்கற்பக விருக்ஷத்தைப்போல் வரையாது கொடுக்கும் கரத்தையுடைய சேர ராஜன் நந்திதேவருடைய தடையினின்று நீங்கித்திருக்கோயிலுக்குள் வந்து சந்நிதியைக்கண்டு பணிந்துபோற்றி நாயினேன் உலா

வொன்று கொண்டேன்? என்று பத்திவெள்ளம் பெருகி மனம் உருகும்படி அதை வாசிக்கத்தொடங்கினார். எ-று. (ககஉ)

ஆதியுலாவையரங்கேற்றியருளைப்பெற்றேவிளங்குகண
நாதராஞ்சிவயோகநணைணியுலாவைதிருப்பிடவூ
ரோதுசாத்தனார்க்குதவியுலகத்திதனைவிளக்குமெனக்
கோதையார்தம்பெருமானுமகிழ்ந்தானுள்ளங்குளிரவே.

(இ-ள்) கோதை என்னும் நகரவாசிகளுக்குத் தலைவரான சேரமான் பெருமாளுயனார் தாம்பாடிய திருக்கைலாச ஞானவுலாவென்னும் ஆதி உலாவைச்சிவபெருமான சந்நிதானத்தில் அரங்கேற்றல் செய்து சிவானுக்கிரகம் பெற்றுவிளங்கும் கணங்களுக்குத்தலைவராகிச் சிவானுபவச்செல்வம் அடைந்து யாவரும் புகழ்ந்து பேசும் திருப்பிடவூர் சாத்தனாரிடத்தில் கொடுத்து இதை உலகத்தில் விளங்கச்செய்யும் என்று திருவுளம் குளிர்ந்து மகிழ்ந்திருந்தார். எ-று. (ககங)

ஆதலாலம்மணிமுத்தாநதியின்பெருமைக்களவில்லை
யோதமுடியாதோர்திவலையுற்றுலொருவனுடலத்திற்
பாதகங்கள்விட்டகலும்பரஞானத்தையுண்டாக்குங்
கோதையார்தம்பெருமானைக்கரியாய்வையங்கூறிடுமே.

(இ-ள்) ஆகையால் மணிமுத்தாநதியின் மகிமைக்கு அளவில்லை; அவைகளையெல்லாம் எடுத்துச்சொல்ல முடியாது; சுருக்கமாய்ச்சொல்லுமிடத்தில் அதின் ஒரு துளி சலத்தை யொருவன் தனது சரீரத்திற் படும்படி பெறுவானுனல் அது அவன் செய்த பாவம்யாவும் நீங்கப்பண்ணிச்சிவஞானத்தையடையும்படி செய்யும். இதற்குச்சாக்ஷியாகச் சேரமான் பெருமாளுயனுரைச்சான்றோர் எடுத்துச்சொல்லுவார்கள். எ-று. (ககச)

நதிதீரத்தில்வளர்சேலநகரின்வாசமருவியதால்
மதியக்குலத்துமன்னவனும்வரிகொள்வேங்கைக்கொடியானு
விதியின்முறையாலுடல்விட்டுமேலாம்பதமாம்பெறற்கரிய
கதியைப்பெற்றார்நதிமகிமைபுவிமேல்விளங்கக்காட்டியதே.

(இ-ள்) திருமணிமுத்தாநதிக்கரையிலுள்ள வளப்பமான சேலமா நகரில் வாசம் செய்த பயனாகச்சந்திரகுலத்தரசனாகிய வீரபாண்டிய ராஜனும் வரிகளுள்ள புலிக்கொடியுடைய உத்தமச்சோழ ராஜனும் விதியின் நியமப்படி சரீரநீங்கியபோது அடைவதற்கருமையான சிறந்த மோக்ஷ வின்பத்தைப்பெற்றார்

கள். அதனால் இந்தத்திருமணிமுத்தாநதி தன்பெருமையை இவ்வுலகத்தவர்களுக்கு நன்றாய் விளக்குகின்றது. எ-று. (ககஎ)

சங்கமகிழக்கிழிவீழத்தமிழைப்பாடுந்தெய்வவவ்வை
திங்கள்சூடிகோயிலிற்போய்த்திருமுன்பெய்தவெனையீன்ற
ளிங்குவருகவென்றுரைக்கவப்பாவந்தேனென்றுரைத்தே
அங்குமகிழ்ந்தோ[illegible]ணிந்திருந்தாளென்றுநந்தியருள்செய்தான்.

(இ-ள்) சங்கத்தார்கள் சந்தோஷப்படவும் பொன் முடிப்பு அறுந்து விழவும் தமிழ்ச்செய்யுள் பாடியருளிய தெய்வத்தன்மையுள்ள ஔவை பிறைச்சந்திரனைத்திருமுடியிற்றரித்த கைலாயபதியின் ஆலயத்துக்குட்புகுந்து சந்நிதியடைந்தவுடன் தேவதேவன் "அன்னையேவருக" என்று திருவாய் மலர்ந்தருள ஔவை சிவபெருமானைப்பார்த்து "அப்பா வந்தேன" என்று விண்ணப்பஞ்செய்து அவரது திருவடிகளை அன்போடு வணங்கி இன்புற்று வாழ்ந்திருந்தாள் என்று நந்திதேவர் சனற்குமாரனுக்கு அருளிச்செய்தார். எ-று. (ககஅ)

நந்திச்சருக்கம் முற்றிற்று.



# சரவதி சருக்கம்

முன்றையிம்மணிமுத்தமாநதிப்புனல்மூழ்குறலை
வந்தமாதொருசரவதிதன்கதைவகுப்பாய்
நந்தியெம்பெருமான்றிருவாயினனவில்வான்
பந்தமில்சனற்குமாரமாமுனிமுகம்பார்த்து.

(இ-ள்) பாசம் நீங்கிய சனற்குமார முனிவர் பூர்வம் இந்தத் திருமணி முத்தாநதியின் தீர்த்த விசேடம் பெற்ற சரவதி யென்னும் ஒரு பெண்ணின் சரித்திரத்தைச் சொல்லவேண்டுமென்று வினவத்திருநந்திதேவர் அம்முனிவர் முகம்பார்த்துச்சொல்லத்தொடங்கினர். எ-று. (க)

தாளதாமரையோதிமப்பார்ப்புணத்தாக்கும்
வாளைமீனிளங்கன்றெனமடிசுரப்பிரங்கி
நீள்வனச்சுனைமூலைதிறந்தொழுகுபாலிறைக்குங்
கோளின்மேதிசெய்குலவுகாம்பீலிநன்னாடு.

(இ-ள்) தண்டுகளையுடைய தாமரைமலரில் வாழும் அன்னப்பக்ஷிகளின் குஞ்சுகள் உண்ணும்படி மோதுகின்ற வாளைமீன்களைத்தமது கன்றுகளென்று மனமிரங்கிப்பாற்மடி சுரந்து, நீண்ட மூலைக்கண்ணிலுள்ள துவாரம் விரிந்து ஒழுகும் பாலைச்சிதறுகின்ற குற்றமில்லாத எருமைகள் திரியும் வயலகள் சூழ்ந்த காம்பீலியென்னும் சிறந்த நாடு ஒன்றுண்டு. எ-று. (உ)

அன்னநாட்டிடையருமறைக்குடியெனுமூதூர்
மன்னிவாழ்தருபுராந்தகனென்றொருமறையோன்
பன்னுகேள்வியின்புதல்வரைப்பெறாதுளம்பரிவாய்க்
கன்னிமாதினைப்பயந்தனன்கலைமதிகடுப்ப.

(இ-ள்) அந்த நாட்டில் அருமறைக்குடியென்னும் பழம் பதியில் நிலையாக வாழ்ந்த புராந்தகனென்னும் பிராமணன் சொல்லாநின்ற கல்வி, கேள்வி அறிவுள்ள புத்திரர்களைப்பெறாமல் மனவருத்தமுற்றுக்கலைகளையுடைய சந்திரனுக்கொப்பாக ஒரு பெண்பிள்ளையைப்பெற்றான். எ-று. (௩)

நாளினம்பிறைமதியெனவளர்ந்தனணங்கை
கேள்விகண்டவரழகுருக்காட்சியுங்கிடைத்தார்
நீளுநன்பெயர்சரவதியென்றிடநிலமேல்
வேள்படைக்கொருவிருதெனவிளங்கினள்பெதும்பை.

(இ - ள்) அந்தப்பெண் இளம்பிறைச்சந்திரனைப்போல வளர்ந்து வந்தாள், சோதிட நூலில் வல்லவர்கள் அப்பெண்குழந்தையின் அழகுள்ள வடிவத்தையும் பார்த்துப்புகழ்வாய்ந்த சாரவதியென்னும் நாமஞ்சூட்ட, அப்பெண் மன்மதனுடைய சேனைக்கு ஒரு விருதுக்கொடிபோல் விளங்கினாள். எ-று. (ச)

பருவமாகினபெதும்பைபயைப்பயந்தவர்பரிந்து
விரவிநாமுடித்தேமிலையென்றுளமெலிய
வருமறைக்குலச்சாரதியென்பவற்கன்றே
யுரியதன்மையோர்மணத்திறங்கூறவந்துற்றார்.

(இ - ள்) பெதும்பைப் பருவமடைந்த பெண்ணைப்பெற்ற தாய்தந்தையர் நாம் நமது உறவினரோடு கலந்து நமது பெண்ணுக்கு விவாகம் செய்வித்தோமில்லை யென்று மனம் வருந்திவாடும் சமயத்தில் அருமையான வேதியர் குலத்தில் பிறந்த சாரதி யென்பவனுக்கு உரியவர்கள் பெண்கேட்க வந்து சேர்ந்தார்கள். எ-று. (ரு)

ஆங்கவர்க்கதுநேர்ந்தனனவர்களுமகன்று
ரோங்குமன்றனுட்கூறியேவருகவென்றேலை
நீங்கருங்கிளைக்கெழுதியேவிடுத்தனர்நிலையை
தேங்குநெஞ்சினோர்மணவினைமுடித்தனர்சிறக்க.

(இ - ள்) அவ்விடத்தில் அவர்களுக்குத் தன் பெண்ணைக்கொடுக்கச்சம்மதித்தான். அவர்களும் தங்கள் ஊருக்குப்போய் உயர்ந்தசுபதினத்தில் நடக்கும் கலியாணத்திற்கு வருக என்று திருமுகம் அனுப்பி, உறவினரைவருவித்து, அறிவு நிறைந்த மனமுடையவர்களாகிய அந்தப்பிராமணர்கள் கலியாணத்தைச் சிறப்பாகச்செய்து முடித்தார்கள். எ-று. (சு)

பங்கயாசனத்திருமகள்பாரினிற்பிறந்து
தங்கும்வண்ணமோவுயிருடையோவியந்தானோ
கொங்கையேந்தியவற்புதக்கொடிகொலீதென்ன
மங்கைநல்லெழிலணிநலமுற்றியேவளர்ந்தாள்.

(இ - ள்) தாமரைக்கோவிலில் வீற்றிருக்கும் இலட்சுமிதேவி இந்த வுலகத்தில் அவதரித்திருக்குந்தன்மையோ? அல்லது உயிர் விளங்கப்பெற்ற சித்திரந்தானோ? அல்லது தனமென்னும் பூவைத்தாங்கிய ஆச்சரியமுள்ள வல்லிக்கொடியோ? என்று சொல்லும்படி, இப்பெண் நாளுக்கு நாள் நல்ல அழகுமிகுந்து வளர்ந்தாள். எ-று. (எ)

வேறு.

கூற்றினுடனேயொருபள்ளிக்கூடம்பழகிக்கொலைசெய்யு
மாற்றல்கற்றுக்கடைதுடிக்கதேயளகத்தளியின்விளையாடும்
போற்றும்வேதன்மதனரசுபோய்த்தானிறந்தவிருவைவேல்
தோற்றுவித்தேதன்னில்வைத்தான்போலுந்துணைக்கண்கள்.

(இ-ள்) மன்மதன் தன்னுடைய அரசாட்சியை இழந்துவிட்டான. அப போது முரிந்துபோன அவனுடைய கூர்மையான இரண்டு வேலாயுதங்களை அவனுக்கு வேண்டுமேயென்றுபசிந்து யாவரும் வணங்கும் பிரமதேவன் மீண் டுஞ் சிருட்டித்துத் தன் இருப்பிடமாகிய கமலக்கோவிலில் பத்திரப்படுத்தி வைத்ததுபோல் அந்தச்சரவதியின் முகமென்னுந் தாமரையில் விளங்குங்கண கள் ஒரே பள்ளிக்கூடத்தில் யமனுடன் சிநேகமாகிக்கொலைபுரியும் திறத் தைக்கற்று நுனிதுடித்துக்கூந்தலில் விளங்கும் வண்டுகளோடு விளையாடும். எ-று. (அ)

வலக்கண்வலசாரிகையாகவிடசாரிகையாய்வாமக்க
ணலைக்குவிருசாரிகையாகவகிலமழிக்குமென்றெண்ணி
நிலைக்கவயன்செய்தடைபினையேநெடுங்காதென்னவிசைத்தார்க
ளுலைந்துமேற்பாயாத்தடையைப்புருவக்கோடென்றுரைத்தார்கள்.

(இ-ள்) வேல்போலும் வலதுகண் வலப்பக்கமாகவும்,இடதுகண் இடப் பக்கமாகவும் வலசாரி இடசாரியாகப்பாய்ந்து, பூலோகத்தில் ஆடவர்களை நாச மாக்குமெனக்கருதி, அப்படிப்பாயாமற்றடுக்கும்படி பிரமதேவன் சிருட்டித்த தடைகளைக்கற்றோர்கள் நீண்ட செவிகளென்றும், மேற்புறம் பாயாத வண்ணஞ் செய்த தடையைபபுருவவரையென்றும் சொல்வார்கள். எ-று. (கூ)

கரியவழகாய்நெய்யுண்டுகட்டுண்டதனுல்நீண்டதனுற்
றிருவேயுறலான்மாலெனப்புள்ளேறிச்செழுந்தாரணிபடைத்து
விரிபூமேலாயயனென்னவேணியுற்றபிறைநுதடி
இருகூறுரியாவெனமூவரையுமொப்பாமெழிற்கூந்தல்.

(இ-ள்) அம்மடமங்கையின் சுந்தரமான கூந்தல் கறுத்து அழகாயிருத்த லினுலும், கறிய தைலம் பூசப்பெற்றுக்கட்டப்பட்டிருப்பதினுலும், நீண்டிருப்ப தினுலும், சிரீதேவியென்னும் தலைக்கோலம் பொருந்தியிருப்பதினுலும், (நீலமே கத்திருமேனியான அழகினராயிருப்பதினுலும், வெண்ணெய்யைத்திருடியுண்டு உரலில் கட்டப்பட்டிருப்பதினுலும், விஸ்வரூபம் எடுத்ததினுலும் சிரீதேவியைத்

நமது மார்பில் தரித்திருத்தலினாலும்) மகா விஷ்ணுவுக்கு நிகராகவும், வண்டுகள் தன்மேல் விளங்க வளப்பமுள்ள பூமாலையை அழகுபெறச்சூடியிருப்பதினாலும், மலர்ந்த உதிர் புஷ்பங்களைச்சொருகியிருப்பதினாலும் (அன்னவாகனரூடராய்ச்செழுமையான இப்பூவுலகத்தைச்சிருஷ்டித்துத் தாமரைக்கோவிலில் வீற்றிருத்தலினால்) பிரமாவுக்கு ஒப்பாகவும், சடையில் சந்திரபிறையென்னும் ஆபரணத்தை அணிந்திருப்பதினாலும், வாகிர் எடுத்து இரண்டு பிரிவாக விளங்குதலினாலும் (தமது சடாமகுடத்தில் பிறைச்சந்திரனைத்தரித்திருப்பதினாலும், அர்த்தநாரீஸ்வரகோலமாகப் பொலிவதினாலும்) சிவபெருமானுக்கு நிகராகவும் இருப்பதினால் திரிமூர்த்திகளுக்கும் ஒப்பாகும். எ-று. (௧௦)

இறுகித்திரண்டுபொருந்திளமியிடைமேற் கோபமடங்காமற்
கறுவிப்பருத்துக்கண்கறுத்துக்கச்சையறுத்துப்பணைத்து
நிறைபொற்குடத்தையிளநீரைநீரேசுமக்கவாதுவென்று
பொறையிற்செறிந்தணிபூண்டரித்திறுமாந்தனமுலைகள்.

(இ-ள்) அம்மங்கையின் கொங்கைகள் கெட்டியாய்த் திரண்டிருண்டு மார்பில் அகன்று மிருதுவாகி, இடுப்பின்மேல் கோபம் அடங்காதபடி மிகுந்து, விம்மி, காம்பு கறுத்துக்கட்டியிருக்கும் இரவிக்கையைக்கிழித்து, மிகுந்த காந்தியைப் பெற்றுப்பொன்னாலாயகுடத்தையும், இளநீரையும் ஜலத்தையே சுமக்கும்படி அடிமையாக்கின்றதைப்போலடர்ந்து விலையுயர்ந்த ஆபரணங்களைத்தரித்துப்பருத்து நிமிர்ந்தண்ணாந்து விளங்கின. எ-று. (௧௧)

எல்லாவுறுப்புமயன்படைத்தானிசைக்குமுவமைப்பொருள்களுண்டா
யில்லாதுவமைப்பொருளாயோருறுப்பேயியற்றவெண்ணினால்
வல்லானுமாற்றிருமேனிவடிவாவோயோருறுப்பை
யல்லார்மதிபோற்றிருமுகத்தாட்கருவாயமைத்தானமருங்குலென்றே.

(இ-ள்) நான்முகக்கடவுள் சரீரத்தினெல்லா அவயவங்களையும் சிருஷ்டித்தார்; அவைகளுக்கெல்லாம் ஒப்பு சொல்லுவதற்கு உவமானப்பொருள்களிருக்கிறபடியால் ஒப்புப்பொருளில்லாதபடி ஓரவயவத்தை உண்டாக்கும்படி நினைத்துப் படைப்புத்தொழிலில் வல்லவராகையால் இருளிற்றோன்றிய சந்திரனைப்போன்ற அழகிய முகத்தையுடைய அப்பெண்மணிக்குச்சரீரமேவில் இடையென்னும் ஒருறுப்பைப்பார்வைக்குத்தோன்றாத வண்ணம் அவ்வளவு நுட்பமானதாய்ச்சிருஷ்டித்தார். எ-று. (௧௨)

## வேறு.

விண்முகிற்குலநழுவிவீழ்மின்கொடியொன்றோ
கண்ணுருக்கொளுநல்லெழிற்கடலுறுகலையோ
பெண்ணுருக்கொளவருமமுதோவெனப்பெரிது
மண்ணும்விண்ணினுக்கதிகமென்றுலாதரகந்தாள்.

(இ - ள்) ஆகாயத்திற் சஞ்சரிக்கும் மேகக்கூட்டங்களினின்றும் நழுவி விழுந்த ஒரு மின்னற்கொடியோ? அல்லது கண்டோர் கண்ணைக்கவரும் நல்ல அழகென்னுங்கடலுக்கு ஒரு கலையோ? அல்லது பெண்வடிவமெடுத்துவந்த தேவாமிர்தமோ? என்று சொல்லும்படி பூலோகத்தாரையல்லாமல் தேவலோகத்தாரைப்பார்க்கிலும் சிறப்புற்றவளென்று மெச்சும்படி விளங்கினாள். எ-று

கருகுங்குலும்வெண்ணிறமெய்திடக்கருது
மருவுலாவியபூங்குழன்முதலியவனைப்புப்
புரியுமோர்சொலநினைப்பவரறிவிலர்புதுமை
தெரியுமாண்பினர்செப்பிடார்தனிநிகர்சிறப்பு.

(இ - ள்) கருமையான இருட்டும் வெளுத்து வெண்மையாம் என்று நினைக்கும்படி வாசனை நிறைந்த மலர்க்கூந்தல் முதலியவைகளின் அலங்காரத்துக்கு ஒப்பு சொல்லக்கருதுகிறவர்கள் அறிவில்லாதவர்களாம். அவற்றின் அழகை யுண்மையாயறிந்தவர்கள் அவைகள் தமக்குத்தாமே நிகராக விளங்குதலினால் அவற்றிற்கு உவமையில்லையென்று சொல்வார்கள். எ-று. (கச)

இன்னபேரெழில்வாய்ந்தமூவுலகினுமியைந்த
கன்னிமாதருட்கருஞ்செழுங்கயல்விழிமுகத்தா
டன்னைமேவியகாதலன்சாரதியென்போன்
மன்னுகற்பினளாமெனமகிழ்ந்தனன்மயங்கி.

(இ - ள்) சொர்க்க மத்திய பாதலமென்னும் மூன்று உலகத்திலும் உள்ள பெண்களில் இப்படிப்பட்ட பேரழகு பொருந்திய அழகிய மீன் போன்ற கண்களையுடைய முகத்தாளாகிய சரவதியை மணஞ்செய்து கொண்ட நாயகனாகிய சாரதியென்பவன் தனது மனைவியின் நடிப்பைக்கண்டு மயங்கி மிகுந்த கற்புடையவளென்று நினைத்துச்சந்தோஷப்பட்டான். எ-று. (கரு)

நாணமுற்படநாற்குணநீத்திடுமங்கை
பூணும்வெற்றிவேள்கன்னல்விற்குனித்தமர்பொருதும்
பாணநோயினாற்புணர்ந்தனள்படவலைவிசிறி
தோணிநீர்த்திரிமீன்பிடித்துண்பவன்றேன்கள்.

(இ-ள்) கற்புக்கு அங்கமாகிய நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு என்னும் நான்கு குணங்களையும் ஒழித்துவிட்ட சரவதி வெற்றியையே ஆபரணமாக அணியும் மன்மதன் கரும்புவில்லை வளைத்துச்சண்டை செய்யும் புஷ்பபாணங்களினாலடைந்த காமநோயினால் படகின்மேல் ஏறிப்படகேலை வீசித்தண்ணீரில் வாசம் செய்யும் மீன்பிடித்து உண்பவனாகிய செம்படவனோடு புணர்ச்சி செய்தாள். எ-று. (கசு)

கற்புநீங்கியதீவினைப்பழிதருகளவி
லற்பநெஞ்சினோர்வலையனைக்கூடியவவல
முற்றசிந்தையைவேட்டதன்கொழுநனதுள்ளந்
தெற்றுறுவகையியற்றினள்வஞ்சனைத்திறத்தாள்.

(இ-ள்) பதிவிரதாதர்மம் நீங்கிப்போகப்பழிபாவங்களைத்தரும் திருட்டுத்தனத்தால் அற்பபுத்தியால் ஒரு செம்படவனைப்புணர்ந்த அவலமான தன் எண்ணத்தைத்தன்னைக்கலியாணம் செய்த கணவன் அறியாதபடி மோசவகை செய்தாள். எ-று. (கஎ)

ஐயுறாவகைக்கணவன்மாட்டன்புகொண்டவள்போற்
பொய்யதாகியமொழிகளேற்பலபுகலுஞ்
செய்கையாதினிற்செல்லினுங்கணவனோர்சிறுநீர்
எய்தினும்முடனியான்வருவெனெனவியம்பும்.

(இ-ள்) கணவன் தன் பேரில் சந்தேகப்படாதவகையாய் அவனிடத்தில் அன்புள்ள கற்புடைய நாயகிபோல் பொய் வார்த்தைகளை அநேகமாகச் சொல்வாள்; தன் கணவன் யாதொரு காரியம் செய்யப்போனாலும் ஒன்றுக்குப் போனாலும் நான் உம்முடனே வருவேன் என்பாள். எ-று. (கஅ)

கணவன்சொல்லினைக்கடக்கரிதாகியகற்புய்
புணருமாதரார்பெருமையையாவரோபுகலவா
ரணையுறுத்திருவொன்றுளதோவவரெவரும்
பணியுஞ்செங்கதிர்மேற்றெறும்பொழுதுளம்பதைக்கும்.

(இ - ள்) மணஞ்செய்த கணவன் வார்த்தையைக்கடந்து நடவாத பதிவிர தாதர்மத்தைப்பாதுகாக்கும் ஸ்திரிகளுடைய சிறப்பை யார் அளவிட்டுச்சொல் வார்கள்? அவர்கள் அடையாத செல்வம் ஒன்றுண்டோ? அக்கற்புள்ள ஸ்திரி கள் யாவரும் வணங்கும் சூரிய கிரணம் அக்கணவர் மேனியிற்படும்பொழுது மனம்பதைப்பார்கள். எ-று. (கக)

எய்துதற்கரிதாகியகற்பினையெய்துந்
தையலார்குலம்விண்ணுலகிற்குடிதழைவர்
துய்யகற்பிலாதார்குலஞ்சுற்றமுந்தாமு
மையகோவெனநரகிடைக்குடியிருந்தழுவார்.

(இ - ள்) பெறுதற்கரிதாகிய பதிவிரததன்மையைப்பெற்ற திவ்யகுணமா தர்கள் தங்கள் குலத்தோடு சுவர்க்கத்தில சுகமாய் வாழ்வார்கள். குற்றமில்லா த கற்பு என்னும் குணத்தைப்பெறாத ஸ்திரிகளுடைய பந்துவர்க்கமும் தாங் களும் ஐயகோவென்று வருந்தும்படி நரகத்தையடைந்து அதை விட்டு நீங்கா மல் துக்கப்படுவார்கள். எ-று. (உ0)

என்னநூனெறிநினைந்திலனுழ்வினையினைச்சவா
லுன்றுநீக்களவொழுகியநாட்களிலோர்நாட்
பன்னுவேதியன்மனைவியும்வலையனும்பரிவாய்
நன்மனைப்புறத்தோன்றியேயயர்ந்ததுகண்டான்.

(இ - ள்) இவ்வண்ணஞ்சொல்லுகிறசாஸ்திரமார்க்கத்தைச்சற்றும்எண்ணா தவனாய்ப்பிராரத்த கருமத்துக்கீடாய் மனதார ஈனமான செய்கை புரிந்துவந்த நாள்களில் ஒரு நாள் சாரதி என்னும் பிராமணன் தனது மனைவியும் செம்பட வனும் அன்பாகத்தன் வீட்டின் ஒரு பக்கத்தில் சம்பந்தப்பட்டுச்சிரசவுல்லாச மாயிருந்ததைப்பார்த்தான். எ-று. (உக)

கண்டவன்றனைக்கண்டிலர்களித்தவர்க்கண்டே
கொண்டுமீண்டனனயலவன்றருகுறிகொண்டு
வண்டுபோன்முரல்கறுசுழலமனையிடைவந்நாள்
பண்டுபோற்சிலபயனமொழிபுகன்றனன்படிறாய்.

(இ - ள்) கண்டுகொண்ட பிராமணனை மதன லீலாவிநோதமாயிருந்தவர் கள் பார்க்கவில்லை. ஆயினுமவர்களை நேராய்க்கண்டு கொண்டு மறையவன் திரும்பிவந்து விட்டான். அன்னியனுகிய செம்படவனோடு புணர்ந்த அடை

யானத்தோடு வண்டுகள் கீதம்பாடும் வாசனை பொருந்திய கூந்தலையுடைய சரவதி வீட்டுக்குள் வந்து பழையமாதிரியாகவே வஞ்சனையாய்ச் சில பயன தரும வார்த்தைகளைச்சொன்னான். எ-று. (உஉ)

வந்தகாரிகைதன்னொடுபேசிலன்மறையோன்
சிந்தைவேறுகொண்டாளெனவுணர்தருஞ்செயலான்
முந்துகற்பிலாவஞ்சகியென்பதுமுன்னிப்
புந்திமேல்வெறுப்பெழுந்ததுகொழுந்துறபபொலிந்து.

(இ - ள்) இழிந்த காரியத்தைச்செய்து வந்த தன்மனைவியோடு வேதியன் சற்றும் பேசவில்லை. அன்னியன்பால்மனம் வைத்து விட்டாளென்று அறிந்ததினால் கற்பைப்பங்கஞ் செய்துகொண்டு செய்யாதவள்போல் கபட நாடகம நடிக்கும் வஞ்சகி யென்பதைச்சிந்தித்ததினால் தன்மனதில் அவள்மீதுகொண்ட அருவருப்பு கொழுந்து விட்டெழுந் தீயைப்போல் வளர்ந்தோங்கியது. எ-று.

இல்லவட்கவலக்குணமெய்திடிலவளை
யொல்லையிற்றுறந்தேவிடனூனெறியொழுக்கம்
புல்லுகாதன்மற்றோர்பொருட்டாலவட்புணரில்
வல்லதேசிகன்மனைவியைமருவினவழக்கால்.

(இ - ள்) கொண்ட பெண்சாதி இழி குணத்தையடைந்தால் அவளை யுடனே நீக்கி விடுதலே தருமசாஸ்திரம் கூறும் விதியாம். மற்றவர் சொல்லுக்குட்பட்டு அவளிடத்தில் திரும்பவு மிச்சைவைத்து அவளோடு சம்பந்தப் பட்டால் அது போதிக்குந்திறமையுடைய குருபத்தினியைச்சேர்ந்த பாவத்துக் கொப்பாகும். எ று. (உச)

இத்திறத்தினானெறியுணர்ந்தவனிழுக்காந்
தத்தைமென்மொழிவஞ்சகவஞ்சியைத்துறந்து
முத்தநீர்வயலங்கநாடடைந்துபூண்முலையாற்
பொய்த்தநுண்ணிடையோர்மடந்தையைமணம்புரிந்தான்.

(இ - ள்) இப்படிப்பட்ட காரணங்களினால் தருமசாஸ்திரநீதியை யறிந்தவனாகிய மறையவன் ஈனசெயலைப்புரிந்தவளும், கிளிக்கு நிகராகிய இனிய சொல்லையுடையவளும், கபடநாடகம் நடித்து வஞ்சித்து மோசஞ் செய்தவளுமாகிய மனைவியை நீக்கி, முத்துகள் செறிந்த சலம் நிறைந்த வயல்களையுடைய அங்க நாட்டையடைந்து, அழகிய தனங்களைத் தாங்கமுடியாதபடி அவ்வளவு சிறிய இடைவாய்ந்த வொரு பெண்ணை விவாகம் செய்து கொண்டான். எ-று.

உரியகாதலனீங்கிடச்சரவதியுவந்து
சரவுநாயகனதன்னுடனுறைதருகண்டு
புரியில்வேதியர்கன்னகரகற்றிடப்போந்து
வெருவியேயுழன்றிரந்தனள்பதிதொறுமிடியால்.

(இ - ள்) கொண்ட கணவன் போய் விட்டபடியால் சரவதி மனதிற் களிப்புடையவளாய்ச்சோர நாயகனாகிய வலையனோடுகூட வசிப்பதைப்பார்த்து அவ்வூரிலுள்ள பிராமணர்கள் அவளை அப்பதியை விட்டுப்போகும்படி துறத்தினபடியால அவள பயந்து அதை விட்டு நீங்கித்தரித்திரத்தையடைந்து பற்பல வூர்களிலும் அலைந்து திரிந்து யாசித்து வருந்தினள். எ-று. (உசு)

மிக்கபாவமும்புண்ணியவினைகளும்விரைந்து
தக்கவிம்மையில்வருமெனுநூனெறித்தகவாற்
றொக்கமிக்கதீவினையெலாஞ்செறுத்திடப்புழுவுங்
கக்குசோரியுமாய்ப்பெருநோய்கொடுகவன்றாள்.

(இ - ள்) மிகுதியாயொருவன் செய்த பாவகருமங்களும் புண்ணியச்செயல்களுந்துரிதமாக இந்தச்சென்மத்திலேயே அவற்றிற் கிசைந்த பலனைக்கொடுத்து விடுமென்கிற தருமசாஸ்திர வொழுக்கத்துக்குப் பொருத்தமாகச் சரவதி தானமானமிழந்து தேடியபாவங்களெல்லாம் வருத்த,அதனால் இரத்தங்கக்கிப் புழுவிழுந்த பெருத்த வியாதியை யடைந்து துன்பப்பட்டாள். எ-று. (உஎ)

அவலமுற்றியபாதகியணிநலமழியச்
சவலைநெஞ்சினன்காண்டலும்வெறுத்தவன்றணந்தா
னவிலுமூர்களிற்புகுதொணுதவன்மனமாற்றங்
கவலையுற்றுவெம்பசிகொடுகலங்கியேதிரிந்தாள்.

(இ - ள்) இழிந்த செயல் புரிந்த பாவியாகிய சரவதியின் மேனியழகு குலைந்ததைத்தளர்ந்த மனமுடைய வலையன் பார்த்து, அது முதல் அவளை வெறுத்து நீக்கி விட்டான். சொல்லாநின்ற பற்பல வூர்களிலும் செல்வதற்குக்கூடாதபடி மிகுந்த துர்நாற்றத்தைப்பெற்றவளாய்த்துக்கப்பட்டுக்கொடுமையான பசியினால் மனவருத்தமுற்று அலைந்து திரிந்தாள். எ-று. (உஅ)

பாதிமாதருட்யாவநாசத்தலப்பாமர்க்
காதிரைத்திருநாள்விழாக்கண்ணுறவங்கண்
போதுவாருடனெறியயற்கானிடைப்புகுந்து
தீதுநாற்றமெய்துயர்கொடுசென்றனடிகைத்து.

(இ-ள்) திருப்பாவனசபையிலே பார்வதி சமேதராய் வீற்றிருக்கும் கருணாநிதியாகிய சிவபெருமான் திருவாதிரைத்திருக்கல்யாண முதலிய உற்சவத்தைத்தரிசிக்கும்படி அத்தலத்திற்குச்செல்வாருடன் புறப்பட்டு, ஏதத காட்டினிடைப்பிரவேசித்துத் தீயநாற்றமுடைய சரீரத்தினால் தகைப்பட்டு மனங்கலங்கி வழி நடந்தாள். எ-று. (௨௯)

ஊறலைந்தனும்பனைசெழுமிற்கானவரடங்கிக்
கூறலின்றியெயந்துறைமுழையினைக்குறுகி
நாறுமேனியாள்கண்டனளாங்கவர்நணுகி
யூறுசெய்தனரவலறியாதுயிரொழிய.

(இ-ள்) வழிபறித்துச்சீவனம் செய்யும் பாவத்தொழிலையுடைய வேடர்கள் உரக்கப்பேசாமல் யாரும்காணாதபடி மறைந்து பதுங்கி வாழுமலைக்குகைக் குச்சமீபமாக வந்து தொழுநோயுற்றுத்துர்க்கந்தம் வீசப்பெற்ற சரீரத்தையுடைய சரவதி அவர்களைப்பார்த்தாள். உடனே அவர்கள் எழுந்துவந்து அவ்வனியர் அறியாதபடி அவளுக்குயிர் போகும்படி துன்பஞ்செய்தார்கள் எ-று

இருண்டமேனியாசெக்கர்வான்குஞ்சியரிரும்புத்
திரண்டதிண்கதைசுற்றியகையினாதெறுதீ
புரண்டெழுஞ்சுடர்க்கண்ணினார்கொடுமையேபுரிவா
ருருண்டவெண்பிறைப்பல்லினர்யமபுரத்துறைவோர்.

(இ-ள்) யமபுரத்தில் வசிப்பவர்கள் கருமையான சரீரம் உடையவராகியும், செவ்வானம் போன்ற சிவந்த குடுமியை உடையவராகியும், இரும்பினாற் செய்த திரண்டு பருத்த கதாயுதத்தைச்சுற்றுங் கைகள் உடையவராகியும், பலரை நாசஞ்செய்யும் அக்கினிப்பொறி மிகுந்துண்டாகும்கண்களை உடையவராகியும், தீமையே செய்பவராகியும், உருட்சியும் பிறைபோல வளைவுமுள்ள வெண்மையான பற்களை உடையவராகியும் இருப்பார்கள். எ-று. (௩௧)

இன்சொல்சொல்லுதலெவ்வண்ணமோவெனவறியா
வன்சொலாலழலுகக்கியவாயினர்மறலி
தனசொலாணையர்துதுவர்சரவதிதன்னை
முனசெய்தீங்கினாலிறுகுறயாத்தனாமுறுக.

(இ-ள்) இனிமையான வார்த்தைகளைச்சொல்லுதல் இம்மாதிரியென்று சற்றுமறியாதவர்களாயும், கடுமையான சொற்களைக்கூறுந்தன்மையால் நெருப்பைக்கக்கும் வாயையுடையவராயும், யமதருமராஜன் கட்டளையின்படி யமைந்து நடப்பவர்களாயுமுள்ள யமதூதர்கள் சரவதியை அவள் முனசெய்த

தவிளைக்குத் தெண்டனையாகத் தனைப்பபிம்படி நன்றாய் இறுக்கிக் கட்டினார் கள். எ-று. (கஉ)

கொண்டுபோயவர்கூற்றுவன்குரைகழல்வணங்க
மண்கொலனும்வடவைகட்கடைதொறும்வழங்க
விண்டுநோக்கிப்பேசித்திரகுத்தனைவிரைந்து
கண்டுநீரிவள்வினையெலாங்கழறுதியென்றான்.

(இ - ள்) யமதூதர்சரவதியை அப்படி கட்டி எடுத்துக்கொண்டு யமதரும ராஜனிடத்திற்கு வந்து அவரது மலர்ப்பதங்களை வணங்கி நிற்க, யமதரும ராஜன் வடவாக்கினிக்கு நிகராகிய நெருப்புப்பொறி கண் கடைகளினின்று பறக்கும்படி மிகுந்த கோபத்தோடு சித்திரகுத்தனைப் பார்த்து, இச்சரவதி செய்த பாவங்களையெல்லாம் கணக்குப்புத்தகத்தைப் பரிசோதித்துச் சீக்கிரத் தில் சொல்லும் என்று கட்டளையிட்டான். எ று. (கங)

ஐயவிங்கிவள்செய்திடுபாதகமனந்தஞ்
செய்யகற்பிலளேதிலான்றனைப்புணர்சிறுமி
மய்யலாகியேமீன்பிடித்துண்டிடும்வாயான்
வெய்யகூடசாலநரகழுந்துதல்விதியே.

(இ - ள்) தருமராஜாவே! இச்சரவதி செய்த பாவகருமங்கள் அநேகம்; சிறப்பைத்தரும் கற்பில்லாதவள்-காமவிகாரங்கொண்டு அந்நியனை மணஞ்செய்த கணவனல்லாத அன்னியனாகிய மீன் பிடித்துண்ணும் கயவனைப்புணர்ந்த அறிவிலி-ஆதலால் இவளைக்கொடுமையான கூடசாலமென்னும் நரகத்தில் தள்ளுதல் முறைமையாகும். எ-று. (கச)

என்னலுங்கனலெனவிடியிடித்தனம்வெகுண்டு
முன்னர்நின்றிடுகயத்தியையீர்த்துபபோய்முதிர்ந்த
வன்னியூசிகளேற்றியேமயிர்தொறும்வருத்தா
னின்னல்கூரழல்சுடப்பிணித்திடுநரகென்ன.

(இ - ள்) இந்தப்பிரகாரம் சித்திரகுத்தன் சொல்ல யமதருமராஜன் கோபங்கொண்டு நெருப்பிடிபோல ஆரவாரஞ்செய்து, எதிரிலிருந்த இழிந்த குணமுள்ள சரவதியை இழுத்துக்கொண்டு போய் நன்றாய் அக்கினியிற் காய்ந்த ஊசிகளை மயிர்க்கால்கள் தோறும் செலுத்தி வருத்தப்படுத்தி, துன்பத்தைத் தரும் அக்கினி அவளது சரீரத்தைச்சுடும்படி நரகத்தில் தள்ளி விடுக என்று கட்டளையிட, எ-று. (கரு)

வேறு.

முடித்தலையோடொடுசிதறமூளைக
ளடித்தனர்பாறையிலடிகள்பற்றியே
யிடித்தனருரலிலிட்டெண்ணெய்காய்ச்சியே
விடுத்தனருடலெலாம்விரிந்துவேகவே.

(இ - ள்) மயிர் கூர்ந்த தலையின் கபாலத்தோடு மூளைகள் சின்னாபின்னமாகும்படி அடித்தார்கள்; கால்களைப்பிடித்துத்தூக்கிப் பாறையில் தாக்கினார்கள்; இருப்புக்கொப்பரையில எண்ணெய் விட்டுக்காய்ச்சி, அவள் தேகம் வெந்து விரிந்துபோகும்படி அந்த எண்ணெய்க்கொப்பரையில் தூக்கிப்போட்டார்கள். எ-று. (௧௬)

செந்தழலுருகியசெம்பிலாண்மகன்
சுந்தரந்தழுவெனத்துயர்விளைத்தனர்
வெந்தகூருசிகள்விரலிலேற்றின
ரந்தவெந்துயாதனையறையபாலதோ.

(இ - ள்) நெருப்பில் உருகிய செம்பினால் அமைந்த அழகிய புருஷனைக் கட்டித்தழுவென்று அவளுக்குத்துன்பம் உண்டாக்கினார்கள். அக்கினியிற் காய்ச்சிய கூர்மையான ஊசிகளை அவளுடைய விரல்களில் ஏற்றினார்கள். இம்மாதிரி அச்சரவதி அவ்விடத்தில்அடைந்ததுன்பம் சொல்லிமுடியாது. எ-று. (௧௭)

முன்னுறுதீவினைமுற்றுஞ்சிந்தையாய்த்
தன்னுணர்வழிந்துயிர்சாம்பிச்சாற்றொணா
வின்னபல்வகைத்துயரெய்தினின்றன
ளன்னவைநிகழுறுமமைதிதன்னிலே.

(இ - ள்) சரவதிதான் முன்செய்த தீயகாரியங்கள் எல்லாவற்றையும் எண்ணித்தன் அறிவுகெட்டு உயிரவாட்டமடைந்துயாவராலும் சொல்லவொண்ணாத இத்தன்மையான பலவிதத்துன்பங்களை அடைந்திருந்தாள். அக்காரியங்கள் நடக்குஞ் சமயத்தில், எ-று. (௧௮)

காட்டிடையாறலைசெய்யுங்கானவர்
வீட்டிடவங்ஙனமழிந்தமெல்லுடல்
கூட்டினும்பறவைகள்கூர்கொடுண்டமே
மாட்டிவெண்ணீன்தசைவாய்மடுத்தன.

(இ - ள்) காட்டிலே வழிபறித்துண்ணும் வேடர்கள் கொல்ல, அவ்விடத்திலே அழிந்துபோன உடம்பைக்கூட்டமாய்க்கூடியுண்ணும் கூளி முதலிய

பட்சிகள் கூர்மையான மூக்கினால் கொத்தி வெண்மை மிகுந்த மாமிசத்தைப் பிடுங்கித்தின்றன. எ-று. (௩௯)

தசையெலாமொழிந்திடுதவளவெண்புசன்
வசைபடக்கிடத்தலும்வன்னுகிர்ச்சரண்
மிசையுறமிகுத்தவெண்கூரெயிற்றினு
னசையிலென்பெடுத்தொருஞமலிசென்றதே.

(இ-ள்) இவ்வாறு மாமிசமுற்றும் நீங்கிய வெண்மையின எலும்புகள் பலரும் நிந்தை சொல்லும்படி சிதறிக்கிடத்தலும், கூர்மையான நகங்கள் பொருந்திய கால்களினால் ஒரு நாயானது நன்றாய் மிகுத்த வெண்மையுங் கூர்மையுமான பற்களினால் அந்த எலும்புகளிலொன்றை ஆவலோடு கடித்துத்தூக்கிக் கொண்டு ஓடிற்று. எ-று. (௪0)

மடலவிழ்பாளையங்கமுகுவான்முடி
யடைநிழற்றண்டலையழகுமஞ்ஞைகள்
நடமிடுபெருவளப்பாவநாசநீத
தடநதியிடைவிடுத்தயலிற்சார்ந்ததே.

(இ-ள்) ஆகாயத்தையளாவி யிராநின்ற மடல் விரிந்த பாளைகள் தங்கிய அழகிய கமுகுவிருக்ஷங்களையும், நிழல்தரும் பூஞ்சோலைகளையும், மயில்கள் தோகை விரித்து நிர்த்தனஞ்செய்யும் மிகுந்த வளப்பத்தையுமுடைய திருப்பாவநாசப்பதியிற் பரவிச்செல்லும் பஞ்சாக்கரநதியினிடத்திற் போட்டு விட்டு அப்பாற்போய் விட்டது. எ-று. (௪௧)

அக்கணமருள்புரிந்தாலமுண்டவன்
மெய்க்கணநாதரைநோக்கிவெண்ணிசிக்
கிக்கணமெய்துறயமபுரத்திடைப்
புக்குநீர்தருதியென்றருள்புரிந்தனன்.

(இ-ள்) அந்தக்ஷணமே தேவர்கள் யாவரும் பிழைக்கக்கருணை செய்து ஆலகால விஷமுண்டருளிய பரமசிவம் சகல கண நாதர்களையும் பார்த்து, நீங்கள் இந்தக்ஷணமே யமலோகத்திற்குப்போய்ச்சரவதி என்பவன் கைலாசகிரிக்கு வந்து சேர அழைத்துக்கொண்டு வாருங்கள் என்று, திருவாய் மலர்ந்தருளினார். எ-று. (௪௨)

சாயிலுநல்லருளுடையதற்பர
நாயகனருள்கொடுநண்ணினாரவண்
பாயிருட்பிழம்பெறிபரிதிபோலொளிர்
மாயிருவிமானமவ்விடத்தில்வந்திட.

(இ - ள்) நம்மைப்பெற்று வளர்த்த தாயைக்காட்டிலும் இனிய அன்பை யுடைய தமக்குத்தாமே நிகரான சிவபெருமானுடைய அருளாக்கினையின்படி சிவகணத்தலைவர்கள் யமபுரிக்கு வந்தார்கள். பரவிய திரட்சியான இருளைப் போக்கும் சூரியனைப்போல் பிரகாசிக்கும் மிகவும் பெருமை தங்கிய விமான மும் அவ்விடத்துக்கு வந்து விட்டது. எ-று. (௪௩)

வந்தனரிகழ்ந்தனர்வைகுதூதரை
யுந்தினர்படைத்தலையூன்றக்கைமலர்த்
தந்தமெய்ந்நாம்விழவாயிற்றாக்கினு
ரிந்திரவிமானமேலிவளையேற்றினார்.

(இ - ள்) அவ்விடம் வந்த சிவகணத்தலைவர்கள் யமதூதர்களைத் தூஷித்து நிந்தித்தார்கள்; புறம்பில் தள்ளினார்கள், தங்கள் மலர் போன்ற கைகளில் ஏந்திய ஆயுதங்களால் அவர்கள் பற்களெல்லாம் விழும்படி வாயில் தாக்கினார் கள். பிறகு சாவித்திரியைத்தாங்கள் கொணர்ந்த இந்திரவிமானத்தின் மேலே ஏற்றினார்கள். எ-று. (௪௪)

கூற்றுவனதூதர்கள்கூட்டமாயினோர்
காற்றினுமனத்தினுங்கடிதினோடினார்
வீற்றுவீற்றுயமபுரத்தினவர்கெலாம்
மாற்றினரஞ்சியுமச்சமுற்றனர்.

(இ - ள்) யமதருமராஜனுடைய தூதர்களாகிய கூட்டங்கள் வாயுவைக் காட்டிலும் வேகமாய்ச்செல்லும் மனதைக்காட்டிலும் விரைவாக ஓடினார்கள். யமபுரத்தில் வேறு வேறாய் நானகு திக்குத்தெருக்களிலுமிருந்தவர்கள் அச்ச முற்றார்கள். எ-று. (௪௫)

ஆங்கவரோடினர்முறைமுறையென்றந்தன்
பூங்கழல்வணங்கினர்தருமம்பொய்த்ததே
யேங்கியெம்பாதகிவிமானமேறினா
டாங்கணநாதர்கடண்டித்தாரெமை.

(இ - ள்) அந்தத்தூதர்கள், பயந்துசென்று முறையோவென்று சொல்லி, யமதருமராஜனுடைய அழகிய பாதங்களை வணங்கி, தருமமார்க்கம் பொய்மை யாய் விட்டது; ஏனென்றால் பாவியாகிய சாவித்திரி விமானமேறினாள்; சிவகணத் தலைவர்கள் எங்களைத் தண்டித்தார்கள் என்று சொன்னார்கள். எ-று. (௪௬)

என்றுதான்கூறியேயிரங்கிநின்றனர்
வன்றெனக்கேட்டலுகலைகொண்டந்தகன்
புன்றொழிலால்வளர்புலைச்சியாயினு
ளென்கொலோசிவபுரத்தெய்துமாறென.

(இ - ள்) இவ்வாறு தூதர்கள் சொல்லி மனமெலிந்து நின்றார்கள்; யமதருமராஜன் அவர்கள் வசனத்தைக்கேட்டு, இது நலலதாயிருக்கிறது! என்று சொல லிச்சிரித்து, இழிந்த செய்கையால் சீவனஞ்செய்த அற்பத்தன்மை பொருந்திய சரவதி எவ்வாறு சிவலோலகத்துக்குபபோவாள்? என்று மொழிந்து எ-று, (சஎ)

எழுந்தனல்விழாவிளிவெங்கியந்தகன்
றழைழந்திடுசிவகணநாதர்தாணமிசை
விழுந்தெதிர்வணங்கினன்மெய்மைபொய்த்தது
கொழுந்தாய்த்தீவிளைவளர்ச்சிகொண்டதே.

(இ - ள்) எழுந்து சீக்கிரமாய் வந்த யமதருமராஜன் மேன்மை பொருந்திய சிவகணத்தலைவர் பாத தாமரைகளுக்கு நமஸ்காரஞ்செய்து சத்தியம அழிந்து விட்டது; பாவவினை கொழுந்துவிட்டு ஓங்கி வளர்ந்தது. எ-று. (சஅ)

பாவரேயியற்றியவலபாதகி
யூாவதுகளவினுஞ்செய்ததிர்கிலாள்
மேவியமரபினிறொழுக்கவிட்டவ
டாவியேநிலனையேதழுவுகள்ளியால்.

(இ - ள்) செய்யத்தகாத காரியங்களாகிய பாவகிருத்தியங்களையே செய்த இழிந்த தன்மையுள்ள பாவியாகிய சரவதி செய்யத்தகுந்தவைகளாகிய புண்ணிய கருமங்களைச் சொற்பனத்திலாவது செய்ததாய் உணர்ந்தவளல்ல; அன்றியும் தான் பிறந்த குலத்துக்கேற்ற ஆசாரங்களைக் கைவிட்டவள்; அல்லாமலும் அன்னியனுகிய வலையனை ஆசையோடு புணர்ந்த விபசாரி. எ-று. ஆல், அசை.

விழுங்கிடுநரகமேமீட்மெழ்ந்திடா
தழுங்கியேயிரவியுள்ளளவழுந்துவாள்
தொழுங்குலத்தோர்வசைசூழவந்தவட்
கெழுந்ததுவிமானமேதென்கொலென்றனன்.

(இ - ள்) இவள் செய்த இப்படிப்பட்ட பாவங்களுக்கு இவளை விழுங்கிய நரகம் மறுபடியும் இவளைவிட்டு விடாமல் சூரியன் இபபூலோகத்திலுள்ளளவும் வருந்தத்தக்கவள்; யாவரும் வணங்கத்தக்க பிராமணகுலத்தோர்களுடைய சா

பத்தோடு வந்தவளாகிய இச்சரவதிக்கு இப்போது விமானம் வந்த காரணம் யாதென யமதருமராஜன் வினவினான். எ-று. (௫௦)

மறவினையறமதாய்வரினும்வந்துறு
மறவினைப்பாவமானலும் மாய்விடும்
முறைமையாய்முடியினுமுடியுமித்திற
மிறைவனல்லாமன்மற்றியாரறிந்துளோர்.

(இ - ள்) பாவகாரியங்கள் புண்ணியகருமங்களாக வந்தாலும் வரும்; புண்ணியச்செயல்கள் பாவகிருத்தியங்களாக மாறினும் மாறும், பாவச்செய்கைகள் பாவமேயாகவும், புண்ணியச்செய்கைகள் புண்ணியமேயாகவும், இப்படி ஒழுங்காய் நேர்ந்தாலும் நேரும். இவவாறுகுமெனபதைச்சிவபெருமானன்றி வேறேயார் அறிவார்கள்? எ-று. (௫௧)

தொக்கவன்புளரிலரெனுந்தலைச்சிறை
மிக்கதந்தைதக்கொலைவீடுபெற்றிட
முக்கணர்தன்மையைமுனங்கூறினார்
தக்கனும்வேள்வியிற்றலையிழந்தனன்.

(இ - ள்) உள்ளன்பு உடையரா யினும் கேடுசெய்யினும் இலையென்றும் ஏதுவினால் சண்டேஸ்வர நாயனார் தமது பிதாவைக்கொன்று கொலைபாதகந் தாள் மோக்ஷம் அடையச்சிவபெருமான் முறைகாலத்தில் அருள் செய்தார்; தக்கனே யாகஞ்செய்து (அன்பில்லாமையால) தன் தலையை இழந்து விட்டான். எ-று. (௫௨)

பிரமநிச்சயமுறப்பேசினுமக்
கருமநிச்சயமுறக்கழறொணாததாற்
றருமமோபாவமோவொருவன்றன்வினை
யருமைதானுன்றனாலறியற்பாலதோ.

(இ - ள்) பிரமமென்னும் பொருள் உண்டென்று நிச்சயமாகச்சொன்ன போதிலும் ஒருவன் செய்த கருமம் நன்றென்றும் அன்றென்றும் வரையறுத்துக்கூற யாராலும் முடியாது. ஆகையால் ஒருவனுடைய கிருத்தியம் பாவமாமோ-புண்ணியமாமோ நிச்சயிப்பதற்கருமையான அவவிஷயம் உன்னால் அறியத்தக்கதாகுமோ? ஆகாது. எ-று. (௫௩)

பண்மொர்க்கண்டனைப்பற்றியேயுதைப்
புண்டுமறந்தனையுலகுள்ளோரெலாங்
கண்டினுமுரைத்தனர்கருதிலஞ்சவார்
விண்டிடக்கேட்டவர்வெருவிமாள்குவார்.

(இ - ள்) பூர்வகாலத்தில் மார்க்கண்டேய முனிவனைப் பாசக்கயிற்றால் இழுத்தபோது பரமசிவத்தாலுதைப்பட்ட தன்மையை மறந்து விட்டாய் போலும்; பூலோக வாசிகள் தாங்கள் கண்ட அக்காட்சியை இன்னமும் தலைமுறை தலைமுறையாகச்சொல்லி வருகிறார்கள்; அவ்விஷயத்தை நினைத்தாலும் பயப்படுவார்கள்; அதைச்சொல்லக்கேட்டவர்களும் திகிலடைந்து வருந்துவார்கள் எ-று. (௫௪)

இன்னம்நீயுயிருடனிருக்கவேண்டினன்
மன்னிபே யரன்பதமறந்திடாதிரு
வென்னவேகூறினர்விமானமேலுற
மின்னனுளைக்கொடுவிரைவினெய்தினர்.

(இ - ள்) இன்னமும் நீ உயிரோடிருக்க விரும்புவாயானால் எப்போதும்சிவபெருமானுடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்டிருக்கவேண்டுமென்று, யமதரும ராஜனுக்கு மறுமொழி சொன்ன சிவகணத்தலைவர்கள் மின்னலுக்கொப்பான பிரகாசவடிவுள்ள சரவதியை விமானத்திலேறச்செய்து, சீக்கிரமாகப்புறப்பட்டார்கள். எ-று. (௫௫)

அமரர்துந்துமிமுழுகடலின்றார்ப்புற
விமையவர்மாதரார்சிட்டச்சாமரை
சமனுலகிகழ்ந்துவெண்சசிகொள்செஞ்சடை
யுமையொருபங்கனுலகத்துய்த்தனர்.

(இ - ள்) தேவர்கள் சப்த சமுத்திரங்களின் கோஷ்டியைப்பார்க்கிலும் அதிகமாய் ஒலிக்கும்படி துந்துமிமுழங்கச்செய்யவும், தேவமாதர்கள் விலையுறுலைகவிட்டு சாமரைபோடவும், சிவகணத்தலைவர்கள சரவதியை வெண்மையான சந்திரன் விளங்குஞ் சிவந்த சடையுடைய உமாதேவியைத்தமது இடபாகத்தில் வைத்த சிவபெருமான் எழுந்தருளியிராநின்ற திருக்கயிலாசததிற் கொண்டுவந்து சேர்த்தார்கள். எ-று. (௫௬)

திளைத்தபாதகிதசைதின்றஞாளியொன்
றளித்திடுமென்புதானமணிமுத்தாற்றிடைக்
குளித்ததுசிவபுரமெய்துங்கொள்கையை
விளைத்ததென்றாலதின்வியப்பையென்சொல்வேன்.

(இ - ள்) மாண்டுபோன பாவியாகிய சரவதியின் பிரேத சரீரமாம்சத்தைத் தின்ற ஒரு நாயானது கொண்டு வந்து போட்ட அவளுடைய ஒரெலும்பானது திருமணிமுத்தாநதியில் நனையப்பெற்ற ஏதுவினால் அவள் சிவலோகத்தையடையுந்தன்மையையுண்டாக்கியது என்றால் அம்மகா நதியின் மகிமையை எவ்வாறு அளவிட்டுக்கூறுவேன். எ-று. (௫எ)

சரவதிசருக்கம் முற்றிற்று.

---

# தேனுச்சருக்கம்.

காதியென்றுலகுயிர்க்குக்கிளைகளுய்க்காவல்பூண்டோன்
மேதகுவரத்தாற்பெற்றகோசிகனென்னும்வேந்தன்
றீதகலவேட்டமாடக்கானத்திற்றிரிந்திளைத்து
மாதவவசிட்டன்சாலைவந்தவனடிவணங்கி.

(இ-ள்) அடைக்கலம் புகுந்தவரைக்காப்பதுபோல் பூலோகத்திலுள்ள சீவகோடிகளைப்பாதுகாத்த காதி ராஜன் தான் செய்த மேன்மையான தவத்தினாற்பெற்ற கௌசிகனென்னும் மன்னவன் குற்றமற்றவேட்டையாடக்காட்டிற் சென்று, அலைந்து திரிந்து, அலுத்துக்களைத்து, மகா தவசியாகிய வசிஷ்ட முனிவர் எழுந்தருளியிருக்கும் பன்னகத் தவச்சாலைக்கு வந்து அவரது திருவடிகளுக்குத்தெண்டனிட்டு, எ-று. (க)

போற்றியேநிற்கவேந்தன்வசிட்டனும்புகன்றமாற்ற
மேற்றனனுலகஞ்செங்கோலினிதினிங்காற்றுகின்றாய்
நாற்றிசைதிக்குங்கீர்த்திநல்லனீயாதலாலே
யாற்றலாய்நம்மிடத்திலுள்ளனவருந்தல்வேண்டுமே.

(இ-ள்) அரசன் வணங்கித்துதிசெய்து நின்று, வசிஷ்டமுனிவர் சொல்லிய ஆசீர்வாதங்களைப்பெற்றான். பின்பு அந்த வசிஷ்டர் அரசனை நோக்கி "நீ இந்த உலகத்தில் நன்மையுண்டாகச் செஙகோல் செலுத்துகிறாய்; நான்கு திசைகளில் உள்ளவாகள் புகழ்ந்து பேசும் கீர்த்தி வாய்ந்த நல்லவனாயிருக்கிறாய்; ஆதலால் வலியோனே! நம்மிடத்தில் உள்ளதை விருந்தாக உண்ணல் வேண்டும்''. எ-று. (உ)

என்னவம்முனிவன்கூறவெதிர்மொழியிசையச்சொல்வான்
றன்னியசேனைவெள்ளஞ்சூழ்ந்திடவேட்டம்வந்தே
னின்னனார்க்கிதுநீர்சொல்லினைவொத்துநேர்வதல்லா
லென்னனாரிசைவதன்றாலெனவிறைமறுத்துநின்றான்.

(இ-ள்) என்று அத்தவசிரேஷ்டர் சொல்லவும், அதற்குப்பொருத்தமாக அவ்வரசன் பதிலுரைக்கத்தொடங்கி, நெருங்கிய சேனைக்கூட்டம் சூழ்ந்து வரும்படி இவ்வனத்தில்வேட்டையாடவந்தேன். தம்மைப்போன்ற தவசிகளுக்குச்சாப்பிடுங்கள் என்று தாம் சொல்லவும், அவர்கள் மனப்பூர்த்தியாய்ச்சம்ம

திப்பதல்லாமல் என்னைப்போன்ற இராணுவஞ் சூழ்ந்த இராஜாக்கள் இணங்குவதில்லையென்று மறுத்துச்சொன்னான். எ-று. (௩)

உதிரமுண்டேன்சுவைத்தேயொளிதிகழ்மாலைவேலா
விதலைநீயுறுதசோர்கவென்னலுமிறைவனேர்ந்தான
விதிமுறைவிருந்துசெய்யவேட்டனயாவுமீய்க
கதுமெனவருகவென்றுகாமதேனுவைநினைந்தான்.

(இ-ள்) சத்துருக்களுடைய இரத்தத்தைக் குடித்துச் சதைசையைத்தின்று பிரகாசிக்கின்ற செவ்வானம் போற்சிவந்த வேலாயுதத்தையுடைய வேந்தனே! நமது சேனைகளுக்கெல்லாம் இவரெப்படி உபசரிப்பாரென்று மனதில் சந்தேகமென்னும் பெரிய வருத்தத்தை நீரடையாமல் சம்மதிக்கவேண்டுமென்று வசிஷ்ட முனிவர் சொல்லவும், கௌசிகராஜன் ஒத்துக்கொண்டான். அதன் மேல் முனிவர் அவர்களுக்குத்திருத்தமாக விருந்து செய்யவும், இச்சித்தபொருளைத்தக்ஷணங்கொடுக்கவும், "காமதேனுசீக்கிரம் வரக்கடவது" என்று திருவுளத்திற் சிந்தித்தார். எ-று. (௪)

வந்ததுகாமதேனுவதிட்டனைவணங்கிப்போற்றி
யெந்தைநீநினைத்ததென்கொலெப்பணிசெய்வதென்ன
முந்துமன்னவன்சேனைக்குவிருந்துநீமுடித்தபின்னை
யிந்திரன்பாற்செல்லென்னவிசைத்தனனெவர்க்குமேலோன்.

(இ-ள்) அக்கணமே காமதேனுவானது அவ்விடம் வந்து வசிஷ்ட முனிவரைப்பணிந்து துதித்து, எனதுபெருமானே! தாங்கள் நினைத்த காரியம்யாது? நான் செய்யவேண்டிய வேலை என்ன? என்று விண்ணப்பஞ் செய்யத்தவசிஞல் யாவருக்கும் மேலான அம்முனிவர் "இந்த இராஜாவுக்கும் இவருடைய இராணுவத்துக்கும் இப்போது விருந்துசெய்து பிறகு நீ தேவேந்திரனிடத்துக்குப் போ" என்று சொன்னார். எ-று. (௫)

நன்றெனச்சாலைப்பாங்கர்ஞாயிறுகாணியாக
நின்றிடவறைகளப்பானெடுமடைப்பள்ளியாக்கித்
துன்றியவாயில்காப்போர்தொழில்செய்வோர்பலர்களாக
மன்றமுமிருக்கச்சோதிமணிநிரைதூங்கநாற்றி.

(இ-ள்) நல்லதென்று சொல்லிக்காமதேனு அம்முனிவருடைய பன்னசாலைப்பக்கத்தில் சூரிய பூமியாக நிலைபெற்று விளங்கும்படி பல அறைகளும், அவற்றிற்கு அப்புறம் நீண்ட சமையல்அறையும் உண்டாக்கி, பலரிருக்க விசா

லமான இடமுள்ள பட்டசாலையும் அமைத்துப்பிரகாசம் பொருந்திய இரத்தின மாலைகள் தொங்கும்படி கட்டி வாசல்காவற்காரர்களும், ஏவலாளர்களுமாகப் பலரிருக்கச்செய்தது. எ-று. (சு)

ஏந்தல்பாற்சென்றழைக்கவெய்தினன்சேனைசூழப்
போந்துபோசனசாலைக்கேபுகுதலுமிருக்கப்பந்தி
பூந்தவிசிட்டேயங்கண்பொருகெனப்பரிமாறக்கை
வாய்ந்தவராயிரம்போவந்தவரெதிரேநின்றார்.

(இ-ள்) அரசனிடஞ்சென்று அமுதுண்ணவாருங்களென்று அழைத்தவுடன் அவ்வேந்தன் தனது சைனியத்துடன் எழுந்துவந்து, சாப்பிடுவதற்கமைத்தசாலையை அடைந்தபோது, அவ்விடத்தில் வரிசை வரிசையாய் அழகிய ஆசனம் போட்டுத்துரிதமாகப்பரிமாறுவதில கைதேர்ந்த அனேகம பேர் அவர்களுக்கு முன்பாக நின்றார்கள். எ-று. (எ)

ஆய்ந்தரிதெடுத்துக்கட்டுமரம்பையினிலைகொணர்ந்தே
வாய்நுனிடவரிந்தவாழைவலப்புறமாகப்போட்டுப்
போந்தநீர்தெளித்துச்செங்கைபொருந்துறவெடுத்தெடுத்து
நீந்திடவரியதாகுமறைகளினிலையிற்சென்றார்.

(இ-ள்) முடிவு காணுதற்கருமையான வேதமார்க்கத்தை அனுட்டிக்கும் பிராமணர்கள் திருத்தி அறுத்துக்கட்டிய வாழையிலைகளைக்கொண்டுவந்து, செம்மையாக அறுத்த பக்கம் உண்போருக்கு வலதுபுறத்திலிருக்கும்படியாய்ப்போட்டுச்சிவந்தகைகளினாலே பலமுறை யெடுத்தெடுத்து நீர்தெளித்து, எ-று. (அ)

வேறு.

கனியுநெய்யுங்கறிகளுமன்னமு
மினியதேனுமிவைமுதல்யாவுமே
நினைவிலன்னவர்யாதுநினைக்கினு
மனையதாய்ப்பரிமாறினரங்ஙனே.

(இ-ள்) முப்பழங்களும், பசுநெய்யும், பலவகைக்காய்கறிகளும், சாதமும் தித்திப்புள்ள தேனும், இன்னும் உணவுக்குரிய மற்ற எல்லாபதார்த்தங்களும் அவ்வரசன் முதலானவர்கள் தங்கள் மனதில் எதைக்கருதுகிறார்களோ அதை அப்போதே பரிமாறினார்கள். எ-று. (கூ)

கண்டகணசன்களித்திடநாசியுங்
கொண்டவாசங்குலாவிடவின்சொலாற்
றண்டகாதொநாவினுணர்வினால்
ரண்டுகையுமின்பாம்புலனைந்துமே.

(இ - ள்) விருந்தின் காட்சியைக்கண்ட கண்கள் மகிழ்ந்தன; மூக்கு நல்ல வாசனையைக்கிரகித்தது ; காது இனிமையான உபசாரவார்த்தைகளைக்கேட்டது ; நாக்கு அறுவகை ருசியை அறிந்தது ; இரண்டுகைகளும் பரிச சுகத்தை யுற்றன. இவ்வாறு ஐந்துபுலன்களும் ஆனந்தத்தை அடைந்தன. எ-று. (கo)

ஆசைதீரவருந்தியெழுந்தனர்
பூசினார்கைபுகழ்மணிமன்றமும்
நேசமாகநெடிதினிருந்தனர்
பேசினாரிவ்வதிசயப்பெற்றியே.

(இ - ள்) ஆசை தீருமபடி நன்றாகச்சாப்பிட்டு எழுந்து வந்து, அழகிய கைகளினால் புகழத்தக்க வாசனை வஸ்துக்களைப் பூசிக்கொண்டார்கள்; நட்பின் தன்மையாகவெகுநேரம் அவவிடத்திலிருந்து இந்தஅற்புதவிருந்தைக்குறித்துச் சந்தோஷமாகப்பேசினார்கள். எ-று. (கக)

தேக்கெறிந்துதிமிர்ந்தனர்சந்தனம்
பூக்கள்சூடினார்பொன்னிறவெற்றிலைப்
பாக்கருந்திப்பசுவின்செயலிதென்
றாக்கமார்கவுனினைந்தானரோ.

(இ - ள்) சந்தனத்தை மிகுதியாகவாரிப்பூசினார்கள்; குடுமிகளிலும், மார்புகளிலும் புஷ்பமாலைகளைத்தரித்தார்கள்; வெற்றிலைப்பாக்குப்போட்டுக்கொண்டார்கள்; நாமைன் அடைந்தஇந்தசுகங்களெல்லாம்காமதேனுவின்காரியமல்லவா? என்று சந்தோஷமாக மனதில அரசன் சிந்தித்தான். அரோ, அசைஎ-று. (கஉ)

அருந்தவன்பக்கலெய்தியரசனு
மருந்துபோலும்பசுவிதுமன்னர்பாற்
பொருந்திடிற்பயனல்லதுன்போலவ
ரிருந்திடிற்பயனென்னெனக்கீகுவாய்.

(இ - ள்) வசிஷ்டரிடஞ் சென்று அரசன் தேவாமிர்தத்துக்கொப்பாகிய தம்முடைய இந்தப்பசு அரசர்களிடத்திலிருந்தால் பிரயோசனமாகுமல்லாமல்

தங்களிடத்திலிருப்பதில் என்னஉபயோகம்? ஆதலால் அதை எனக்குக்கொடுத்து விடுமென்று சொன்னான். எ-று. (கங)

கொடுக்கிற்கொள்வல்கொடாவிடினுமகொள்வ
னெடுத்தனுள்ளமியைந்ததுசெப்பென
விடப்படாநசையுற்றுவிளம்பலு
நடுத்திறத்தனவசிட்டனவிளம்பான்.

(இ-ள்) கொடுத்தாலும் பெற்றுக்கொள்வேன்; கொடாவிட்டாலும்பிடுங்கிக்கொள்வேன், தமது மனதுக்குப்பொருத்தமானது எது? சொல்லுமென்று தள்ளக்கூடாத ஆசைகொண்டு கேட்கவும், தருமநெறி தவறாத வசிஷ்ட மகாமுனிவர் மறுமொழி சொல்லததொடங்கினார். எ-று. (கச)

வேறு.

விண்ணுலவுமதியுரிஞ்சுகுடுமிகொண்டவெற்பினிறகரிந்தகுலிசவேந்தன்
கண்ணினுலேவுமுறைசெய்துநிற்குங்கடலினிடையேபிறந்தகாமதேனு [வன்று
மண்ணுலகமன்னவர்பால்வருவதன்றால்மற்றொருவர்போவெனவழக்கன்றி
லெண்ணமுனதெவ்வண்ணமவ்வண்ணஞ்செய்யெனவுமேசீறிவிரைந்தெழுந்
[துபோனான்.

(இ-ள்) ஆகாயத்தைலதயளாவும் சந்திரன் தவழும் சிகரத்தையுடைய மலைகளின் சிறகுகளை நாசஞ்செய்த வச்சிராயுதத்தையுடைய தேவேந்திரன் கண்சாடையினால் கட்டளையிடுகின்ற கடமைகளைச்செய்து வருவதும் திருப்பாற்கடலில் அவதரித்ததுமான காமதேனுவானது இந்தப்பூமண்டலத்திலுள்ள இராஜாக்களிடத்திற்கு வரமாட்டாது. ஆதலால் அதனை அவ்வாறு அரசரிடம்போயிருவென்று ஒருவர் சொல்லுவது நியாயமல்ல. ஆனையாலுமது மனதிற் கருதிய எண்ணம்போல் செய்யலாமென்று சொல்லவும், கௌசிக ராஜன் கோபங்கொண்டு துரிதமாக எழுந்து போனான். எ-று. (கரு)

[லோ
கொடுவெனுகபசுவையென்றுகூறவேந்தன்கோற்றயிறுங்கண்ணிகளுங்கொண்டுபல்
ரிடமறவேவலைத்திடவும்பசுவுநோக்கியென்னையிவற்களித்தனையோவென்றுகேட்
கடமுனிவனுன்சொன்னதில்லையிங்குதன்வலியிற்பிடிக்கின்றானென்றுகூற [கத்
வுடன்மயிரைச்சிலிர்த்திடவும்பப்பரர்சோனகர்களொட்டியருமொருகோடியு
[தித்தெதிர்த்தார்.

(இ-ள்) காமதேனுவைப்பிடித்துக்கொண்டு வாருங்கள் என்று கௌசிக ராஜன் சொல்லவும், அனேகம்பேர் கோலும்,கயிறும்,வலையும் எடுத்துக்கொண்டு

வந்து அது தப்பி ஓடுவதற்கிடமில்லாதபடி அதனைச்சூழ்ந்து வளைத்துக்கொண்டபோது, அது வசிஷ்டமுனிவரைப்பார்த்து, தாங்கள் என்னை இந்த அரசனுக்குக்கொடுத்து விட்டீர்களோ வென்று கேட்க, அதற்கு அம்முனிவர் "நான் அப்படிச்சொன்னதில்லை. தனனுடைய சாமர்த்தியத்தைக்காட்டும்படி அரசன் பிடிக்கச்செய்கின்றான்," என்று மறுமொழி சொல்ல அதைக்கேட்ட அத்தெய்வப்பசு தன் சரீரத்தின உரோமங்களைச்சிலிர்த்திட அதனால் பப்பரர் என்றும், சோனகர் என்றும், ஒட்டியாகள் என்றும் சொல்லும்படியான பலகோடி வீரர்கள் தோன்றி அவ்வரசன் சேனையோடு சண்டை செய்தார்கள். எ-று. (கசு)

## வேறு.

வேலாயுதம்வாளாயுதம்வில்லாயுதம்விடவே
போலாயுதமொருகோடிகள்விட்டேபொருதனரால்
காலாயினவுடலாயினதலைபாணிகள்கண்ட
நாலாயினவலகைதிரணடமராடியகளமே.

(இ-ள்) காமதேனுவின் சேனுவீரர்கள் வேலாயுதங்களையும், வாளாயுதங்களையும், விலலாயுதங்களையும் விட்டார்கள். அவர்களைப்போலவே இராஜனுடைய போர் வீரர்களும் கணக்கில்லாத ஆயுதங்களைப்பிரயோகஞ்செய்து அந்த யுத்தகளத்தில் சணடை செய்து காலகளும், உடலகளும், தலைகளும், கைகளும் நானகு துண்டுங்களாய்க்கிடந்தன. அந்த யுத்தகளத்திலே பிசாசின் கூட்டங்கள் கூத்தாடின. ஆல, அசை. எ-று. (கஎ)

மிகுகோசிகனருள்பாலகர்விழியாலதுகண்டார்
தகுமாதவமுனிவஞ்சனைதானேயிதுவென்றே
யுகவேயுயர்முனிதன்னையொறுப்போமெனவேகிப்
புகுதீயுறுபுழுவாமெனமாய்ந்தேயுயிர்போனார்.

(இ-ள்) வல்லமை மிகுந்த கௌசிக ராஜனுடைய குமாரர்கள் தங்கள் கண்களினால் சண்டை முடிவைக்கணடு வசிஷ்ட முனிவருடைய மோசம் என்று எண்ணி அவருடைய வஞ்சனை யழியும்படி அவரைத்துன்பப்படுத்துவோம் என்று போய் அக்கினியில் விழுந்த புழுவைப்போல் மாணடு மடிந்து போனார்கள். எ-று. (கஅ)

அப்போததுகண்டானரசன்கண்ணனல்கக்க
மெய்ப்போதியகணையாயிரம்விட்டான்முனிமேலே
கைப்போதுறுதண்டொன்றெதிர்காட்டித்தனிதிறவத்
தப்பாதுறுகணையாவும்விழுங்கத்தனிகண்டான்.

(இ - ள்) அச்சமயத்தில் தனது குமாரர்களுக்கு நேரிட்ட ஆபத்தைக்கௌசிகராஜன் கண்டு தனது கண்களில் அக்கினி பொறி உண்டாகும்படி மிகுந்த கோபங்கொண்டு மந்திரம் உச்சரிக்கப்பெற்ற ஆயிரம்பாணங்களைவசிஷ்டமுனிவர் பேரில் செலுத்தினான். அவர் தமது தாமரை போன்ற கையில் வைத்திருந்த யோக தண்டத்தை எதிர் தோனறும்படி காட்டிவைக்க, அரசன் தான் குறிதப்பாமல் விடுத்தபாணங்களெல்லாவற்றையும் அது தன்பால அடக்கிக்கொண்டதைக்கண்டு ஆச்சரியப்பட்டான். எ று. (கக)

இமையாசலமீதிற்றவமெய்திச்சிவசத்தி
யமைவாமெனவாங்கிக்கொடுவெங்கோயதினிமாய்க்
கமைமாதவன்மேலேவிடல்கண்டேயுறவிழுங்கச்
சமையாதுபுரண்டேபொறிபொறியானதுதண்டே.

(இ - ள்) அவ்வரசன் இமயமா மலையின் பேரில வந்து தவஞ்செய்து சிவசக்தி பொருந்தியிருக்கிறதாகசசொல்லப்பட்ட ஒரு தண்டாயுதத்தை வரதினாற்பெற்றுக்கொண்டு வந்து மிகுந்த கோபத்தோடு சாந்த சீலரான வசிஷ்டமுனிவர் பேரில் அவரை நன்றாய்ப்பார்த்துப்படும்படி பிரயோகிக்கவும், விழுஙகினால் சீரணிக்கப்படாத அத்தண்டாயுதம் நொறுங்கித் துகளாயிற்று. எ-று.

கண்டானரசன்சிந்தைகலங்கித்தவமல்லா
லுண்டோவலியென்றேநினைனுயர்மாதவமுயல
விண்டேமுனிசொல்வான்விருந்திட்டேப்பகைதானே
கொண்டேனிதுநன்றென்றுகருத்தூடுகுறித்து.

(இ - ள்) கௌசிகவேந்தன் தான்தவத்தாற் பெற்றுக்கொண்டு வந்ததண்டு நொறுங்கிப்போனதைப்பார்த்து மனதில் திகில் அடைந்தவனாய் ஒருவனுக்குத் தபோபலமே பலமல்லாமல் வேறொன்றினால் பலமுண்டாகாதென்று அறிந்து பிரமரிஷியாகும்படி நினைந்து மேன்மையான தவஞ்செய்யும்படி புறப்பட்டுப் போனான். இது நிறக வசிஷ்ட முனிவர் அரசனுக்கு விருந்து செய்து அதினிமித்தமாகப்பகை வந்து பொருந்தியதே! இது நன்றாயிருக்கிறது! எ-று. (உக)

## வேறு.

கறபனைவளாககுநதாயாமருந்ததிகணவனுங்குப்
பற்பலமுனிவர்சூழப்பாவகாசத்தலத்தி
னற்பரிவுடனேபஞ்சாக்கரநதிநீரிலாடி
யற்பெகண்டன்றன்னையருச்சித்துப்பூசைசெய்தார்.

(இ-ள்) பதிவிரதமென்னுந்தருமத்தை விருத்திசெய்யும் எமது தாயாராகிய அருந்ததியின் மணவாளனாகிய வசிஷ்டமுனிவர் தம்மை அனேகதவமுனிவர்கள் சூழ்ந்து வரும்படி புறப்பட்டுத் திருப்பாவநாசப்பதியை அடைந்து, நலம் அன்போடு திருமணிமுத்தாநதியில் ஸ்நானஞ்செய்து ஆலகால விஷத்தையடக்கிய கண்டத்தையுடைய பரமசிவத்தின் திருவடிகளை யருச்சனை செய்து, பூசித்தார். எ-று. (உஉ)

பலபலபருவஞ்செல்லப்பலித்திடுந்தவத்தைநோக்கி
நிலவுலயததுளெங்குநிகரில்லையிவ்விடம்போற்
குலவுமிப்பதியிற்செய்தவொன்றொருகோடியாக
மலிதருஞானபூமியென்றுளமகிழ்ந்தான்மன்னோ.

(இ-ள்) இப்படி பலபருவகாலங்கள் செல்லத் தான்செய்துவந்த தவம் பலிதப்பட்டதைக்கண்டு, இப்பூதலத்தில் இந்தப்பதிக்கு ஒப்பான தலம் எங்குமில்லை; இந்த க்ஷேத்திரத்தில் செய்த ஒரு புண்ணியமானது கோடிபுண்ணியமாக வளரும் ஞானபூமி இதுவென்று வசிஷ்டமுனிவர் மனதிற் சந்தோஷம் அடைந்தார். மன்னோ, அசை. எ-று. (உங)

முன்மழையிங்குபெய்கமுன்விளைவிக்காடாக
நன்மையேவளர்கவென்றுநல்கியவரத்தால்வாழ்த்தி
மின்னிடையஞ்சக்கொங்கைவெற்பனப்பணைத்தேயோங்கும்
பொன்வல்லிபாகன்றனைப்பூசித்துப்போயினானால்.

(இ-ள்) முதலிற்பெய்யுமழை இந்தத்தலத்தில் பெய்யக்கடவது என்றும், முதல்மாருல் இந்தத் தேசத்திலுண்டாகக்கடவது என்றும், தருமமே ஓங்கிவளரக்கடவது என்றும், அவர் கொடுத்தவரத்தினால்வாழ்த்தி ஒளிமிகுந்த இடையஞ்சும்படி தனங்கள் மலையைப்போலடர்ந்தோங்கப்பெற்ற ஸ்ரீசுவர்ணாம்பிகையைத்தமது இடதுபாகத்தில் வைத்தருளிய சோமசுந்தரக்கடவுளைப்போற்றிப் பூசைசெய்து விடைபெற்றுக்கொண்டு போய்விட்டார். எ-று. (உச)

வளர்கலையீரெட்டானமதியெனமடியைத்தாங்கி
யுளமதுகசிந்துநோக்கியுருகியேயுவமையில்லாக்
களபமென்கொங்கைவல்லிபங்கலைக்கருத்திருத்தி
யளவில்சீர்பாவநாசப்பதியினிலடைந்துதேனு.

(இ-ள்) வளர்கின்றசோடச (பதினாறு) கலைகளைப்பெற்றசந்திரனைப்போல் தாவள்யமான பீடமடியை யுடையதாகி மனமுருகிச் சிந்தித்து இனி ஒப்பி

ல்லாத வாசனைச்சாந்து பூசப்பெற்ற தனத்தையுடைய செகதாம்பாளையிடதுபா கத்தில் வைத்தருளிய சிவபெருமானை மனதினால் தியானித்துக்காமதேனுவான து அளவில்லாத கீர்த்தியையுடைய திருப்பாவகாசத்தலம் வந்து சேர்ந்தது. எ-று.

பைப்பணியார்த்தகச்சைப்பண்ணவன்றிருமுன்பேகி
மெய்ப்பரிவுடனேமுக்கால்வலஞ்செய்துவிமலன்பாற்போ
யப்பணிமுடியின்மீதேயபிடேகமாட்டவெண்ணி
யொப்பிலாமுலைகணான்குமொழுகத்தீம்பாற்சுரந்தே.

(இ-ள்) விஷப்பையை யுடைய சர்ப்பாபரணந்தரித்த சிவபெருமான் சந் நிதியை யடைந்து, மெய்யன்போடு மூன்றுதரம் பிரதக்ஷணம் செய்து, நிர்மல சொரூபியாகிய சிவலிங்கப்பெருமானிடம் சென்று, கங்கையைத்தரித்த அவரது திருமுடியின்மேல் அபிஷேகஞ்செய்யநினைத்து, ஒப்பில்லாத தனது நான்குதன ங்களினால் மதுரமான பால் சுரந்து சொரிவதுபோல் ஒழுக்கியது. எ-று. (உசு)

அன்பினிற்பெருக்கமேயோவழுதினினேற்றமேயோ
வென்புநெக்குருகிப்பாலாயிறங்கியதீத்தமேயோ
முன்பயனன்னமாகித்தேடியுமுடிவுகாணு
தன்பெனுந்திருமுடிக்கேயபிடேகவழிபாடம்மா.

(இ-ள்) முற்காலத்தில் பிரமதேவன் அன்னப்பக்ஷிரூபமாகி ஆகாயத்தில் நெடுந்தூரம் பறந்து தேடியும் காணக்கூடாத சிவபெருமானுடைய திருமுடிக் குக்காமதேனு அன்பினாற் செய்த அபிடேக வந்தனையானது அக்காமதேனு ஈஸ்வரனிடத்தில் வைத்த அன்பின் மிகுதியோ? அல்லது பாலின் பெருக்கமோ? அல்லது அன்பினால் என்புகளும் நெக்கு நெக்குருகிப்பாலாகப்பெருகி வந்த வெள்ளமோ? யாம் அறிகிலோம். எ-று. (உஎ)

புந்தியினினைந்திரங்கும்போற்றிமெய்வணங்கும்பல்கா
லெந்தையென்றுருகிநிற்கவிலிங்கத்திலிறைவன்றோன்றி
முந்தவெவ்வினைகணீங்கிமுடிவினின்முத்தியெய்தத்
தந்தனமுனக்கேயென்றுசாற்றியேமறைந்துபோனான்.

(இ-ள்) அத்தெய்வப்பசுவானது புத்தியினால் தனது வினைகளைச்சிந்தித்து வருந்தும்; எமது பெருமானைப்பலதரம் துதித்துதிக்கும்; தொழுது வணங் கும்; எனது தந்தையே! என்று மனமிளகி நிற்கும்; அச்சமயத்தில் சிவபெரு மான் இலிங்க ரூபத்திலிருந்து காருண்யத்தால் வெளிப்பட்டு " நீ முன் செய்த

தீவினைகளெல்லாம் தீர்ந்தது; இந்தப்பிராரத்த சரீர நீக்கத்தில் மோக்ஷ சுகத்தைக்கொடுக்கின்றோம்" என்று திருவாக்களித்து அந்தரத்தானமாயினர் எ-று.

தேமலர்ச்சோலைசூழ்ந்திருப்பாவநாசம்வாழ்த்திப்
பூமழைசொரிந்தார்தேவர்துந்துமிபொங்கவோசை
பாமகள்கமலைபோற்றும்பணிவளைவல்லிபாகச்
சோமசேகரன்பொற்பாதந்துதித்தனர்முனிவரெல்லாம்.

(இ-ள்) தேன் துளிக்கும் புஷ்பங்கள் நிறைந்த சோலைகள் சூழப்பெற்ற திருப்பாவநாசப்பதியைப்போற்றித்தேவர் யாவரும் துந்துமியோசை முழங்கப் பூமாரியொழிந்தார்கள். சரஸ்வதியும் இலக்ஷ்மியும் துதிக்கின்ற பர்வத ராஜன் புத்திரியாகிய ஸ்ரீபார்வதியை இடதுபக்கதில் வைத்தருளிய சந்திரசேகரனாகிய சிவபிரானது பொன்போலும் அழகிய பாதங்களை ரிஷிகளெல்லோரும் போற்றி வணங்கினார்கள். எ-று. (உகூ)

துனியற்பூசையாற்பட்டீச்சரநகர்க்குப்பேரோ
பானிலாமுடிவைத்தோனும்பட்டீசனென்னுநாமந்
தானருளாற்புனைந்தான்றருந்திரேதாயுகத்தின்
ஞானமாநந்திசொன்னானல்வரிலொருவன்கேட்க.

(இ-ள்) தருதியான திரேதாயுகத்தில் பசுவினால் பூசை செய்யப்பட்ட தலமாகையால் இந்த நகரத்துக்குப்பட்டீச்சரம் என்றொரு பெயரும் வழங்கும்; தாவள்யமான சந்திரனைச்சடாமுடியிற்றரித்த இத்தலத்தில் எழுந்தருளிய பரமசிவம் பட்டீச்சரனென்னும் திருநாமத்தை மிகுந்த கிருபையோடு ஏற்றுக் கொண்டார்; என்று தக்ஷிணாமூர்த்தியின் கடாக்ஷவீக்ஷண்யம் பெற்ற நால்வரிலொருவராகிய சனற்குமார முனிவருக்கு நந்திதேவர் திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (௩௰)

தேனுச்சருக்கம் முற்றிற்று.



# அனந்தசருக்கம்.

இனையதாகியபதியிலுங்காதையொன்
றனையதுகேட்டிநீமாயையைம்புலன்
வினைகெடநோற்றிடும்விரதமாதவா
வெனவருணந்திதானிசைக்கலுற்றனன்.

(இ-ள்) மனமாயையும் அதனாலுண்டாய ஐம்புலச்சேட்டையும் கெடும்படி தவஞ்செய்யும் முனிவ! இப்படிப்பட்ட மேன்மை பொருந்திய இந்தத் தலத்தைப்பற்றிய மற்றொரு சரித்திரம் உளது; அதனைச்சொல்லக்கேள் என்று கருணை நிறைந்த திருநந்திதேவர் சொல்லத்தொடங்கினார் :—எ-று. (௧)

வேலைநீருடையெனமேவுமாதிர
ஞாலமேமுறைகெடப்பாவநண்ணுறுங்
காலவேற்றுமையினாற்கருதரும்பொரு
ளேலுநால்வகைப்படுமிருக்கிறந்தவே.

(இ-ள்) சமுத்திரசலமே ஆடையாகத்தரித்து விளங்கும் அஷ்டகுலபர்வதங்களால் சூழப்பட்ட இப்பூமண்டலத்தில் விதி விலக்கு கிரமங்கெட்டுப்பாவமே மேலிடும்படி காலவித்தியாசத்தினால் எண்ணுதற்கு அருமையான அர்த்தங்கள் அமைந்த இருக்குமுதலான நான்கு வேதங்களும் மறைந்துபோயின. எ-று.

தருமநன்னெறிவினைதளர்வடைந்தன
விரிவொடுதீவினைகொழுந்துவிட்டன
கருமுகில்காலநீத்தவத்திற்கான்றன
விருநிலமகள்வளத்தியல்புபொய்த்தன.

(இ-ள்) நன்மையான தருமமார்க்கத்திற்குரிய சற்கருமங்கள் சோர்வடைந்து சுருக்கமாயின; துர்க்கருமங்களோ விரிவடைந்து பெருக்கமாயின; கருமையான மேகங்கள் பருவகாலம் நீங்கியபின் வீணாகப்பெய்தன; மேன்மையான பூமி தேவியின் செழிப்பின்தன்மை குலைந்தது. எ-று. (௩)

உலகெலாந்துயரிடையுழத்தல்கண்டுவிண்
ணிலகியமணிமுடியமரரியாவரு
மலர்நறும்பங்கயப்பொகுட்டுவாழ்தரு
கலைமகள்கொழுநனைக்கருதிநண்ணினார்.

(இ - ள்) உலக முழுவதும் துன்பத்தினால் வருந்துவதைப்பார்த்துத்தேவலோகத்தில் வசிக்கும் ஒளி பொருந்திய இரத்தினங்கள் பதித்த கிரீடங்களைத் தரித்த தேவர்கள் எல்லோரும் மலர்தலையுடைய வாசனை தங்கிய தாமரைப் புஷ்பத்தில் வாசஞ்செய்யும் சரஸ்வதி நாயகனாகிய பிரமதேவரிடத்தில் விண்ணப்பஞ்செய்யலாமென நினைத்து அவரிடம் சென்றார்கள். எ-று. (௪)

புவனகோடிகளெலாமளிக்கும்புங்கவ
வவனியினிதருமரியநான்மறை
தவறினதீவினைதழைவுபெற்றன
கவலையுற்றுயிரெலாங்கலங்கிவாடின.

(இ - ள்) கணக்கில்லாத அண்டங்களைச்சிருஷ்டித்தருளும் தூயவனே! பூவுலகத்தாருக்குத்தேவரீர் கிருபைசெய்து தந்த அருமையான நான்கு வேதங்களும் மறைந்து போயின; அதனால் பாவச்செயல்கள் மிகுதியாயின; ஆத்மகோடிகள் மனவருத்தப்பட்டுத் துயர்மேலிட்டு வாட்டம் அடைந்தன. எ-று. (௫)

சதுமறையுலகினிற்றருதியென்றலு
மெதிர்மொழிகடவுளர்க்கிரங்கிநான்மலர்
மதுவிரிகமலமாளிகையில்வைகினோன்
கதிர்முடிச்சேடனைக்கருதினனரோ.

(இ - ள்) ஆகையால் மறைந்து போய்விட்ட நான்கு வேதங்களையும்பூவுலகத்தோர்உய்யும்படி தந்தருளவேண்டுமென்றுதேவர்கள் விண்ணப்பஞ்செய்ய, அப்படியே தருகின்றோமென்று தேவர்களுக்கு மறுமொழி சொல்லி, அன்று பூத்த தேன் துளிக்கும் தாமரைப்பூவாலயத்தில் எழுந்தருளியிருக்கும் பிரமதேவர் ஒளிவீசும் முடியையுடைய ஆதிசேஷனைத்திருவுளத்திற்சிந்தித்தார். எ-று (௬)

நினைந்திடுபொழ்தலைநெடியவாளரா
வனந்தனங்கெய்தலுமயனுநோக்கியே
மனந்தலையுலகிடையிறந்தநான்மறை
யினந்தலையுறத்தருகென்றுகூறினான்.

(இ - ள) எண்ணத்தக்க ஆயிரந்தலைகளையுடைய நீண்ட ஒளி பொருந்திய அனந்தனென்னுஞ்சேடன் அவ்விடத்துக்குவரவும் பிரமதேவர் அவனைப்பார்த்து "மத்தியவுலகமாகிய பூமண்டலத்தில் மறைந்துபோன நான்கு வேதங்களும் மறுபடியும் உண்டாகச்செய்வாய்" என்று சொன்னார். எ-று. (௭)

நன்றெனப்பணிந்தவனயந்தநானிலத்
தோன்றியசெழும்புனனாட்டினுற்றன
னின்றெனுநான்மறையுருவெடுத்தல்போன்
மின்றிகழோருருவெடுத்தன்மேவினான்.

(இ - ள்) நல்லதென்று பிரமதேவருடைய திருவடிகளை வணங்கிய அனந்த னென்னுஞ்சேடன் விருப்பத்தோடு பூலோகத்தில் விளங்குகின்ற நீர்வளப்ப முள்ள ஒரு நாட்டில் வந்து சேர்ந்தான். இல்லாமற் போய்விட்ட நான்கு வே தங்களும் ஒரு உருவத்தை யெடுத்துக்கொண்டு வந்தனபோல் சோதிரூபமான ஓர் வடிவெடுத்துக்கொண்டான். எ-று (அ)

பன்னகத்தலைவர்கள்புகழும்பண்பினான்
முன்னுருநீக்கியேமுதிர்ந்தயாக்கையாய்
மன்னியமாணிடவடிவெடுத்தனன்
றன்னிகர்மறைக்குலத்தலைவனென்னவே.

(இ - ள்) நாகத்தலைவர்கள் கொண்டாடும் தன்மையுடைய ஆதிசேடன் தனது பழமையான வுருவத்தை மறைத்து விட்டு விருத்தாப்பிய சரீரத்தோடு தனக்குத்தானே ஒப்பான பிராமணகுல ஆசாரியனென்று சொல்லும்படி மனி தவுருவெடுத்துக்கொண்டான். எ-று. (௯)

## வேறு.

வலத்திற்கிடந்தமுந்நூலன்மணிப்பொற்குழையின்வார்காதன்
செலுத்தற்குரியகரதண்டன்தேவாசிரியச்சிறப்புள்ளோ
னலக்கணடர்க்குமூவிரற்கொண்டணிநீற்றழகன்முடிச்சடையன்
குலத்திற்சிறந்தோர்வீதியிடைநரைமேற்கொண்டுகுறுகினனால்.

(இ - ள்) வலது தோளில் தங்கிய பூணூலுடையவனும், இரத்தின மிழைக் கப்பெற்ற குண்டலமணிந்த நீண்ட காதுகளையுடையவனும, நடந்து போவதற் கேற்ற கைத்தடியையுடையவனும், தெய்வத்தன்மையுற்ற ஆசிரியருக்கும் மேன் மையுடையவனும் துன்பங்களைநீக்கும் மூன்றுவிரலால் அள்ளி அணிந்த திருநீற் று அழகுடையவனும், சடை முடியுடையவனும், ஆகிய ஆதிசேடன் சாதிகளிற் சிறந்தவேதியர் வீதியில கிழவடிவங்கொண்டு வந்தான. எ-று. (௧௦)

கடவுட்டன்மைவிளங்குதலாற்கண்டோருள்ளம்வியப்பெய்த
வடைவிற்றிறம்பாத்தொழுகுலத்தோர்பணிந்துபோசனநல்கி
யிடையிற்பொன்றுமறைதோன்றற்கேதுவியல்போவல்லாதிப்
புடவிக்குரியதவப்பேறேவெய்தப்பெற்றேம்புகலரிதே.

(இ - ள்) ஆசிரிய ரூபத்தோடு வந்த அந்தணனிடத்தில் தெய்வத்தன்மை விளங்குதலாலும், பார்த்தபேரெல்லாம் ஆச்சரியப்படத்தக்கதாயுமிருந்தபடியி ஞல் நன்னெறிவிட்டகலாத பிராமணர்கள் அவரது திருவடிகளில் விழுந்து நமஸ்கரித்துப்பெருமைதங்கிய ஆசனமிட்டு, அதிலிருக்கச்செய்து, மத்திய கால த்தில் சிதைந்துபோன வேதங்கள் மறுபடியுமுண்டாவதற்கேதுவான தன்மை யினுலோ? அல்லது இப்பூவுலகம் செய்த தவப்பயனுலோ? தாங்கள் இவ்விடம் வரப்பெற்றோம்; இன்னதென்று சொல்லமுடியாது. எ-று. (௧௧)

என்னமுகமன்பலகூறியென்றெடெவ்வூரொய்திவதென்
அன்னமானுன்றனைநிகருமறிவோயறியவறைதியெனப்
பொன்னம்பலத்திற்பதஞ்சலியாரெங்கள்குலமேபுகுந்திட்ட
பின்னம்பலராமுனிவரரிற்பெரியோராகிவிளங்கினரோ.

(இ - ள்) இவ்விதமாக உபசாரவார்த்தைகள் அனேகஞ்சொல்லி, தாங்கள் இருப்பது எந்த நாடு? இவ்விடத்திற்கு வந்த காரணம்யாது? அன்னவாகனத்தை யுடைய பிரமதேவருக்கு ஒப்பான அறிவையுடையோரே! எங்களுக்குச்செம் மையாகச்சொல்லவேண்டுமென்று கேட்க, "பொற்சபையில் ஆனந்தத்தாண்ட வமூர்த்தியின் நிர்த்தனத்தைச்சதாதரிசனஞ்செய்து கொண்டிருக்கும் பதஞ்சலி மாமுனிவர் எங்களுடைய நாகலோகத்தையடைந்த பிறகு தான் முனிவர்க ளுக்கெல்லாம் சிரேஷ்டமான முனிவராய்ப்பிரகாசித்தார். எ-று. (௧௨)

கங்கையோடுபகீரதன்றுன்கருதிவந்துபுகுநாடே
யெங்களுடாமன்னுட்டிலிருக்குங்குடிகள்போகிகளே
யுங்கள்நாட்டோர்போகத்தைவேண்டிவையத்துழல்வார்க
டங்குமணிமாணிக்கங்களுண்டாய்விளங்குந்தலைமுறையே.

(இ - ள்) கபிலரிஷியின் தபாக்னியினுல் தகிக்கப்பட்டுச்சாம்பலாய்க்கிட ந்த தனது மூதாதைகளான சகரனுடைய மக்களையெழுப்பிக்கொண்டு வரும் படி தவத்தினுல்பெற்ற ஆகாயகங்கையுடன் பகீரதன்வந்து பிரவேசித்த நாடே எங்களுடைய நாடாகும்; அந்த நாட்டில் வசிக்கும் குடிகள் சுகாநுபவிகளான சர்ப்பங்களே; உங்களுடைய நாட்டிலுள்ளவர்கள் சுகத்தைக்கருதி இந்த பூவுல கத்தில் துயரடைகின்றுர்கள்; எங்கள் நாட்டிலுள்ளவர்கள் தொன்று தொட்டு தங்கள் முடியில் அழகிய மாணிக்கங்களையுடைத்தாயிருக்கிறுர்கள். எ-று. (௧௩)

இயன்மண்டலத்திற்சக்ரபுரமென்றேசொல்லவிருக்கைபெற்றேம்
பயில்சங்காழிதரித்தபிரான்பள்ளிகொண்டதானமது
வுயருநாகப்பட்டப்பேருள்ளோமென்னவோதுதலு
நயமாயந்தணாளர்களுமுபசாரங்கணவிற்றியே.

(இ-ள்) இப்படிப்பட்ட தன்மையுள்ள அந்த நாட்டில் சக்கிரபுரமென்கிற திருநகரத்தில் நாம் வாசஞ்செய்வது; விளங்குகின்ற சங்கு சக்கரம் தரித்தருளிய மகா விஷ்ணு ஆனந்த நித்திரை கொண்ட திருப்பாற்கடலின் எல்லையும் அது தான்; சிறப்பு பொருந்திய நாகலோக ராஜன் என்னும் பட்டப்பெயரும் நமக்குள்ளது." என்று அனந்தன் சொல்லவும், அவ்வூர் வேதியர்கள் அவருக்குப்பல உபசார வார்த்தைகளைச்சொன்னார்கள். எ-று. (கச)

இவ்வூரவரின்மறுதலையாயிசைப்பார்களுமுண்டவர்வார்த்தை
யொவ்வாவார்த்தையெனநீக்கியோதுவிக்கவேண்டுமென
விவ்வாறென்னைவினவுசெவியில்லேனினியாயிரமுகத்தா
னவ்வேதங்களோதுவிக்கவல்லேனென்னவறிவித்து.

(இ-ள்) இந்த வூரில் உள்ளவர்களில் சிலர் வேறு விதமாய்ச்சொல்பவர்களும் உண்டு. அவர்களுடைய வார்த்தைகள் பொருத்தமில்லாதவைகள் என்று நீக்கி எங்களுக்குப்போதிக்கவேண்டுமென்றுசொல்ல, "நீங்கள் இந்தப்பிரகாரம் என்னைக்கேட்டுக்கொள்ளுதலால் செவிப்புலன் தனியே இல்லாமல் கண்ணே காதாக வுடைய நான் எனது பழைய ஆயிரமுகங்களோடு அந்த நான்கு வேதங்களையும் ஓதுவிக்கும் திறமுடையேன் என்று தெரிவித்து, எ-று. (கரு)

சிறந்தவாதிவருணத்திற்செப்பற்கரியமறைநான்கு
மிறந்ததெங்ஙனீகற்றுயென்னவேண்டாமிப்புவிமேற்
பிறந்தாரொவருந்தாம்பெற்றபிள்ளைக்கரிதாமறைப்பொருளின்
றிறம்போதித்தலல்லாதுசெப்பார்சிறிதுமேதிலர்க்கே.

(இ-ள்) மேலான வேதியரால் சொல்லுதற்கு அருமையான நான்கு வேதங்களும் மறைந்து போயினவே; அப்படியிருக்கநீர் அதை எப்படி கற்றுக்கொண்டீர் என்று கேட்கவேண்டாம்; இந்தப்பூலோகத்திலுள்ளவர்கள் யாவரும் தங்கள் தங்கள் புத்திரர்களுக்கு அருமையான வேதார்த்தங்களைப்போதிப்பார்களே அல்லாமல் அந்நியர்களுக்குக்கொஞ்சமும் சொல்லமாட்டார்களே. எ-று. (கசு)

யானென்னுவதுமிவ்வாறேயிசைந்தவறிவாமென்றனக்கோர்
தானவுலகக்கதிசெல்லத்தருகாலில்லேன்றளர்வடைந்தேன்
ஞானமறைகளிவ்வுடலோடிறக்குமென்னவுளகாடி
மானவறிவீர்கற்போர்கட்கோதவிப்பவந்தேனால்.

(இ - ள்) என்னுடைய கருத்தும் இதுவேயாகும் ஆனல்; வேதார்த்தங்களைக்கற்றுணர்ந்த எனக்கு சுவர்க்கலோகப்பதவியைத் தரத்தக்க புத்திரனில்லாத குறையினால் நான் மனதில சஞ்சலப்பட்டேன்; அறிவை விளக்கும் வேதார்த்தங்கள் என்னுடைய சரீரத்தோடு போய்விடுமே என்று எண்ணி மிகுந்த நல்லறிவுடையோர்களே! கற்றுக்கொள்ள விருப்பமுள்ளவர்களுக்குப்போதிக்கலாமென்று இவ்விடத்துக்கு வந்தேன்." எ-று. (கஎ)

என்றுகூறுமறைவல்லோனிருதாள்வணங்கியிணையிலருட்
குன்றேஞானக்கொழுஞ்சுடரேகுறிப்பொன்றில்லேங்குறைதீர
வின்றுமறைநீயெடுத்தியம்பிற்கற்குந்தகையோரிங்காட்டி
னன்றுஞ்சிறுவர்பலருள்ளாரென்றுநயந்தாருவந்துளிரர்.

(இ - ள்) இவ்வாறு சொன்ன வேதநிபுணனாகிய அனந்தனுடைய உபயசரணாரவிந்தங்களைப்பணிந்து, ஒப்பில்லாத கருணை மலையே! ஞானமணி விளக்கே! ஒன்றுந்தெரியாத எங்களுடைய குறை நீங்கும்படி மறைந்து போன வேதங்களைத்தேவரீர் எடுத்துப்போதித்தால் அதனைக்கற்றுத் தெரிந்துகொள்ளும் தன்மையுள்ளவர்கள் இந்தவூரில் நன்மையான பாலப்பருவமுள்ள சிறுவர்கள் அனேகர்கள் இருக்கிறார்கள் என்று சந்தோஷத்தோடு சொன்னார்கள். எ-று.

ஓதற்கிசைந்தபலசிறுவருற்றாராங்கனுவமையில்லா
ளுதியாங்களயலோர்க்குச்செப்பேமென்னுமத்திறத்தான்
மேதைமறைகள்கற்போர்க்குமுகம்பார்த்தியாமும்விளம்பொண்ணு
கோதிலெழினிறப்படாமொன்றகுறுக்காய்நிற்கவேணுமென்றான்.

(இ - ள்) வேதம்படிக்க விரும்பிச்சம்மதித்த அனேக சிறுவர்கள் அவ்விடத்துக்கு வந்தார்கள். தனக்கு நிகரில்லாத அந்த வேதபண்டிதன் முதலிலேயே அந்நியர்களுக்குச் சொல்லிக்கொடுக்கமாட்டோமென்று கூறிய காரணத்தால் அறிவை வளர்க்கும் வேதத்லதக் கற்றுக்கொள்வோர்களுடைய முகத்தைப்பார்த்துச்சொல்வது முறைமையல்ல; ஆதலின் குற்றமற்ற அழகான நிறமுள்ளதிரை ஒன்று மத்தியில் போடவேண்டுமென்று உரைத்தான். எ-று.(நக)

அன்னவாறுபடம்வளைத்தாரதனுட்டனதுபடர்விரித்து
முன்னருருவந்தானுகிமொழிந்நான்மறைகள்மலறவுற்றே
தன்னுதிரையினயலிருந்துசிறார்கடோன்றமிளமதிபோ
லன்னரறிவுவளர்வுதரநாட்குநாளுமறைகற்றார்.

(இ - ள்) அந்தப்பிரகாரமே திரையொன்று அவர்களுக்கு மத்தியில்தொங்கவிட்டுக்கட்டினார்கள். அதற்குட்புறத்தில அவ்வேரியகனது பழையவுருவமாகிப்படம் விரித்துக்கொண்டு மறைவாக இருந்து வேதம் சொலலினன். அந்தத்திரைக்கு வெளிப்புறத்திலிருந்துகொண்டு மாணக்கர்கள் பிறைச்சந்திரன் நாளுக்குநாள் வளர்வதுபோல் தங்கள் அறிவு விருத்தியாகும்படி வேதங்களைக் கற்றுககொண்டு வந்தார்கள். எ-று. (உ0)

இவ்வாறொழுங்கிற்செலப்பன்னாளிறுகியோர்நாளோதுகையின்
மெய்வாழ்கிடையிலோரவலன்றிரையுரவியப்பயறிதுமொருத
லைதவாமொழிநீக்கிடலுஞ்சடுதியெதிராய்க்கணாறற்றுப்
பையவாயரவின்விடத்தியான்மூடிந்தார்கிடையிற்பல்லோரும்.

(இ - ள்) இவ்விதமாய்க்கிரமமாகப்பல நாள் ஒழிந்துக்கடைசியில் ஒருநாள் வேதஞ்சொல்லுகையில் உண்மை யோங்கும் வேதப்பள்ளியில் நன்மாக்களுளொரு மாணாக்கன் திரைக்குள் இருக்கும் அதிசயத்தைப்பார்த்தறியவேண்டுமென்று தைதத நீண்ட திரைச்சீலையை நீக்கினவுடன் அங்கணமே நேரில்கண்டு அந்தக்கிடையின் மாணாக்கர் பலரும் படம் பொருந்திய வாயையுடைய சர்ப்பத்தின விஷாக்கினியால் இறந்து போனார்கள். எ-று. (உக)

எழுதாமறைகள்பயிற்றுவித்தற்கெய்தியென்னேகொடும்பாவப்
பழியாங்கொண்டேமென்செய்கேமென்னநினைந்துபையுளெய்திக்
கெழுமாமணிகளுடிருக்குங்கிரணப்பந்திமுடித்தலையோன்
வழுவாயுறையுந்தனதுலகிற்சென்றான்மற்றோர்செயலின்றி.

(இ - ள்) எழுதியுண்டாகாத வேதங்களைக் கற்றுக்கொடுக்கும்படி வந்து ஐயோ! கொடுமையாகிய கொலைப்பாதகமான பெரும்பழிக்கு ஆளானோமே. இதற்கு நாம் செய்யத்தக்கது யாது? என்று சிந்தித்து வியாகுலமடைந்து உயர்ந்த மாணிக்கங்களுக்கிடையில் சொலிக்கும் பிரகாசரேகை வரிசை விளங்கும முடியையுடைய ஆதிசேடன் மற்றொரு செய்லுமில்லாமல் தனதுலகமாகிய நாகலோகத்திற்குப்போய் விட்டான். எ-று. (உஉ)

கொலையால்வந்தபெரும்பாவங்கூடியலகைத்திரளாகி
யலையாமறைகடெரிந்தமனத்தச்சமேன்மேற்றோற்றியவ
னிலையாமுன்னர்த்தோன்றிடலுங்கண்டானங்கெட்டுயிர்ப்பாய்
மலையாய்வளருங்கொடும்பாவமாய்க்குமாறுஞ்சிந்தித்தான்.

(இ-ள்) கொலையினால் நேர்ந்த மிகுந்த பாவங்களெல்லாம் சேர்ந்து பேய்களின் கூட்டமாகி நிலையான வேதங்களைக்கற்றுணர்ந்த அனந்தனுடைய மனத்தில்மேலும் மேலும்பயமுறுத்தி, அவனுக்கு எதிரில்நிலையாகத்தோன்றுவதினால் அவைகளைப்பார்த்துத்திகிலடைந்து பெருமூச்செறிந்து வருந்தினான்; இவ்விதம் மலைமேல் நாளுக்கு நாள் அதிகரித்துவரும் கொடுமையான பாவத்தை நாசஞ்செய்யும் விதத்தைக்குறித்தும் ஆலோசித்தான். எ-று. (௨௩)

## வேறு.

பாய்மணியுரகர்தம்பதிக்குநீணெறி
யாயவோர்பிலத்தின்வாயணைந்துபுற்றிடை
மேயவெம்மானருள்விரும்பித்தாடொழச்
சேயொளிமணிமுடியனந்தன்சிந்தியா.

(இ-ள்) வீசுகின்ற கிரணத்தையுடைய மாணிக்கத்தைத்தரித்த நாகருடைய உலகத்துக்கு மிகுந்த தூரத்திலிருக்கிற கீழறை வழியாய் இந்தத்திருப்பாவநாசப்பதிக்கு வந்து புற்றிடங்கொண்ட சுயம்பு மூர்த்தியாகிய ஸ்ரீபாவநாசேஸ்வரரது திருவருளையடைய ஆசைகொண்டு, அவரது பாதாரவிந்தங்களைப் பணிந்து போற்றச்சிவந்த பிரகாசத்தையுடைய இரத்தினம் விளங்கும் முடிவாய்ந்த அனந்தன் மனதில் எண்ணங்கொண்டு, எ-று. (௨௪)

பிலவழியூடுதான்வந்துபேசரு
மலகில்சீரெம்பிரானாலயத்தினுட்
கலைமதிமுடித்தவன்பூசைகாதலே
வலிதரவகழ்ந்தனன்வாவியொன்றரோ.

(இ-ள்) கீழறை மார்க்கமாய் வந்து பேசுதற்கருமையான அளவில்லாத கீர்த்தியுடைய எமது பெருமானாகிய பட்டீச்சுரரது திருக்கோவிலுள் பிரவேசித்துச்சோடச கலை வாய்ந்த சந்திரனைச்சடாமகுடத்தில் தரித்த சிவபெருமானுக்குப்பூசை செய்யவேண்டுமென்னும் அன்புமிகுந்துவர அதனால் அவ்விடத்தில் ஒரு திருக்குளத்தை வெட்டுவித்தான். எ-று. அரோ, அசை. (௨௫)

கொன்றையம்முடியனைக்கோதின்மஞ்சனம்
நன்றுறவாவிநீராடிநாடொறு
மொன்றியதிருவருளோங்கவைம்புலன்
வென்றவனருச்சனைவிளங்கச்செய்துபின்.

(இ - ள்) அழகியகொன்றைமலர்சூடிச்சடைமுடியுடையசிவபெருமானுக்குக்குற்றமற்ற திருமஞ்சனம் செய்து, சிவானுக்கிரகம் வளர்ந்தோங்க ஐம்புலன்கள் அடக்கிச்சிவபூசை விளக்கஞ்செய்து பின்பு, எ-று. (உசு)

ஆயிரமுடிகளிலணிகொண்மாமணி
பாயொளிவிளக்கமேதாங்கிப்பாவேறு
மேயவுள்ளுருகுநீரவெளிப்பட்டாலெனத்
தூயகண்களினிடைச்சொரியுநீத்தமே.

(இ - ள்) தனது ஆயிரஞ் சிரசுகளிலும் விளங்கா நின்ற அழகிய இரத்தினங்களுடைய பரந்த பிரகாச தீபத்தைதயேந்திப்பாவேன் ; அன்பு பொருந்திய மனம் உருகிச்சலமாய் வெளி வந்ததுபோல் பரிசுத்தமான நேத்திரங்களிலிருந்து ஆனந்த பாஷ்பவெள்ளம் பெருக்குவான். எ-று. (உஎ)

கொன்றையம்வார்சடைக்குழகன்றாட்டறி
யொன்றியவுயிர்ப்பசுவொதுக்கிச்சேர்த்தியே
நின்றவுட்காரணநான்மூலக்கணிடியக
வன்பெனும்பாலினையமுதினுக்கியே.

(இ - ள்) அழகிய கொன்றைமாலை தரித்த நீண்ட சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக்கடவுளது திருவடி யென்னுங்கட்டுத்தறியில் யானென்னுஞ் சீவப்பசுவைச்சேர்த்துக்கட்டி மனம்-புத்தி-சித்தம்-அகங்காரமென்னும் அந்தக்கரணங்களாகிய நான்கு தனங்களிலிருந்து பெருகும் சிவநேசமென்னுந்திவ்விய அமுதைப்பொழிந்து, எ-று. (உஅ)

பல்பகலுணவினையொழித்துப்பாவனை
வல்வினைத்துவக்கறமனத்தைவாட்டியே
சொல்லரும்பூசனைதொடங்கிநின்றனன்
செல்லருவருடமுந்நீர்ந்ததாயிரம்.

(இ - ள்) அநேக நாள் ஆகாரமின்றி எண்ணத்தால் உண்டாகும் கொடுமையான வினைத்துயர் நீங்கும்படி மனோ நிக்கிரகஞ்செய்து, சொல்லுதற்கு அரு

மையான சிவபூசை செய்து வந்தனன. இவ்விதமாக செல்லுதற்கரிய ஆயிர வருஷஙகள் கழிந்தன. எ-று. (உகூ)

பூசனை திருவுளம்புரிந்துநோக்குறு
வாசவனயன்றிருமாலுங்காண்கிலாத்
தேசுறுதிருவுருதிகழச்செஞ்சட
ரீசனாதோன்றினனிலிங்கமாப்பமே.

(இ - ள்) அனந்தன் விடாது செய்த பூசையைக்கண்டு திருவுளமிரங்கித் தேவேந்திரனும் பிரமதேவனும் மகா விஷ்ணுவும் காணாத ஞான சூரியனென்னுஞ் சிவபெருமான் பிரகாசம்பொருந்திய திவ்விய மங்களவடிவம் விளங்கும்படி இலிஙகததின் மத்தியில் தோன்றியருளினார். எ-று. (கூo)

கற்றையஞ்சடிலமுமகளகண்டமு
முற்றவெண்டலையணியொழுகுமுக்கணும்
வெறறிசேர்கணிச்சியுமானுமேவுறச்
சுற்றினதோலினதுடையுந்தொங்கலும்.

(இ - ள்) தொகுதியாகிய அழகுவாய்ந்த சடை முடியையும் கறுத்த கண்டத்தையும் வெண்டலைமாலையையும் அழகு திகழுந்திரிநேத்திரங்களையும் செயம் பொருந்திய மழுவாயுதத்தையும் மானையும் திருமேனியிற்பொருந்தப்போர்த்துக் கொண்டிருக்கும் யானைத்தோலுடையையும் கொன்றைப் பூமாலையையும், எ-று. (கூக)

வெண்பொடிவிளக்கமுற்றொளிருமேனியுங்
கண்களீராயிரங்களிப்பக்கண்ணுறீஇத்
தணபுனறதும்பிமெய்பபுறத்திற்சார்ந்தெனும்
பணபுறுபரவையிற்படிந்துபோற்றுவான்.

(இ - ள்) நீறு பூத்தநெருப்புப்போல் விளங்கும் திருமேனியையும் தன் இரண்டாயிரங் கண்களும் களிக்கும்படி தரிசனம் செய்து கண்ணீர் ததும்பிச் சரீரத்தின் வெளியிற் புறப்பட்டாற் போலும் குணமிகுந்த ஆனந்தக்கடலில் குளித்துத்துதி செய்யலானான். எ-று. (கூஉ)

திருவருட்குன்றமேஞானதீபமே
யுருவினின்மூவராமொருவபல்லுயிர்ப்
பெருவினைத்துவக்கறப்பிறப்பிறப்பினைத்
தூவருளருமருந்தன்னசம்புவே.

(இ - ள்) அழகிய அருணமலையே! மெய்ஞ்ஞானவிளக்கே! பிரமனவிட்டுணு உருத்திரன் எனனும் மூவருமாய் விளங்கும் ஒப்பற்ற பொருளே! கோடிகளுடைய பெரும்பாவப்பிணக்குகள் தொலையும்படி ஜனனமரணங்களைக்கொடுத்து முடிவில் மோக்ஷ வீடு தந்தருளும் ஞானமிர்தமென்னத்தக்க சம்புவே! எ-று. (கஙஉ)

மனணுநீபுனலுநீவன்னிகாலுநீ
விண்ணுநீயுயிருநீமேவுமெய்யுநீ
கண்ணுநீமனமுநீகருதுமொன்றுநீ
பெண்ணுநீயாணுநீபேசுஞ்சொல்லுநீ.

(இ - ள்) மலை முதலிய பிருதுவியும் நீ, கடல் முதலிய அப்பும் நீ, சந்திர சூரியர் முதலிய அக்கினியும் நீ, பிராணவாயு முதலிய காற்றும் நீ, ஆகாயமும் நீ, சீவனும் நீ, மேவுகின்ற சத்தானபரமும் நீ, கண் முதலிய புறக்கரணமும் நீ, மனம் முதலிய அகக்கரணமும் நீ, இச்சிக்கும் பொருளும் நீ, பெண்ணும் நீ, ஆணும் நீ, வசனிக்கும் வார்த்தையும் நீ. எ-று. (கஙச)

காலமுமுலகமுங்காட்டுதத்துவச்
சீலமுஞ்சித்தசித்தென்னச்செப்பலு
மேலுமிகுனையலால்யாதுவேறுதான்
மூலமுமுடிவுமாய்நின்றமுக்கணு.

(இ - ள்) திரிகாலமும் பதினாலுலகமும் காட்டுகின்ற சகல தத்துவநெறிகளும் சித்து சடம் என்று சொல்வனவும் மற்றெல்லாப்பொருளும் உன்னையல்லாமல் வேறுமுள்ளனவோ? இல்லை ஆதலினால் அனைத்திற்கும் ஆதியாயும் அந்தமாயும் விளங்காநின்ற சோமசூரியாக்கினி யென்னும் மூன்று கண்களையுடைய முதற்கடவுளே! எ-று. (கஙரு)

என்னவன்பினிற்பலதுதிசெய்தியாவரும்
முன்னுறுவடிவினைத்தொழுதமொய்மணிப்
பன்னகத்தலைவனைநோக்கிபபண்ணவன்
மன்னியவாய்மலர்மலர்ந்துசொல்லுவான்.

(இ - ள்) இம்மாதிரியாக மெய்யன்போடு பலதோத்திரம் செய்துயாவரும் தியானிககுமபடியான திவ்விய மங்கள சொரூபத்தைவணங்கிய ரத்தினந்தரித்த சர்ப்பலோகத்தவர்களுக்குத்தலைவனாகிய அனந்தன் மீது கிருபாநோக்கம வைதது மகா தேவன் நிலைபெற்ற திருவாய் என்னுந்தாமரை மலர்விகசிதமாய் மொழிந்தருளினார். எ-று. (கஙசு)

செய்தமுற்கொலைவினைதீர்த்தநின்றனக்
கெய்தியபேறுமற்றியார்பெற்றார்களோ
மெய்திகழணியெனமேவுகென்றுதன்
கையினாலணிந்தருட்கருதிப்பின்னரும்.

(இ - ள்) நீ முன்செய்தகொலைப்பாதகம் இன்றோடு நீங்கியது; உனக்குண்டான லாபம் வேறு யார் அடைந்தார்கள்? நமது வடிவத்தில் ஆபரணமாய் விளங்குகின்ற சர்ப்பங்களைப்போல் சுகமாய் வாழக்கடவாயென்று தமது திருக்கரத்தினால் விபூதிசாத்திப்பின்னுங்கருணை கூர்ந்து, எ-று. (௩எ)

இத்தலத்தெம்மைநீயருச்சித்தேத்திய
பத்தியின்பெருமையாற்பணிகள்வேய்ந்தென
வெத்திசையும்புகழ்தங்கவெய்தியே
முத்தியும்பெறுதிநீமுடிவிலென்றனன்.

(இ - ள்) இந்த க்ஷேத்திரத்தில் எம்மை நீ பூசித்து வணங்கிய பத்தியின் மேன்மைத்திறத்தால் யாம் தரித்திருக்கும் சர்ப்பங்களைப்போல் எந்தத்திக்கிலும் கீர்த்தி விளங்கும்படி வாழ்ந்து முடிவில் மோக்ஷ சுகத்தையும் அடைவாயென்று வரமளித்தார். எ-று. (௩அ)

அப்பநீயித்தலத்தென்னையாண்டதற்
கொப்புறுமற்புதமுதவுவாயெனச்
செப்புநம்மடியவர்சிந்தைதபோற்றுநீ
யிப்புனல்வாவியிற்றவளையெய்துறா.

(இ - ள்) என் அப்பனே! தேவரீர் இந்தத்தலத்தில் அடியேனை யாட்கொண்டதற்குப்பொருத்தமாகும் அதிசயம் விளங்க அருள்வாயென்று பிரார்த்தித்ததனால் சொல்லாநின்ற நமதன்பர்களை மனதிற்றுதிக்கும் நீ வெட்டு விதத இத்திருக்குளத்தில் தவளைகள் உண்டாகமாட்டா. (குறிப்பு) இத்திருக்குளத்துக்குதான் அமண்டுகேதீர்த்த மெனப்பெயர் வழங்குகிறது. எ-று. (௩௯)

குட்டமேமுதலியநோய்கள்கொண்டவ
ருட்கொளினீங்கிமெய்தனிலோர்துளி
கட்டளையூழ்வினைக்குன்மங்காசநோய்
விட்டிடுமெய்ப்புனற்றிவலைமேற்படில்.

(இ - ள்) குட்ட முதலான வியாதிகளால் பீடிக்கப்பட்டவர்கள் இந்த திருக்குளத்தின் ஒரு துளி சலம் ஆசமனம் செய்தால் அந்த ரோகங்கள நீங்கப் பெறுவார்கள். இதில் ஒரு சிறு துளிசலம் சரீரத்தின் மேற்பட்டால் பிராரத்த கருமத்தின் வலிமையால உண்டாகும் குன்மம்-க்ஷயம் என்னும் பிணிகளும் ஒழிந்துபோம். எ-று. (சய)

என்றுபேரருள்புரிந்திணையிலாமதி
கொன்றையஞ்சடைமுடிகோலக்கண்ணுதல்
நன்றிருவருளுருத்தான்மறைந்தனன்
மின்றிகழ்கயிலையின்மேவினனரோ.

(இ - ள்) என்று மிகுந்த கருணை கூர்ந்து பிறைச்சந்திரனையும் கொன்றை மாலையையும் தரித்த திருச்சடை முடியும் உடைய சுந்தரமான நெற்றிக்கணணை உடைய சிவபெருமான் தமதருளினாற்றோன்றிய திருவுருவை மறைந்து மிகவும் பிரகாசம் பொருந்திய ஸ்ரீகைலாசத்துக்கெழுந்தருளினார். எ-று. அரோ, அசை. (சக)

தேனலர்கற்பகச்செய்யநாண்மலர்
வானவர்சொரிந்தனர்சோனைமாரிபோற்
கோனெடுங்கடலெலாமுடைந்தகொள்கைபோல்
வானதுந்துமிமுழக்கடைந்தமாதிரம்.

(இ - ள்) தேன் துளிக்கும் கற்பகவிருக்ஷத்தின் சிவந்த புதிய புஷ்பங்களைச்சோனைகால மழைபோல் தேவர்கள் தூவினார்கள். வலிவான நீண்ட சமுத்திரங்களெல்லாம் உடைந்த தன்மையைப்போல் வான துந்துமியின் பேரொலியானது எட்டுத்திக்கையும் சூழ்ந்துகொண்டது. எ-று. (சஉ)

செங்கதிரொளிகெடநகைக்குஞ்செம்மணி
தங்கியபஃறலைச்சற்பநாயக
னங்கணனருளினலிகடாடொழப்
பொங்குபாதலத்தரசாகிப்போயினன்.

(இ - ள்) சிவந்த சூரிய பிரகாசமும் மழுங்கும்படி ஒளி வீசும் மாணிக்கம் தங்கிய அனேக சிரசுகளையுடைய சர்ப்பங்களுக்கு நாயகனாகிய ஆதி சேஷன் பரமசிவத்தின் திருவருளினால் பாம்புகளெல்லாம் தனது பாதத்தை வணங்கும் படி நாகலோகத்தரசனாகி அவ்விடத்திற்குச்சென்றான். எ-று. (சங)

மாமணிநாகஞ்செய்பூசைவண்மையான்
நாமநாகேச்சுரநகர்க்குக்கூறுவார்
தாமவார்குழலியோர்பாகர்தம்பெயர்
தோமினாகேச்சுரர்துவாபரத்திலே.

(இ - ள்) பெருமை பொருந்திய மாணிக்கத்தையுடைய நாகராஜன் பூசை செய்த வளமையால் இந்நகரத்திற்கு நாகேச்சுரமென்றும் மலர் மாலை சூடிய நீண்ட கூந்தலையுடைய பார்வதிபாகனாகிய சிவபெருமானுக்குக் குற்றமற்ற நாகேச்சுரர் என்றும் பெயர் சொல்லுவார்கள்; மேலும் துவாபரயுகத்திலே, எ-று. (சச)

நண்ணியிந்நகர்வயினான்குவேதமு
மெண்ணியோர்காலத்தினிறந்திடாவகை
பண்ணியபூசையிற்பணிந்ததாலவன்
மண்ணிலோர்பெயர்சதுர்வேதமங்கலம்.

(இ - ள்) இந்த நகரத்தில் வந்து நான்கு வேதங்களும் ஓர்காலத்தும் இறந்திடாவண்ணம் அந்த அனந்தன் வணங்கிச்செய்த சிவபூசையால் அத்திருப்பதிக்குச் சதுர் வேதமங்கலமென்றும் ஒரு சிறப்புப்பெயர் வழங்கும். எ-று. ஆல் அசை. (சரு)

ஆதலால்நோய்களிலல்லலுற்றவர்
பேதுறுபாவமேதீர்க்கும்பெற்றியான்
மாதலமிதுவெனவழங்குமிப்புனற்
காதையொன்றுளததுகலககந்தீர்க்குமே.

(இ - ள்) ஆகையால் வியாதிகளினால் வருந்துவோர்கள் மதிமயக்கத்தால் தேடிய பாவத்தைத் தீர்க்கும் திறத்தினால் மகாக்ஷேத்திரம் இதுவேயென்று வழங்கிவரும். இது நிற்க இத்தத்திருக்குளத்தின் தீர்த்த விசேடத்தைக்குறித்து ஒரு சரித்திரம் இருக்கிறது; அது சகலதுன்பத்தையும் போக்கும். எ-று. (சசு)

அனந்த சருக்கம் முற்றிற்று.

# மனுசரணச் சருக்கம்.

மேலொருமனுகுலவேந்தன்செய்கையை
யாலநீழலிலரனருளைப்பெற்றிடும்
நால்வரிலொருவனுநற்றவத்தினன்
சால்புறவினவவேகந்திசாற்றுவான்

(இ-ள்) கல்லால நிழலில எழுந்தருளிய தட்சிணாமூர்த்தியின் திருவருளைப்பெற்றிருக்கும் நால்வருள் ஒருவராகிய சனற்குமார முனிவர் பூர்வம் மனுகுலத்திற் பிறந்த அரசனாகிய ஒரு மனு சரணமடைந்த சரித்திரத்தைச்சொல்லவேண்டுமென்று வணக்கத்தோடு கேட்டதனால் எமது திருநந்தி தேவர் சொல்லத்தொடங்கினர் எ-று (க)

மலைவுறுசெருவிடைவகுத்தபேரணிப்
பலகடறதனையெலாநீக்கிப்பற்றலா
தலைதனைகிடையெனச்சென்றுதாக்குறு
நிலைமுகநெய்துடைத்திலகுவேலினன.

(இ-ள்) யுத்தம் செய்யும் போர்க்களத்தில் பெரிய படைவகுப்புகளையுடைய அனேக சேனைக்கடற்கூட்டங்களையெல்லாம் நீக்கிப்பகைவர்களுடைய சிரங்கள் தன் உணவென்று ஓடிப்போய்த்தாக்கும் நிலை முகத்தில உள்ளதை நெய்யால் துடைக்கப்பெற்றுப்பிரகாசிக்கும் வேலாயுதத்தையுடையவன். எ-று.

நீதியினற்றனெிகரிலாதவன்
சூதொருசிறுகினைத்துணையுஞ்சிந்தியான்
போதியலகொன்றையானடிவைப்போற்றுறு
மாதவடபெருக்கியமனக்களிபபினன.

(இ-ள்) இராஜநீதியில் பிறர் தனக்கொப்பில்லாத தன்மையைப்பெற்றவன்; மிகவுஞ் சிறிய நினையளவாயினும் வஞ்சகம் நினையாதவன்; கொன்றைமாலைசூடிய சிவபிரான் திருவடிகளைத்துதிசெய்யும் பெருமை பொருந்திய தவத்தினால பெருக்கும் மனமகிழ்ச்சியையுடையவன். எ-று. (ங)

நீற்றொளிமூவிரனிலவுநெற்றியான்
போற்றானடியவர்க்கன்புபூண்டவன்
மாற்றருங்கல்வியின்வரம்புகண்டவன்
சாற்றிடுமுயிர்க்கெலாம்பெற்றதாயனான்.

(இ - ள்) மூன்று விரல்களால் விதிப்படி பூசிய திருவெண்ணீற்றின் தேஜசு விளங்கும் நெற்றியுடையவன்; யாவரும் துதிசெய்யும்படியான சிவனடியார்களிடத்தில் மாறாத அன்பு பூண்டவன்; பெருமையைக்கொடுக்கும் கல்விக்கடலின் எல்லையைக்கண்டவன்; தான் காக்கும் குடிகளெல்லாரிடத்திலும் பெற்ற தாய் போன்ற கருணையுடையவன். எ-று. (ச)

கனவினுந்தீவினைகருதற்கஞ்சுவோ
னனியறம்வேலியாய்நடுவண்மைகுவேர்
ளினமுகிறுறுமீகைவள்ளியோன்
மனுவெனுங்கொற்றவன்மகதநாட்டிறைன்.

(இ - ள்) சொப்பனத்திலும் தீயகருமங்களைச் சிந்திப்பதற்கும் பயப்படுவான்; மிகுந்த தருமமே வேலியாக அதில் நடு நிலைமையோடு வாழுஞ்சீலன்; கூட்டமாகிய மேகங்கள் நாணத்தக்க கொடையாளன்; மகதநாட்டுக்கதிபதியாகிய மனுவென்னும் நாமத்தையுடைய வேந்தன். எ-று. (ரு)

## வேறு.

பொதுவறப்புரக்குநாட்டிற்புன்மைதீர்ந்தந்தணாளர்
விதிமுறைக்குலத்தில்வந்தாள்மேதகுசெவ்விவாய்ந்த
மதிநுதலினமான்கேதுமதியெனுநாமங்கொண்டா
ளிதமுறப்பெற்றோருள்ளமின்புறவளாகின்றாளால்.

(இ - ள்) மிக்க நீதியாய் அரசாக்ஷிசெய்யும் அந்நாட்டில் மேன்மைபொருந்திய பிராமணர்களுடைய நியமமான குலத்திற் சிறந்த அழகு வாய்ந்த சந்திரன் போன்ற முகத்தையுடைய பெண்பிள்ளை பிறந்தாள். அவள் கேதுமதி என்னும் பெயரைத்தரித்தவள்; பெற்ற தாய் தந்தையர் மனமகிழும்படி சந்தோஷமடைய வளர்ந்து வந்தாள். எ-று. (சு)

நிலைதருபிராயமேழாய்நிகழ்ந்திடப்பெற்றோர்தங்கள்
குலனொடுகுறிகுணங்களொத்திடாக்குறையிலாலே
கலமணநேராரியார்க்குநான்மறையொருவனுக்குக்
கலைநெறிகடந்தோனனோர்கருத்தினுக்கிசையவந்தான்.

(இ - ள்) நிலைமையான ஏழாவது வயதையடைந்திட அப்பெண்ணைப் பெற்றவர்கள் தங்கள் குலத்துக்கேற்ற குறியையும் குணத்தையும் உடைய

வரன் கிடைக்காத குறையால் அக்கன்னிகையை யாருக்கும் விவாகஞ்செய்து கொடுத்தாரில்லை. அப்படியிருக்கச் சாஸ்திர பண்டிதனான ஒரு பிராமணன் அவர்களுடைய மனதுக்கேற்றபடி அவ்விடத்துக்கு வந்தான். எ-று. (எ)

மணவினைத்திறத்தான்வந்தேன்மற்றொருகிளைஞரில்லேன்
குணனொடுகுலங்கள்மற்றுமிலயங்கிடுமென்றுகூற
வணைதருமொழிகளைக்கேளாவன்புகொண்டதற்குநேர்ந்து
துணையிவனிவட்காமென்றுமணவினைத்தொழில்முடித்தார்.

(இ-ள்) கல்யாண காரியத்தைக்கருதி வந்தேன். எனக்கு வேறுபந்துக்களில்லை. எனது குணம், குலம், முதலானவைகள் பொருத்தமாக இருக்குமென்று அப்பிராமணன் சொல்ல, அப்படி மொழிந்தவார்த்தைகளைக்கேட்டுப் பெற்றோர்கள் அவன் மேல் அன்புவைத்து அவனுடைய வேண்டுதலுக்கிணங்கி இவனே இவளுக்கேற்ற வரனாவானென்று நினைத்துக்கல்யாண காரியத்தைச் செய்து முடித்தார்கள். எ-று. (அ)

மங்கையும்பருவமுற்றாள்மாதுசின்னாள்கள்செல்லத்
தங்கள்வல்வினையாற்றந்தைதாயடைந்தார்கள்வானத்
திங்கள்வாண்முகத்தாளன்புசிறந்தகாதலனோடொன்றாய்ப்
பொங்குமில்வாழ்க்கைபூண்டுபெரிந்தொருமகவையீன்றாள்.

(இ-ள்) அந்த மணப்பெண்ணும் யௌவனத்தையடைந்தாள். சிலநாள் சென்ற பின்பு அப்பெண்ணைப்பெற்றோர்கள் தங்கள் கருமவினைப்படி தேகவியோகமானார்கள். ஆகாயத்தில விளங்கும் சந்திரனுக்கு ஒப்பான பிரகாசம் பொருந்திய முகத்தையுடைய கேதுமதி யென்பவள் தன்னிடத்தில் அன்புமிகுந்த தன் கணவனோடு ஒருமையாக விளங்கும் இல்லற வாழ்க்கையை நடத்தி வந்து ஒரு குழந்தையைப்பெற்றாள். எ-று. (கூ)

பெற்றமைந்தனுக்குமூன்றாம்பருவமுஞ்செல்லப்பெற்றோ
னுற்றதீவினையூழ்ப்பற்றவூற்றமாங்கரத்தினீடோர்
புறமெழுந்துடைந்துபொல்லாப்புழுக்கணங்குடையச்சென்னீர்
மூற்றுவெம்மணமேவீசவடைந்தனன்மயக்கமூர்ச்சை.

(இ-ள்) பெற்ற சிறுவனுக்கு மூன்று வயது பூர்த்தியானபோது அவனைப் பெற்ற தகப்பன கொடிய ஊழ்வினை வசத்தால் தன் வலிய கையிலே பெரிய ஒரு சிலந்தி யெழுந்து உடைந்து பொல்லாத புழுக்கூட்டம் நெளியப்பெருகும்

உதிரத்தால் தேகமெங்கும் துற்கந்தம் வீச மயங்கி மூர்ச்சையடைந்தான். எ-று. (கo)

சிறுபொழுதகன்றபின்னர்மூர்ச்சையுந்தெளியவங்கோ
ரறிவுகொண்மனத்தனுகியாயிழைக்குரைக்கலுற்றான்
மறுவறுகுணத்தாயின்னவன்றுயர்க்காவிநில்லா
துறமவானறிகவிங்கோருண்மைநானுரைக்ககேளாய்.

(இ-ள்) சற்று நேரம் சென்றபின்பு மூர்ச்சைதெளிந்ததனால் சிறிது அறிவுதங்கிய மனம் உடையவனாகித்தன் மனைவிக்குச்சொல்லத்தொடங்கினான்:— நற்குண நற்செய்கைகளையுடையாளே! இந்தக்கொடிய துன்பத்தால் என் உயிர் என் உடலில் நிலையாமல் அவ்வானுலகத்தை அடையும் நீ அறியக்கடவாய். ஆதலால் இப்போது நான் ஒரு உண்மை சொல்ல நீ கேட்பாயாக எ-று. (கக)

இற்றதெம்மரபுமுன்னம்யார்செய்தீவினையோகாணேன்
சொற்றிற பாதகற்புத்தோகைநீயுடன்வந்தாயே
லற்றிடுமரபுநீயிவ்வருமகவொன்றாலாக்கை
நிற்றியென்றுரைத்தேயாவிநீத்தனனெனூல்வல்லான்.

(இ-ள்) இப்படி நேரிட்ட தன்மை முற்காலத்தில் எனது வமிசத்தில் யார் செய்த தீயகருமவினையோ? யானறியேன். என வார்த்தைக்கு விரோதமாய் நடவாதகற்புடையமாதே! நீயுடன்கட்டையேறுவாயானால் இம்சம்நாசமாய் விடும்; ஆதலால் இந்த அருமையான மைந்தனால் சந்ததிவிருத்தி செய்விக்க நீ உயிரோடு இருக்கக்கடவாய் என்றுசொல்லி கொடிய சாஸ்திரங்களில் வல்லவனான அந்தப்பிராமணன் இறந்து போனான். எ-று. (கஉ)

நினைதருநாணவனின்சொனீக்கருநிலைமைபூண்டு
மனைவியுஞ்செய்யத்தக்ககடன்களைவழாமலாற்றி
நனைமலர்மயிர்குறைந்தாள்நன்கலன்றுறந்தாளாவி
துனியுடலிதலையாகியுலைறந்தனடோன்றற்காக.

(இ-ள்) எண்ணத்தக்க நாயகனுடைய வார்த்தையைத் தள்ளக்கூடாதென்னும் உறுதியைப்பற்றி நாயகியாகிய கேதுமதியும் கணவனுக்குச்செய்ய வேண்டிய உத்தரகிரியைகளை யெல்லாம தவறாமற செய்து அவன் இறந்து போன காரணததால் குளிர்ச்சியான புஷ்பங்களைச்சூடததக்க கூந்தலைக்குலா சாரப்படி போக்கிவிட்டு நல்ல ஆபரணங்களை அகற்றி உடல் வருந்தத்தக்க விரத

வையாகித்தன் குமாரனைப்பற்றித்தன் உயிரைத் தாங்கிக் கொண்டிருக்கான். எ-று. (கக)

மூலமாமரபெலாமுன்முடிந்தனகிளைகளின்றிப்
பாலனுலாக்கவென்னு மபரிவினுலவறுமைமநோய்க்குக்
கூலியாந்தொழில்களசெய் துகொடுவரும்பொருளினூலே
வாலினுணவளித்துமகவினைவளர்ப்பதானுன்.

(இ-ள்) ஆதியாகும் வமிசமெல்லாம் சந்ததியிலலாமல முன்னமே ஒழிந்துபோயின இந்தகுமாரனைக் கோத்திர விருத்தியாகக்கே ணுமென்னு மெண்ணத்தினுல் தரித்திரமாகிய நோய் தீரு ம பொருட்கேகூலிக்கு வேலை செயது அதனுல் தான சமபாதிக்கும பணத்தை கொண்டு நலல ஆ கார மகொடுத்துத் தன மகனை வளர்த்து வந்தான். எ-று (கஏ)

வெயில்விரிபகற்போதெல்லாம்பணிவிடைமேவிநின்று
பயிலிருட்கங்குற்காலமில்லத்திற்படாந்துபாகச்
செயலினுலட்டவன்னஞ்செலவனுந்தானுந்துய்த்துத்
துயிலசெய்துகழிக்குநாளினூழ்வினைத்தொடராலோர்நாள்.

(இ-ள்) சூரியப்பிரகாசமான பகற்கால முழுதும் கூலிவேலை செய்து, இருள் சூழும் இராத்திரி காலத்தில் வீட்டிலிருந்து தான சமையல செய்த சாதத்தை மகனுந்தானும புசித்துச்சயனித்து, இபபடிக்காலங்கழித்துவருகையில் ஊழ்வினை சமபந்தத்தால் ஒரு நாள், எ-று. (கரு)

மைந்தனுந்தானுமூணடுதுயில்வளர்கின்றகாலை
வெந்திறலரசனகோயிற்புனைகலனிருக்கைமேவிச்
சுந்தரமணிபவெய்பெட்டியெடுத்தொருசோரனேக
முந்துறக்காவலாளாகணடனாமுடுக்கினுரால.

(இ-ள்) குமாரனும் தானும் போசனம் செய்து தூங்கிக்கொண்டிருக்கிற வேளையில் மிகுந்த பராக்கிரமத்தையுடைய அரசனது அரண்மனையில் அவன் தரித்துக்கொள்ளும் ஆபரணமுள்ள பொக்கிஷ அறைக்குள் பிரவேசித்து அதிலுளள ரத்தினுபரணங்கள் வைக்கப்பட்ட பெட்டியை யெடுத்துக்கொணடு ஒரு திருடன் செல்வதை வாயில்காப்பவர்கள் கணடு பின தொடர்ந்தார்கள். எ-று.

வஞ்சகனதனைக்கேதமதிமனைமுன்றிவிட்டு
நெஞ்சினும்விரைந்துசென்றுநீங்கினுனவிகாக்கக்
கஞ்சமென்பதத்தாளற்றைக்கங்குலிற்சத்தகேளா
வஞ்சியேவிழித்துநீங்கிக்கதவினையடைந்தாள்முற்றம்.

(இ-ள்) திருடன் அந்தப் பெட்டியைக் கேதுமதியின் வெளிவாசலில் போட்டு விட்டுத்தன்னுயிரைக்காத்துக்கொள்ளும்படி மனோ வேகத்தைப்பார்க்கிலும் மிகுந்த வேகமாய் ஓடினான். தாமரை மலர் போன்ற மெல்லியபாதத்தையுடைய கேதுமதி அன்று இராத்திரி அந்தச்சத்தத்தைக்கேட்டுத்திடுக்கிட்டெழுந்து கதவைத்திறந்து வெளிவாசலையடைந்தாள். எ-று. (௧௭)

சுடர்மணிபெய்தபெட்டிகண்டனளொடுதேற்,ஞ்சி
யிடைப்படிமிருளிலீதுகாரணமியாதோவென்று
நடுக்கமுற்றெண்ணுகின்றவேலையினகர்காப்பாள
ரடுக்குறவந்தார்பெட்டியருகினிலவளைக்கண்டார்.

(இ-ள்) பிரகாசிக்கின்ற ஆபரணங்கள் வைக்கப்பட்ட பெட்டியைக்கேதுமதி பார்த்து அதைத்தீண்டுதற்குபயந்து இது நடுராத்திரியில் இவ்விடத்திலிருக்கிற காரணம் என்னவென்று நடுங்கிச்சிந்தித்துக்கொண்டிருக்கிற சமைய மத்தல் நகர் காவற்காரர்கள் கூட்டமாக வந்து அந்தப்பெட்டியின் சமீபத்தில் கேதுமதி நிற்பதைப்பார்த்தார்கள். எ-று. (௧௮)

மெல்லியளிருதோளார்த்துவெந்துயர்விளைத்துமுன்ன
மெல்லியற்களவுகொண்டதெத்தனைசொல்லாயென்ன
வில்லையென்றுரையாள்மற்றிங்குண்டெனவிசையாளீது
தொல்லைவல்வினையால்வந்தவிளைவெனவொன்றேசொல்வாள்.

(இ-ள்) கேதுமதியின் கைகளைக்கட்டிக்கொடிய துன்பத்தையுண்டாக்கி இராத்திரி காலத்தில் திருடினவைகள் எவ்வளவென்று கேட்கக்களவு செய்ததில்லை யென்று சொல்லாமலும் செய்ததுண்டு என்று சொல்லாமலும் முற்பிறப்பில் செய்த தீயகருமத்தால் உண்டானபிரயோசனம் என்று ஒருவார்த்தையே சொல்லுவாள் ஆனாள். எ-று. (௧௯)

ஆங்கதுநிகழுமெல்லையாழியொன்றுடையதேரன்
றீங்கருந்துயரங்கொண்டதையலாடனைக்குப்பொல்லாத்
தீங்குசெய்சிந்தைசெய்யுமிருளினைச்சிதைப்பேனென்றே
வோங்கியகதிர்வாள்வீசியுதித்தனனுதயவெற்பில.

(இ-ள்) அப்படி நடந்து கொண்டிருக்கிற சமயத்தில் ஒரே சக்கரத்தையுடைய தேரிற் செல்லுஞ் சூரியன் சகிக்க முடியாத வியாகுலமடைந்த கேதுமதிக்குத்தீமை செய்ய நினைத்த இந்த இருளாகிய பாதகனை நான் அழிப்பேன்

என்று ஓங்கிய கிரணமாகிய வாளை வீசிக்கொண்டு உதயகிரியிலே உதயமானான் எ-று. (உ௦)

ஒருருட்பரியேழ்மான்றேர்க்கடவுளங்குதித்ததோற்றம்
வார்கடனெய்யதாகமாநிலத்தகளியாகச்
சீர்புனையண்டமென்னுஞ்சித்திரமணிமாடத்தி
லேர்புனைபகன்மாதிட்டசுடரெனவிருந்ததன்றே.

(இ - ள்) ஒரு சக்கரத்தையும், பூட்டப்பட்ட ஏழு குதிரைகளையுமுடைய தேர்க்கடவுளாகிய சூரியன் அவ்வுதயகிரியிலே உதயமான காட்சியானது நெடியகடல் நெய்யாகவும் பெரிய பூமி அகலாகவும் கொண்டு அழகுபொருந்திய அண்டம் என்னப்பட்ட விசித்திரமணி மண்டபத்திலே பேரழகு வாய்ந்த பகற்பொழுது என்னும் பெண் ஆனவள் ஏற்றி வைத்த திருவிளக்குப்போல் இருந்தது. எ-று. (உக)

உங்குலச்செல்வநாட்டிலுற்றதுநிந்தையென்ன
வங்குறுமளிகள்வாய்விட்டரற்றிடக்கண்ணீர்மல்கித்
தங்ககநெகிழ்ந்துதோன்றுந்தலைவற்குச்சாற்றல்போலப்
பங்கயமலர்கள்யாவுமலர்ந்தனபரிமளிக்கும்.

(இ - ள்) வளமான நாட்டிலே உமது குலத்திற்கு ஒரு பழி நேரிட்டது என்று அங்கே மது உண்ணவரும் வண்டுகள் வாய் விட்டுப்புலம்பக்கண்ணீர ததும்பி அன்பு தங்கிய மனம் தளர்ந்து எதிர்ப்பட்ட தங்கள் கணவனாகிய சூரிய பகவானுக்குத்தெரிவிப்பதுபோல் தாமரை மலர்கள் எல்லாம் மலர்ந்து பரிமளம் வீசும். எ-று. (உஉ)

பொங்குசெங்கரங்கடிக்குப்பொருப்பின்மேற்படர்ந்ததோற்றம்
வெங்கதிர்த்தலைவற்காணும்விழைவினால்விருப்பினோங்கித்
துங்கமாதிரமின்னார்கள்சூழிருட்டுயரநீத்துச்
கொங்கைமேற்பூசுகின்றகுங்குமச்சுண்ணம்போலும்.

(இ - ள்) மிகுதியான சிவந்த கிரணங்கள் எட்டுத்திக்குகளிலுமுள்ள மலைகளின் மேற் பரவிய காட்சியானது வெம்மையான கிரணங்களையுடைய சூரியனைக்கண்ட செயலால ஆசை மிகுந்து பரிசுத்தமான திக்குகள் என்னும் மாதர்கள் அன்று இராத்திரி சூழ்ந்திருந்த இருளால் உண்டான துயரத்தை நீக்கித்தங்கள் தனங்களின் மேல பூசிக்கொண்ட குங்குமப்பொடியை ஒத்திருந்தது. எ-று. (உ௩)

திசையிருணூறித்தெய்வச்செங்கதிர்க்கடவுள்செல்ல
வசையறுநகாகாப்பாளர்மன்னவற்குரைத்துமென்று
நசைமணிபபெட்டியேந்திநால்வரிலிருவர்சென்று
ரசைவிலாவெற்றித்தோகையாடும்கோயில்வாயில்.

(இ-ள்) எல்லாத்திசைகளிலும் நிறைந்த இருளை நாசஞ்செய்து தெய்வீகம் பொருந்திய சிவந்த கிரணங்களையுடைய சூரியபகவான் சென்று கொண்டிருக்கையில குறறமற்ற நகர காவலாளிகள் தாங்கள்கண்டு பிடித்த சஙகதியை அரசனுக்குததெரிவிப்போம் என்று இச்சிக்கத்தக்க திருவாபரணப்பெட்டியை தூக்கிககொண்டு நால்வரில இரண்டு பேர் நிலைபெற்ற ஜெயலட்சுமி திருவிளையாடல் செய்யும் அழகிய அரணமனைவாசலிற் போனார்கள். எ-று. (உச)

மணிக்கடைவாயிலாளர்க்கத்திறமுரைக்கவன்னோர்
தூணுக்கெனவேகிமன்னனடியிணைதொழுதுபோற்றிப்
பணிச்சுடர்ப்பெட்டிகணடதென்னலுமகொணர்கவென்னக்
கணிப்பவர்விடுக்கவன்னோர்சென்றிறைகழன்மேல்வீழ்ந்தார்.

(இ-ள்) அழகிய கடைவாசற் காவற்காரர்களுக்கு அந்தச்சங்கதியைச் சொல்ல அவர்கள் சீக்கிரஞ் சென்று தங்கள் அரசனுடைய திருவடிகளைத்தொழுது துதிசெய்து ஒளி வீசும் திருவாபரணபபெட்டி அகப்பட்டதென்று விணணப்பஞ்செய்யவும் அதைக்கொணடு வரக்கடவீர் என்று கட்டளையிடக்காவலாளர்களை உளளேவிட அவர்கள் போய் அரசன் பாதங்களில் விழுந்து பணிந்தார்கள். எ-று. (உரு)

அரசர்களரசாபோற்றுமையநின்கோயில்சேரித்
திருமணிப்பெட்டிகேதுமதியெனுந்திருட்டுநீலி
யுரியதன்மனைமுன்வைத்துநோக்கியேயுவகைபூத்து
வெருவறநிற்குங்காலையாஙகளும்விரைந்துசென்றேம்.

(இ-ள்) அரசர்களுக்கு அரசரானவர்களும் துதிக்கத்தக்கமகாராஜாவே! தேவரீர் அரணமனைக்கு இபபோது நாஙகள் கொணடுவந்திருக்கும் இந்தத்திருவாபரணபபெட்டியைக் கேதுமதி யென்னும் திருடியானவள் தனது சொந்தமான வீட்டின் வாசலில வைத்துப்பார்த்து மகிழ்ந்து சற்றும் அச்சமில்லாமல நின்று கொண்டிருந்த சமயத்தில் நாஙகளும் சீககிரமாக ஓடி அவ்விடத்துக்குப் போனோம். எ-று. (உகா)

கண்டனந்தண்டஞ்செய்துமுன்னநீகளவிற்கொண்ட
துணடெனிலுரையாயென்னலிவிதியெனவொன்றேசொல்வாள்
விண்டொருமாற்றமேனும்பேசிலள்வேறிஙனிப்பாற்
கொண்டோஞ்செய்யுமாறுதிருவுளஞ்சொற்றல்வேண்டும்.

(இ - ள்) பெட்டியருகில் நின்றுகொண்டிருந்த சேதுமதியைப்பார்த்துத் தெண்டித்து, நீ திருடிக்கொண்டுவந்தவைகள் இன்னமிருந்தால் சொல்வாயென்று கேட்டால், இது விதி என்கிற ஒருவசனத்தைசொல்லுகின்றாள்; வேறொரு வார்த்தையும் சொல்லுகின்றிலள்; இப்படியிருப்பதால அடியேஙகள் செய்யும் விதம் இதுவெனத்திருவாய் மலர்ந்தருளவேண்டும். எ-று. (உ௭)

என்றவவ்வுரைகள்கேட்டவிறைவனிப்பெட்டிமீண்ட
தொன்றுமெய்யதனுற்றுன்பமுற்றிடாதிவளையின்னே
வென்றிசேர்நகரம்நீக்கிவிடுத்திடும்வனத்திலென்ன
நன்றெனவணஙகிப்போற்றிநடந்தனர்நகரஙகாப்போர்.

(இ - ள்) என்று சொன்ன வார்த்தைகளைக்கேட்ட அரசன் "இந்த ஆபரணப்பெட்டி திரும்பக்கிடைத்தது உண்மை; அதனால் யாதொரு துன்பமும் செய்யாமல் இவளை இப்பொழுதே இந்தச்செயம் பொருந்திய நகரத்தின் எல்லைக்கப்பால கொண்டு போய் ஒரு காட்டில விட்டுவிடுங்கள்" என்று கட்டளையிட நகர் காவற்காரர்கள் நலலது என்றுவிண்ணப்பஞ்செய்து நமஸ்காரம் பண்ணித் துதித்து விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டுப்போனார்கள். எ-று. (உ௮)

வந்தவண்மனையினண்ணிவளர்சினமூளநோக்கி
யிந்தவூரொழித்துக்கானில்விடுக்குறமேகாவென்ன
மைந்தனைமுன்னடத்திமனத்திடைத்துன்பாயில்லா
நிந்தையாம்பாரந்தாங்கிநடந்தனள்கலங்கணித்தாள்.

(இ - ள்) அவளுடைய வீட்டுக்குப்போய் மிகுந்த கோபத்தோடு பார்த்து அரசனுக்கினையால் உன்னை இந்த நகரத்தைவிட்டு நீக்கிக்காட்டில் விடப்போகிறோம்; புறப்படு: என்று அக்காவலாளர்கள் சேதுமதிக்குச்சொல்ல, அந்தக் கைம்பெண் தனது மகனை முன்னால் நடத்திமனதில் மிகுந்த வருத்தங்கொண்டவளாய் அபாண்டமானபழியாகிய சுமையைச் சுமந்துகொண்டு தொடர்ந்து சென்றாள். எ-று. (உ௯)

வீதியுநகருநீங்கிவிடுத்தகன்றூர்கள்கானில்
மாதுயர்கண்ணீராருய்மைந்தனைநெருங்கப்புல்லிப்
பாதகவினைகள்கோடிபயிற்றியபுலைச்சியென்றன்
றீதுறுவயிற்றிலென்கொல்செனித்தனைமகனேயென்று.

(இ - ள்) வீதியையும் நகரத்தையும் விட்டு நீங்கிக்காட்டிற்கொண்டுபோய் விட்டு விட்டார்கள். அதனால் கேதுமதியானவள் மிகுந்த வியாகுலத்தோடு அழுதகண்ணீர் ஆறாகப்பெருகும்படி தன் குமாரனை மார்போடு பொருந்தத் தழுவி, மகனே! எண்ணிறந்த பாவச்செயல்களைச்செய்த பாதகியாகிய எனது தீமை மிகுந்த வயிற்றில் நீயேன் பிறந்தாய்? என்று சொல்லி, எ-று. (௩௦)

பருவரலெய்தித்தேறிப்பலன்கள்காய்கந்தமாதி
கருதருமைந்தற்கீந்துகடும்பசிக்கருந்தித்தானுந்
தெரிதருவழிகாணாளாயுறைந்தனள்செறிந்தகானிற்
புரிதருமீதுநிற்கவிறைநிலைபுகலுவாமால்.

(இ - ள்) சஞ்சலப்பட்டு மனந்தெளிவடைந்து பழங்கள்-காய்கள் முதலிய கந்த மூலவர்க்கங்களைத்தனது எண்ணுதற்கருமையான புத்திரனுக்குக்கொடுத்துத்தானும் மிகுந்த பசியைத்தணிக்கும்படி சாப்பிட்டுத்தெரியத்தக்கவழியைக் கண்டு பிடிக்கக்கூடாதவளாய் அடர்ந்த காட்டில் காலத்தைக்கழித்துக்கொண்டிருந்தாள். இது இப்படியிருக்க இப்பால் அரசனுடைய செயல்களைப்பற்றிச் சொல்லுவோம். எ-று. (௩௧)

## வேறு.

குருதிகொப்பளித்துமிழ்குமிவேலினன்
புரியுநாடுறைகுநர்புன்கண்டீர்தர
வரில்படுகானிடையசலச்சாரல்கண்
டெரிதரவேகினன்வேட்டைசிந்தையாய்.

(இ - ள்) சத்துருக்களுடைய சரீரத்திற்புகுந்து இரத்தத்தைக்கக்கும் கூர்மையான வேலாயுதத்தையுடைய அரசன் தான் ஆண்டுவரும் நாட்டில் வசிப்பவர்களுடைய வருத்தம் நீங்கும்படி புதர் நிறைந்த காட்டில் மலைச்சாரல்களை நோக்கி வேட்டையாடவேண்டுமென்கிற எண்ணத்தோடு போனான். எ-று. (௩௨)

பச்சிமதிசையினைநோக்கிப்பாய்பரி
யுச்சிமால்வரைமிசையுவரிசூழ்ந்தெனக்
கைச்சிலைமறவர்கள்கணங்கண்முன்செல
வச்சுவநாட்டினனசலவேலினன்.

(இ-ள்) சிகரங்களையுடைய பெரிய மலைகளின் மேல் கடல் சூழ்ந்துகொண்டாற்போல் கையில்வில்லை யேந்திய வேடர் கூட்டங்கள் முன்னே செல்ல, அச்சுவதேசமுடையவனும், தளர்ச்சியில்லாத வேலாயுதமுடையவனுமாகிய அரசன் விரைந்தோடும் குதிரைமேல் ஏறி மேற்குத்திசையை நோக்கிப்போனான். எ-று. (கஙு)

அவ்வழிக்கொடுமுடியகலச்சாரல்கள்
கவ்வைநீரருவிகள்கறங்கவானினைத்
தைவருமுடிவரைதாங்கித்தோன்றறுந்
தெய்வமால்வரையடிசென்றுசேர்ந்தனன்.

(இ-ள்) அந்த வழியில் கொடுமுடிகளையுடைய விசாலமான மலைப்பக்கங்களில் சப்திக்கின்ற சிற்றாறுகள் சலசலவென்று ஓட, ஆகாயமுகட்டைத்தடவும் மூங்கில்களைத்தன் முடிமேல் தாங்கிக்கொண்டு விளங்கும் தெய்வத்தன்மை பொருந்திய இமயமலையின் அடிவாரத்திற் போய்ச்சேர்ந்தான். எ-று. (கச)

சந்தனமணங்களேதரித்துமுத்தமுஞ்
செந்தழன்மணிகளும்புனைந்துசீதநீர்
முந்துறுமேகவண்படத்தின்மூடிய
விந்தமாநிலமகன்கொங்கையேய்க்குமால்.

(இ-ள்) சந்தன முதலிய வாசனை திரவியங்களை அணிந்து முத்துகளாலும் செந்தழல் போலும் மாணிக்கங்களாலும் அலங்கரிக்கப்பட்டுப்பனி நீர் மிகுந்த வளமான மேகமாகிய உத்தரியத்தினால் மறைக்கப்பட்டிருக்கும் இந்தப் பூமி தேவியின் தனங்களை ஒத்திருக்கும் அந்தமலைகள். எ-று. (கரு)

வரைவளர்மடங்கலுமதங்கொள்ளானையும்
விரவுநண்புடன்விளையாடிச்சென்றிடும்
திரிதருகுன்றவர்மாதர்தேன்கொடுத்
தரமடவார்தருமமிர்தங்கொள்வரால்.

(இ-ள்) அந்த மலையில் வாசம் செய்யும் சிங்கங்களும் மதயானைகளும் சிநேகமாய்க்கூடி விளையாடித்திரியும்; அங்கே சஞ்சரிக்கின்ற வேடர்களின் பெண்கள் தேனைக்கொடுத்து அதற்குப்பதிலாக அரமபா ஸ்திரிகள் தரும் தேவஅமிர்தத்தைப்பெறுவார்கள். எ-று. (கசு)

அருவியின்முழக்கமேபறையினார்ப்பெனக்
கரிகள்கைக்கொம்பொலிகாட்டவெண்மலர்
பொரியெனவரியளிபுதுமணங்கொள
மருதவண்புவியெனக்குறிஞ்சிவைகுமால்.

(இ - ள்) மலையிலிருந்து விழுகிற அருவியின் முழக்கம் பறையொலிக்கு ஒத்திருக்கவும், யானைகள்பிளிறுமொலி ஊது கொம்பொலி காட்டவும், வெண்மையான மலர்கள் மணப்பொரியாகவும், வரிகளையுடைய வண்டுகள் புதிய மணஞ்செய்து கொள்ளவும், அந்தக்குறிஞ்சி நிலமானது வளப்பமுள்ள மருத நிலமாக விளங்கியது. எ-று. (கஎ)

வேங்கையினகங்கலைவிரிக்கும்பாசடை
வேங்கையினகங்களுமிகுதிதோன்றுமா
டுங்கலேதேக்கிடநணுகுந்தோகைக
ளேங்கலேதேக்கிடவிரிக்குந்தூச்சிறை.

(இ - ள்) அந்த மலைகளில் உள்ள வேங்கைமரங்கள் இனிமையான பச்சிலைகளைப்பரப்பும்; வேங்கைப்புலிகள் வாசம் செய்யுங்குகைகள் மிகுதியாகத்தோன்றும்; யானைகள் தேக்குமரங்கள் அடர்ந்திருக்கும் இடங்களில வந்து சேரும் மயில்கள் கடவுட்கண்டோர் தெவிட்டும்படி பரிசுத்தமான கலாபத்தை விரிக்கும். எ-று. (கஅ)

உள்ளெலாம்பொய்யதாய்வேடத்தோங்கியோர்
கொள்கைபோற்புறவலிகொண்டுநீடியே
பொள்ளலாயுள்ளகம்பொதிந்தவேய்களு
முள்ளுறுதருக்களுமொய்த்துவாழ்வன.

(இ - ள்) அகத்தில் தவநியமமில்லாமல் வேடத்தால் தவமுடையார் போல் நடித்துக்காட்டுவோர் தன்மை போல், புறமபில வலிமைகொண்டு வளர்ந்து உள்ளில் பொந்தாயுள்ள மூங்கில்களும், முள் நிறைந்த மரங்களும் அதில் நெருங்கி விளங்கும். எ-று. (ககூ)

மன்னியதேனிறாற்கொண்டுவானுறச்
சென்னிசணிடியதருச்சினைக்குழா
முன்னிருண்மாரிநீர்வளர்த்தைதமுன்னியே
பின்னர்கைமாறுசெய்பெற்றிபோன்றதே.

(இ - ள்) ஆகாயத்தை யளாவ ஓங்கிய கிளைகளையுடைய மரத்தின் கூட்டங்கள் தங்கள் தலைமேல் நிலைபெற்றிருக்கும் தேன் கூடுகளைச்சுமந்துகொண்டு முன்பு கார் மேகங்கள் தமக்குச்செய்த உபகாரமாகிய நீர் வளத்தை நினைத்துப் பின்பு அந்த மேகங்களுக்குப்பிரதி உபகாரம் செய்யுந்தன்மை போல் விளங்கும். எ-று. (௪0)

கோலவெங்கதிரினைமறைத்துக்கொள்மணி
மேலணைநாகமேமேவிக்கீழுற
ஞாலமேயிடந்துகண்மலர்ந்துநாகணி
மாலெனநெடியதாய்வளர்ந்தகானமே.

(இ - ள்) காடுகள் இரத்தினங்களைக்கொண்டு வானுலகத்தை அளாவிய மலைமேல் தங்கி, அழகான சூரியனை மறைத்துக்கீழாகப்பூமியைப்பெயர்த்துத் தேனோடு மலர்ந்து, பாஞ்ச சனனியம் என்னும் சங்கு ஏந்திய விஷ்ணுவைப் போல் ஓங்கிவளர்ந்தன. [விஷ்ணுவுக்கு ஏற்றுங்கால் 'கொள்மணிநாகமேமேவி' என்பதற்குச்சிரோரத்தினமுடைய சேஷசயனத்தின் மேல்தங்கி என்றும், 'கதிரினை மறைத்து' என்பதற்குச்சக்கராயுதத்தால மறைத்து என்றும், 'இடந்து' என்பதற்கு வராக மாய்த்தோண்டி என்றும், 'கண் மலர்ந்து' என்பதற்கு அறிதுயில் செய்து, என்றும் பொருள் கொள்க]. எ-று. (௪௧)

குஞ்சரம்வாழ்வனகுறிகடந்தன
வஞ்சமுட்பன்றிகள்வரம்பிறந்தன
வெஞ்சலில்வல்லியமெண்ணிலாதன
கஞ்சுகக்கரடிகளகணக்குநீந்தன.

(இ - ள்) அந்த மலையிலே எண்ணிறந்த யானைகள் வாழ்ந்திருக்கும்; கபடமுள்ள முள்ளம்பன்றிகள் கணக்கில்லாதனவாம்; வலிகுறைதல் இல்லாத புலிகள் எண்ணிறந்தனவாம்; மேற்சட்டையுடைய கரடிகள் கணக்கு இல்லாதனவாம். எ-று. (௪௨)

குன்றுறைகொடுவரித்தனுவணங்குற
வன்றிறற்கொடுவரித்தனுவணக்கினன்
கன்றியமாகடக்குஞ்சரங்களாற்
கொன்றனன்மாகடக்குஞ்சரங்களே.

(இ - ள்) மலையில் வாழும் புலிகள் சரீரகாசமாம்படி மிகுந்த வல்லமையோடு நீண்டவில்லை வளைத்தான்; பகைத்த மிருகங்களை ஊடுருவிப்பாயும் அம்புகளினாலே மிகுந்தமதத்தையுடையயானைகளை அவ்வரசன்கொன்றான். எ-று.

எடுத்தகோலிறந்தனவிலக்கந்தாமரை
கடைப்படாதிறந்தனவிலக்கந்தாமரை
யடற்பகையஞ்சினமுள்ளம்பன்றியே
படுப்பதற்கஞ்சினமுள்ளம்பன்றியே.

(இ - ள்) அவ்வரசன் கையில் எடுத்த அம்புகளுக்கு இலக்காகித்தாவியோடும் மரை என்னும் மிருகங்கள் இறந்து ஒழிந்தன. இலட்சம் தாமரை மலர்கள் (மடுவில் இருத்தலால்) அழியாது பிழைத்தன. கொல்வதற்கு மிகக்கோபம் கொள்ளும் முன்போல கூர்மையான அம்புகளால் பகைக்கப்பட்டு முள்ளம் பன்றிகள் எல்லாம் தங்கள் வலிய சத்துருவான அந்த அரசனுக்குப்பயந்து விட்டன. எ-று. (சச)

கொற்றவெங்கணையினுற்கோட்டுத்தும்பிகள்
சுற்றுறுமெல்குகடுணிகளாயின
கற்றைவெங்கதிர்க்குலமைந்தற்காணடலா
லிற்றனபோன்றதவ்விருளின்குப்பையே.

(இ - ள்) ஜெயம்பொருந்திய கொடிய அம்புகளினால் தந்தங்களையுடைய யானைகளும் அடர்ந்திருக்கும் காடுகளும் துண்டுபட்டழிந்தன. அது தொகுதியாகிய கிரணங்களையுடைய சூரியவமிசத்தில் தோன்றிய அந்த அரசனைக்கண்டதினால் மிகுந்த இருள் கழிந்ததுபோல் இருந்தது. எ-று. (சரு)

அவ்வரைப்பரப்பெலாம்வேட்டையாடியே
வெவ்வியவிலங்குகள்பலவும்வீட்டினன்
மைமவளர்தருபல்வரையைநீங்கிமேற்
செவ்வியகானிடைத்திரியும்வேலையில்.

(இ - ள்) அந்தமலைச்சாரலில் வேட்டையாடி அனேகம் கொடிய மிருகங்களைக்கொன்றான். பின்பு மேகங்கள் வாழும் பல குன்றுகளை விட்டு நீங்கிச்சிங் காரவனத்தில் திரியும்போது, எ-று. (சசா)

வேழவெங்கானிடைவேட்டத்திச்சையா
லாழ்திறல்வீரர்கடமையகன்றுறும்
ஊழ்வினையின்றிறலோர்கிலாதொளிர்
பாழியந்தோளினன்பாரவில்லுடன்.

(இ - ள்) யானைகள் வாழும் கொடியகாட்டில்வேட்டையாடவேண்டுமென் னும் விருப்பத்தினால் மிகுந்த சாமர்த்தியமுள்ள படைவீரர்களைவிட்டு நீங்கித்

தனக்கு வரும் ஊழ்வினைப்பயனை அறியாமல் விளங்கும் வலிமை பொருந்திய தோளகளையுடைய அவ்வரசன் பெரிய வில்லுடன், எ-று. (சஎ)

பற்பலவிலங்குகடேடிப்பயைப்பைய
முற்றுமுட்புதல்களும்முழைபின்சூழலுஞ்
சுற்றினன்மங்கலமிழந்ததோகைமுன்
னுற்றவவ்விடத்திலோர்மறைவிலுற்றனன்.

(இ - ள்) பலவிதமான மிருகங்களைத்தேடிப்போய் நீண்ட முட்கள் நிறைந்த புதர்களிலும் கற்குகைகளிலும் மெள்ள மெள்ளத்திரிந்து, பின்பு மங்கல நாண் இழந்த மயில் போலும் சாயலையுடைய கேதுமதி என்பவள் முன்னே வந்திருந்த அந்த இடத்திலே ஒரு மறைவிடத்தில் தங்கி, எ-று. (சஅ)

ஈன்றதாயுடன்மகவிருத்தல்கண்டிலான்
சோன்றியவைகயினல்விலங்கின்றேற்றமென்
றூன்றுறச்சிலீமுகமொன்றுவிட்டனன்
றூனறதோர்மதலைமார்பகத்திற்றைத்ததே.

(இ - ள்) பெற்றதாயோமேகனும் அவ்விடத்திலிருப்பதைப்பார்க்காதவனாகித்தனக்குக்காணப்பட்ட தன்மையில ஏதோமிருக மிருக்கிறதென்று நினைத்து உறுதியாக ஓர் அம்பு தொடுத்து எய்தான். அந்த அம்பு வில்லின் நாணை விட்டு அகன்று போய ஒப்பற்ற பிள்ளையின் மார்பில் தைத்தது. எ-று. (சக)

எழுந்ததுகுருதிசீருயிருமின்றெனக்
கழிந்ததுபெற்றதாய்கண்டுபிள்ளைமேல்
விழுந்தனள்புரண்டனள்விம்மிவிம்மியே
யழுந்துயர்நாவினாலறையற்பாலதோ.

(இ - ள்) அம்பு தாக்கிய மாத்திரத்தில் இரத்தம் பெருகி அவனது உயிரும் இல்லை யென்னும்படி நீங்கியதை அவனைப்பெற்ற தாய் பார்த்து, தனது பிள்ளை மேல விழுந்து புரண்டு அழுது, அடைந்த துக்கத்தை வாயினால் சொல்வது அரிதாகும். எ-று. (ருO)

கோவெனப்புடைத்தனள்கொங்கைக்கொம்மைமே
லாவெனவாய்திறந்தாற்றினுள்முழுப்
பாவியெனவயிற்றினில்வந்தபாலகா
வோவிலாதுனையிழந்துய்வதேனென்று.

(இ - ள்) கொடிய பாதகியாகிய என் வயிற்றில் தோன்றிய மகனே! நானும் ஒழிந்து போகாமல் உன்னை இழந்து விட்டு உயிரோடிருப்பேனோ? என்று சொல்லிக்கோ என்று கூவி, தன் மார்பில் அடித்துக்கொண்டாள்; ஆ என்று வாய் திறந்து, அலறி அழுதாள். எ-று. (ருக)

தீயிடைவெதும்பியசெம்பினூசிக
ளேயவவ்வுடன்முழுதேற்றிஞலென
நோயுறுநெஞ்சினுண்முகத்தைநோக்கியே
காயெரிவேலினுன்கலங்கிக்கூறுவான்.

(இ - ள்) நெருப்பிற் காய்ச்சிய செம்பூசிகளை நெருக்கமாகச்சரீர முழுவதும் ஏற்றிஞற்போல் துன்படைந்த அந்தப்பெண்ணின் முகத்தைப்பார்த்துச் சுடுகின்ற அக்கினி போலும் சிவந்த வேலையுடைய அரசன் சஞ்சலத்தோடு சொல்லத்தொடங்கிஞன். எ-று. (ருஉ)

செப்பருந்துயர்ப்படுமோதுசிந்தையாற்
றுப்புறகினைந்திலேன்விலங்கெ ‑ ன்றேற்றமெண்
ணிப்பெருங்கொலையினையெய்தினேனிது
தப்பிலாதூழ்வினைமுடித்ததனமையே.

(இ - ள்) சொல்வதற்கரிய துன்பமடைகின்ற மாதே! மனதிஞல்தெரிந்து செய்யவில்லை; ஏதோ ஒரு மிருகமென்று கருதி இந்தப்பெரிய கொலைபாதகத்துக்கு உள்ளானேன்; இப்படி நேரிட்டது நிஜமாக ஊழ்வினையால் உண்டான பயனேயாம். எ-று. (ருங)

முன்செய்வல்வினையினூ ரகின்மூழ்கிட
வன்செயல்வினைவதாய்வந்துமூண்டதற்
கென்செய்கேனென்செய்கேன்குலமிறந்திடப்
புன்செயற்றுயருறப்பொடிபடுத்துமே.

(இ - ள்) முன் சென்மத்தில் செய்த கொடியவினையின் திறத்தால் நரகத்தையடையும்படி கொலை பாதகம் சம்பவித்து விட்டதே; இதற்கு என்ன செய்கேன்? என்ன செய்வேன்? இப்பாதகம் சூரியாகுலத்தையடையும்படி குலநாசஞ்செய்யுமே! எ-று. (ருச)

நினைப்பினுந்துயர்தருநீளுயிர்க்கொலை
சினக்கொடுந்தூதுவர்தண்டஞ்செய்திடும்
வினைக்கினியென்செய்கேனெனவிளம்பினான்.

(இ - ள்) நினைத்தாலும் துன்பத்தைத்தரத்தக்க உயிரைக்கொல்லுதலாகிய இப்பெரும் பாதகத்தைச்செய்தவனானேன். கோபம் மிகுந்த யமதூதர்கள் நரகத்தில் வருந்தும்படி தள்ளிப்பலவித தண்டனை செய்யத்தக்க இப்பாதகத்துக்கு என்ன செய்வேன்? என்ன செய்வேன்? என்று சொன்னான். எ-று.

கொண்டவெவ்வினையினாற்குலைந்துநெஞ்சகங்
கண்கணீர்சொரிந்திடுங்கருணைக்குன்றனான்
தண்கலைமதிமுகநோக்கித்தையலாள்
புண்கொளும்வெஞ்சினம்புழுங்கிக்கூறினாள்.

(இ - ள்) நேரிட்ட இந்தப்பெரும் பாதகத்தினால் மனவருத்தப்பட்டுக்கண்ணீர் விட்டுத்துக்கித்தவனும், தயையில் மலைக்கு ஒப்பானவனும் ஆகிய அவ்வரசனுடைய குளிர்ந்தபதினாறுகலைகள் நிறைந்த சந்திரன்போன்ற முகத்தைப் பார்த்து, அந்தப்பெண்வருத்துகின்ற கொடியகோபங்கொண்டு சொன்னாள். எ-று. (௫௬)

பாதகவினைபுரிகள்ளப்பாவியேன்
தீதுறுமாருயிர்தீர்த்திடாதுநீ
பேதையேற்கருமருந்தன்னபிள்ளையை
வேதனைசெய்தனைவிதியின்வண்ணமே.

(இ - ள்) பாவத்தொழிலைச் செய்யும் வஞ்சனையுள்ள பாதகியாகிய எனது குற்றமிகுந்த உயிரைப்போக்கி விடாமல் எனது அருமந்தமகனை விதியின் நியமப்படி தொலைத்து விட்டாய். எ-று. (௫௭)

மைந்தனைமனுகுலவிறையென்மாட்டொரு
நிந்தையுண்டாக்கியோநகரநீக்கினா
னந்தவாறென்னநீயறிதலின்றியே
மைந்தனாருயிரினைவருத்தஞ்செய்தனை.

(இ - ள்) மனுசரணசக்கரவர்த்தி என் பேரில் திருட்டு என்னும் அபாண்டகுற்றத்தைச்சுமத்தி நகரத்தை விட்டு நீக்கினான்; நீயும் அதுபோலவே தெரியாமல் என் பிள்ளையை மாய்த்து விட்டாய். எ-று. (௫௮)

மரித்திலேன்கணவனூர்மாய்ந்தபோதினும்
பொருப்புறழ்நிந்தையேசுமந்தபோதினும்
பரித்திடுமைந்தனேபதைத்தல்கண்டுமிங்
கிருப்பளோபெண்பிறப்பெவர்களேனுமே.

(இ - ள்) எனது நாயகன் இறந்து போன காலத்திலாவது, மலைக்கு ஒப்பான அபாண்டம் நேரிட்ட காலத்திலாவது, உயிரை மாய்த்துக்கொள்ளவில்லை. பத்து மாதம் சுமந்து பெற்ற மகன் இறந்து விட்டதை நேரில் பார்த்தும் இவ்வுலகத்தில் எப்படிப்பட்ட பெண்ணும் உயிரை வைத்துக்கொண்டிருப்பாளோ? இருக்கமாட்டாளே! எ-று. (௫௯)

பஞ்சிடைப்பற்றுதீபடருமாறுபோ
னெஞ்சிடைக்கொடுந்துயர்நிரம்பிநின்றதே
வஞ்சகமென்றவள்மயங்கிவீழ்ந்தன
டஞ்சமிலிறைவனுந்தளர்ந்துநின்றனன்.

(இ - ள்) பஞ்சில் பிடித்த தீ சடுதியிற்படர்வது போல் மனதில் கொடிய விசனம் மிகுந்துவிட்டது; இது வஞ்சனையாயிருக்கிறது என்றுசொல்லி, அவள் மூர்ச்சையாய் விழுந்து விட்டாள். தனிமையான அரசனும் சோர்ந்து நின்றான். எ-று. (௬0)

## வேறு.

வெருவவாய்திறந்தரற்றுதல்செவியிடைவீழ
வருகெளுத்தலையியல்படவங்ஙனஞ்செல்லுங்
குரவனுஞ்சிவசருமமாமுனியுளங்குறித்தே
யரில்படும்வனத்தியாவரோபெண்குரலழுதாள்.

(இ - ள்) யாவரும் அஞ்சும்படிவாய் திறந்து அலறுதலானது தமது திருச்செவியில் பொருந்தும்படி அவ்வளவு சமீபமாய் அவ்வனத்திற் போய்க்கொண்டிருந்த தேசிகரான சிவசருமமாமுனிவர் திருவுள்ளத்தில் சிந்தித்துக்கருமணல் மிகுந்த அந்த வனத்தில் யாரோ ஒரு பெண உரக்க அழுகின்றாள். எ-று. (௬௧)

யாதுகாரணமென்றரு[illegible]ந்தவணனுக
மாதுகண்ணினீர்சழு[illegible]லரடிவீழ்ந்தா
ளீதுவல்வினையாற்றலை[illegible]த்துநானேற்றும்
பாதகத்தனுவென்னவேவேந்தனும்பணிந்தான்.

(இ - ள்) இதன் காரணத்தை கேரில் அறியவேண்டுமென்று திருவுளம் பற்றி அம்முனிவர் அவ்விடத்திற்குப்போகவே, கேதுமதி என்னும் பெண் தனது கண்களினின்று பெருகுகின்ற நீரினால் விளக்கும்படி அவரது தாமரை மலர் போன்ற பாதங்களில் விழுந்து பணிந்தாள். இத்துன்பம் கொடுமையாகிய வினையினால் நுனிவளைத்து நாண் ஏற்றும் குரூரமான பாணத்தின் செயலென்று சொல்லி அரசனும் வணங்கினான். எ-று. (கூ௨)

செல்வனைக்கொடுங்கானிலேவளர்த்தியதெரிவை
யல்லலுற்றவண்மதிமுகநாடியேயையன்
சொல்லலுற்றனன்வாய்திறந்தரற்றியேசோரக்
கொல்லலுற்றதென்னறிவுறக்கூறுதிகொடியே.

(இ - ள்) குமாரனைக்கொடிய காட்டிலே வளர்த்திய பெண்ணும் துன்பம் அடைந்த வளுமாகிய கேதுமதியின் சந்திரனுக்கொப்பான முகத்தைப்பார்த்து அம்முனிவர் அவளுக்குத்தமது திருவாய் மலர்ந்து தேறுதல் சொல்லி, பெண்ணே! நீ வாய் விட்டுப்புலம்பிச்சோர்வடைய உன் மகன் கொலையுண்ட காரணம் யாது? நாம் அறியச்சொல்வாய். எ-று. (கூ௩)

அஞ்சலஞ்சனீசொல்லெனவாருயிர்பதைப்பாள்,
வஞ்சகக்கொடுமன்னனுனிந்ததான்வரவுஞ்
செஞ்சிலைக்கணையிவன்றனாலாருயிர்ச்சிதைவும்
விஞ்சவந்தனவென்றெலாம்விரிவுறவுரைத்தாள்.

(இ - ள்) பயப்படாதே! பயப்படாதே! சொல் என்று கேட்கவும், ஆவி பதைத்தலையுடைய கேதுமதி வஞ்சனையும் கொடுமையும் பொருந்திய அரசனால் களவு என்னும் பொய்க்குற்றஞ் சாட்டப்பட்டதும், இவ்வரசனுடைய சிவந்த அம்பினால் தனதருமை மகன் இறந்ததும் ஆகிய இவைகள் நேரிட்டனவென்று விவரமாகச்சொன்னாள். எ-று. (கூச)

மன்னவன்றனதுரையையும்வழக்கறக்கேட்டே
னன்னவனிந்தையுமறிந்திலையதுவலாலிங்ங
னின்னபாவமுமறிந்திலையென்செய்வாய்நீயு
முன்னர்வல்வினைவிளைத்திடிற்றப்புமோமுறைமை.

(இ - ள்) அரசனுடைய வார்த்தைகளையும் வழக்கில்லாதபடி கேட்டேன். அவனால் உனக்கு நேரிட்ட அபாண்டத்தையும் நீ தெரிந்து கொள்ளவில்லை.

அதுவுமல்லாமல் இப்போது நேர்ந்த இந்தப்பாதகத்தையும் அறிந்து கொள்ள வில்லை. நீ செய்யத்தக்கதென்ன? முன் ஜென்மத்தில் தீயவினை செய்திருந்தால் அது முறையாக இப்போது தீயபலனைக்கொடாதொழியுமோ? ஒழியாது. எ-று.

என்னவின்னனகூறுமாதெழில்முகநோக்கி
அன்னவன்கொலைநிந்தையென்றனையஃதணங்கே
முன்னைஞானமதறிந்திலைமாயையின்முறையால்
உன்னும்வெந்துயரிவ்வண்ணமாகவந்துறல்கேள்.

(இ-ள்) என்று இது போன்ற சங்கதிகளைச்சொல்லிக்கேதுமதியின் அழகிய முகத்தைப்பார்த்து அந்தக்கொடிய கொலை-அபாண்டம்-என்று சொல்லிய பெண்ணே! பூர்வஞானமென்பதை யறிந்தாயில்லை! மாயையின் திறத்தினால் நினைக்கப்பட்ட இக்கொடுந்துயரமானது இவ்விதமாக வந்து சம்பவித்தது. அதை நீ கேட்பாயாக. எ-று. (கசு)

துஞ்சிறந்தமுன்பிறப்பினிற்றழுவுநின்கணவன்
மஞ்சிகன்பெயர்மறைநெறிகற்றறிமடமா
யெஞ்சலில்பொருளெய்திநன்மடக்கையர்பலருட்
கொஞ்சுபைங்கிளிநின்னிடைமோகமேகொண்டான்.

(இ-ள்) இப்போது இறந்துபோன முந்திய பிறப்பில் உன்னைத்தழுவிய மஞ்சிகனென்னும் பெயரையுடைய உனது கணவன் வேதமார்க்கத்தைக்கற்றறிமோழையாய்க் குறைவில்லாத திரவியத்தைச் சம்பாதித்து, அழகுள்ள பல பெண்களுக்குள் கொஞ்சுகின்ற பசுங்கிளிபோன்ற உன்னிடத்தில ஆசைவைத்தான். எ-று. (கஎ)

மோகமிக்குநின்னிளநலம்பருகிடுமுறைநாட்
பாகமெல்லியலெம்பிராற்கேயொருபத்தன்
சோகமில்லருச்சனைசெயுமலர்களைத்தோட்டத்
தேகுமஞ்சிகனெடுத்தனனவனெடுப்பதன்முன்.

(இ-ள்) காம மிகுந்து உனது இளம்பருவ வழகையனுபவித்து வரும் நாளில், பார்வதியைத் தமதிடப்பாகத்திலுடைய சிவபெருமானுக்கே அன்பராகிய ஒருவர் குற்றமில்லாத அருச்சனைசெய்வதற்காகும் புஷ்பங்களையுடைய நந்தவனத்துக்கு மஞ்சிகனென்போன்சென்று, அவ்வன்பன் எடுப்பதற்குமுன்பாகவே அங்குள்ள புஷ்பங்களை யெடுத்துக்கொண்டு போய்விடுவான். எ-று. (கஅ)

எடுத்ததேன்றுளிமதுகரநறுமலரிசையத்
தொடுத்தமாலையைநின்னெடுங்கருங்குழற்சூட்டி
விடுத்தபாதியைத்தன்முடிச்சிகையினின்மிலைத்தாங்
கடுத்தவேட்கையிலழுந்தியேகிடந்தனனவலன்.

(இ - ள்) தான் எடுத்ததும் தேன் துளிக்கின்றதும் வண்டுகள் மொய்ப்பதும் வாசனை பொருந்தியதுமான மலர்களைப்பொருத்தமாகத் தொடுத்த பூமாலையை உனது நீண்ட கருமையான கூந்தலில் சூட்டுவித்து மிகுந்த பாதியைத் தனது குடிமியில் தரித்துக்கொண்டு அதற்குத்தக்கபடியான மோகஇச்சையில் அந்தச்சீலமில்லாதவன் விழுந்து கிடந்தான். எ-று. (கசு)

முருகுநாறியமொய்மலர்கொய்திடத்தோட்டத்
தருகுவந்தனன்பத்தனங்கணிமலர்காணு
னுருகுகாலையிற்கண்டுளோருரைப்பதானின்னின்
மருவநிற்தையாமயல்சொலிக்கணவனைமறைத்தாய்.

(இ - ள்) வாசனை வீசும் நெருங்கிய புஷ்பங்களைப்பறிக்கும்படி அந்த அன்பன் நந்தவனத்துக்கு வந்து அழகிய பூக்களைக்காணாமல் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கையில் பார்த்தவர்கள் சங்கதியைச்சொல்லியபடியால் (தேடிவந்து கேட்டபோது) உன்னைத்தழுவும் பொருட்டுக்கணவனை வைத்துக்கொண்டே மெய்யாய் இல்லையென்று சொல்லி மறைத்து விட்டாய். எ-று. (எo)

அரசனுக்கிதுவுரைத்துமென்றவனறிவித்துங்
குரிசில்கேட்டிலன்கேட்டிடாக்குரிசிலாமிவனே
யுரியவெம்பிரானருச்சனைக்கூறுவந்ததனு
லரியவாவிகொண்டிரேனெனவுடலொழித்தகன்முன்.

(இ - ள்) அந்த அன்பன் இந்தச்சங்கதியை அரசனுக்குத்தெரிவிப்போம் என்று தெரிவித்தும், அந்த அரசன் அதை விசாரிக்கவில்லை; அப்படி விசாரிக்காமல் விட்ட அரசன் இவன் தான். எனது பெருமானாகிய சிவபிரானுக்குச் செய்யும் அருச்சனைக்கு இடையூறு நேரிட்டபடியால் இனி நான் இந்த வுயிரை வைத்துக்கொண்டிருக்கமாட்டேனென்று தன் பிராணனை மாய்த்துக்கொண்டான். எ-று. (எக)

சத்திபாகனர்பூசையிற்றவறுவந்தெய்தி
லுத்தமக்குணமுதன்மையோர்துறப்பர்தம்முடலை
மத்திமர்க்குறிஸ்வழார்பரிகாரமாம்வழியி
லித்திறத்தினிலெண்ணுருதுறைகுவரிழிந்தோர்.

(இ - ள்) பார்வதி பாகனாகிய சிவபெருமான் பூசைக்கு இடையூறு வந்து நேரிடுமானால் உத்தமக்குணமுடைய பக்த சிலர்கள் தமதுடலை யொழித்துக் கொள்வார்கள்; மத்திமகுணமுடை யோருக்கு நேரிட்டால் பிராயச்சித்தம் செய்கின்ற வழியில் சிறிதும் பிசகமாட்டார்கள்: அதமகுணமுள்ள கீழ் மக்களோ இம்மார்க்கங்களைச்சற்றுங்கவனியாமல உடலையே பாதுகாப்பார்கள். எ-று.

ஆதலாற்பொதுநடம்புரிதாணிழலடைந்தான்
கோதமுழக்குறுசீக்கொடுகிருமியின்குழுவுந்
தாதுமூளையுஞ்சோரியுநாறுபுன்றலையி
லாதிநாயகற்காயபூவணிந்திடுமதனால்.

(இ - ள்) ஆகையால் அந்த அன்பன் அம்பலவாணன் திருவடி நிழலையடைந்தான். குற்றமிகுந்த அழுக்கான சீக்கொண்டு கிருமிக்குழுவுந்தோன்றித் தாதும் மூளையும் இரத்தமும் துர்நாற்றம் வீசும் இழிந்த தலையில், முதற் பொருளாகிய சிவபெருமானுக்காகும் பூக்களைத் தரித்துக்கொண்டபடியால், எ-று.

தந்தவிக்கொடும்பிறப்பினில்விளைந்ததுதவறாய்
முந்துநின்பதிதலையிடைப்புற்றெனமுளைத்துச்
சிந்துசோரியுங்கிருமியுநாற்றமுஞ்செறிந்த
திந்தவூழினாலுலர்ந்திடாதாமுநாளிறந்தான்.

(இ - ள்) வந்த இந்தக்கொடுமையாகிய பிறப்பில் அம்சாகமாய் விளைந்தது உன் கணவனுடைய தலையில் புற்றென்னும் புண்ணுண்டாய்ச்சிந்துகின்ற இரத்தமும் கிருமியும் துர்நாற்றமும் பொருந்தி ஆறிடாதாமல் வருந்தும் நாளில் இந்த ஊழ்வினையால் இறந்து போனான். எ-று. (எசு)

நங்கைநின்பொருட்டேயிதுநடந்தனவதனான்
மங்கலக்குணமிழந்தனைமயிரதுகுறைந்தா
யங்கயற்சொலுநிந்தையிங்கனுபவித்தனைநீ
பொங்குமீதுநின்கிளையெலாஞ்சுட்டலாற்போகா.

(இ - ள்) பெண்ணே! உன்னாலேயே இதுநேரிட்டது; ஆகையால் நீ அமங்கலமாமங்கையாய்த் தலைமயிரிழந்தாய்; முந்திய சென்மத்தில் பொய் சொன்னதினால் இந்தச்சென்மத்தில் நீ அபாண்டத்துக்கு ஆளாயினாய். இப்பெரும் பாதகம் உனது சுற்றத்தாரையெல்லாம் சுட்டெரிக்காமல் போகமாட்டாது. எ-று.

ஆயதன்மையைமுற்றுநீயுணர்ந்திடவறிவா
யேயவிஞ்சைநாங்காட்டுதுமென்றருள்பெருகித்
தூயகுண்டிகைநீரினையோதியேதூற்ற
மாயமாந்துயில்வந்ததுவிண்டதுமடமே.

(இ - ள்) இவ்விதமாய்க்காரண காரியத்தைமுழுதும் நீயே தெரிந்துகொள்வாய். பொருத்தமான வித்தை யொன்று காட்டுகிறேன் என்று அருள் சுரந்து பரிசுத்தமான குண்டிகையிலுள்ள நீரை மந்திரஞ்சொல்லித்தெளிக்க மாயமாக நித்திரை வந்தது; பூர்வ அஞ்ஞானம் நீங்கியது. எ-று. (௭௬)

அப்பவத்தினிளிசழ்ந்தனவாதியோடந்தந்
தப்புறுவகைதெரிந்தனளுணர்ந்தனடாங்கிச்
செப்பிணைத்தபொன்முலையினளருட்சிவசரும
வொப்பின்மாமுனிசரணில்வீழ்ந்திரங்கியேயுரைப்பாள்.

(இ - ள்) அந்தப்பிறபபிலே உண்டான சங்கதிகளெல்லாம் ஆதியோடு அந்தமாகத்தப்பிலலாமல தானே தெரிந்து கொண்டு செம்பொற்கலசத்திற்கு ஒப்பாகிய தனத்தையுடைய கேதுமதி கிருபை மிகுந்த ஒப்பு இல்லாத சிவசரும மாமுனியின் திருத்தாள்களைப்பணிந்து பரிவுடன் சொல்லத்தொடங்கினாள். எ-று. (௭௭)

அய்யநின்னடிப்போதினுக்கடைக்கலம்புகுந்தேன்
வெய்யபாவமாம்விடத்தினைத்தீர்த்திடவேண்டுஞ்
செய்யுமாறென்றுகாண்கிலேனறிருவுளமறியேன்
வைதலுற்றனன்பாவியேன்பாவியேனென்றாள்.

(இ - ள்) சுவாமி! தேவரீர் பாதாரவிந்தங்களையே அடைக்கலமாக அடைந்தேன்; கொடுமையாகிய பாவமென்னும் விடத்தைப்போக்கும்படி திருவுளம் பற்றவேண்டும்; செய்யும் கைமமாறு வேறொன்றுங் கணடிலேன்; தேவரீர திருவுளத்தை யறிந்திலேன்; மிகவும் வருத்தப்படுகின்றேன்; மிகுந்த பாவியாகிய அடியேன் என்று சொல்லினாள். எ-று. (௭௮)

## வேறு.

இன்னல்கூர்மடந்தைதிரும்பநோக்கிமுனிவரனின்னனவிசைப்பான்
முன்னரும்பவமீதெளிதலதீர்க்குமுறைபுரிதலமுளததுகேள்
சென்னென்முத்தர்தூண்கட்டுணைமாதர்நகையொளிதிருடியதென்றுக்
கன்னலின்முத்தகுவனபோன்றுகதிர்விடுங்கடவுண்மாநகரும்.

(இ - ள்) மனவருத்தப்படுகின்ற மங்கையின் அழகிய முகத்தைப்பார்த்து அம்முனிவர் சொல்லத்தொடங்கினார்:—நினைப்பதற்கரிய பெரிய இப்பாவம் எளிதல்ல; அதை நீக்கிக்கொள்ளும் மார்க்கத்தைச்செய்வதற்குத்தகுந்த தலமொன்றிருக்கின்றது சொல்லக்கேள். செந்நெல்லில் உண்டான முத்துகள் தூணில் கட்டப்பட்டிருப்பதனால் மங்கையருடைய பல் ஒளியைத்திருடியது என்று கரும்பில் உண்டாகும் முத்துகள் சிரிப்பனபோல் ஒளி வீசும் தெய்வத்தன்மையுள்ள பெரிய பட்டணமும். எ-று. (எக)

தாதவிழ்சோலைமலர்மதுதூற்றதழைமயிற்காரெனவகவு
மூதெயிற்பாவநாசநீயடையின்முற்றுறுமிடும்பைகளினக்கே
யாதலான்மதலையிறக்குமுன்னெடுத்தேயரன்றிருக்கோயினீறணியிற்
போதுறுசடையனருளினாற்பாவம்பொடிபடுமெனவருள்புரிந்தான்.

(இ - ள்) சோலையில் மகரந்தத்தைச்சொரிகின்ற புஷ்பங்கள் தேனைப்பொழிவதால் சந்தோஷிக்கும் மயில்கள் மேகமென்று கருதி ஆடுகின்ற பெரியமதில்களையுமுடையதுமான திருப்பாவநாசப்பதியை நீயடைந்தால் உனதுதுன்பங்களெல்லாம் ஒழிந்து போகும். ஆகையால் மகனிறப்பதற்குமுன் அவனைத்தூக்கிக்கொண்டுசிவபெருமானது திவ்விய ஆலயத்துக்கு எடுத்துக்கொண்டுபோய்த் திருவெண்ணீறு அணிவித்தால் கொன்றைமாலை தரித்த சிவபெருமான் திருவருளினால் பாவம் பஸ்பமாகுமென்று திருவாய் மலர்ந்தருளினார். எ-று. (அ௦)

மனுகுலமரபின்வள்ளலைநோக்கிவாய்மலர்ந்தரசர்களரசு
நினைவருமகவைவருத்தினைமைந்தனிறக்குமுனீவிரைந்தேகித்
துனிதருமிந்தப்பாவமும்பொல்லாத்தோடமுந்தீரவுறநாகம்
புனிதநீர்வாவியாடுகென்றுரைத்துப்போயினன்புண்ணியமனையான்.

(இ - ள்) மனுவமிசத்திற்றோன்றிய வேந்தனைப்பார்த்து அரசர்களுக்கு அரசனே! நினைப்பதற்கரிய பிள்ளையைக்கொன்றாய். அம்மகன் இறப்பதற்குமுன் நீ சீக்கிரஞ்சென்று துன்பத்தைத்தரும் அபாண்டத்தினால் வந்த பாவமும் இந்தக்கொலை பாதகமும் நீங்கும்படி அனந்தனாலுண்டான அமண்டுகேதீர்த்தமென்னும் திருக்குளத்தில் ஸ்நானம் செய்-என்று திருவாய் மலர்ந்து புண்ணியமே ஓர் வடிவமாக வந்த அம்முனிவர் சென்றருளினார். எ-று. (அக)

அத்திறத்தரசனரனடிசிந்தித்தன்புகொண்டேகுறுகாலை
மொய்த்துறுமமைச்சர்தங்களைநோக்கிமுறைமுறைவருகவென்றழைத்துச்
சித்திரபானுவெனுமகவரசுசெயல்புரிந்திடவரியணைமேல்
வைத்திடிர்தவமேபுரிந்திடவெனதுமனத்திடைதுணிந்தனனென்றே.

(இ - ள்) அத்தன்மையினால் அவ்வரசன் சிவபெருமானுடைய சேவடிகளை நினைந்து அன்புகொண்டுசெல்லும்போது, தன்னைச்சூழ்ந்துள்ள மந்திரிமார்களைப் பார்த்து வரிசைக்கிரமமாக அழைத்து, சித்திரபானு என்னும் தன்மகனை இராஜகாரியங்களைப்பார்த்து வரும்படி சிம்மாசனத்தில் இருக்கச்செய்து முடி சூட்டுங்கள்; யான் தவஞ்செய்யும்படி எனது மனதில் நிச்சயிக்கலாயினேன் என்று சொல்லி, எ-று. (அஉ)

ஆங்கவர்தம்மைவிடுத்திடுமிறைவனடைந்தனனடர்சினைபழுத்த
மாங்கனிதேன்பாய்வயலிடைமேதிமருப்பினாலடித்திடுங்கரும்பின்
தேங்குகண்டோறுஞ்சொரிந்தவெண்முத்தஞ்சினையெனக்குருகடைகிடக்கு
மோங்குபல்வளஞ்சூழ்பாவநாசப்பேருரியதாய்விளங்கியநகரே.

(இ - ள்) அம்மந்திரிமார்களை விட்டுவிட்டு அவ்வரசன் கிளைகளில் பழுத்த மாம் பழங்களின் தேன் பாயும் வயலில் எருமைகள் கொம்பினாலடிக்கும் கரும்புகளின் பருத்த கணுககளிலிருந்து உதிர்ந்த வெண்மையான முத்துகளைப் பார்த்து நாரைகள் தமது முட்டைகளென்று அடைகாத்துக்கொண்டிருக்கும் மேன்மையான பலவளம் நிறைந்த பாவநாசமென்னும் உரிமைப்பெயரையுடைய நகரம் வந்து சேர்ந்தான். எ-று. (அங)

அன்னமுன்னறியாவெண்பிறைக்கொழுந்தோடரும்பியசெஞ்சடைக்கடவுள்
மன்னவீற்றிருக்குமாலயம்புகுந்துமனுவிறைசரணனன்றுரைத்த
பன்னகவாவித்தண்புனலாடிப்பணிந்தரன்றாள்களைவழுத்த
முன்னரங்கெய்துமக்கொலையோடுமூலவல்வினையிறந்ததுவே.

(இ - ள்) அன்னப்பட்சியும் அறியாத வெண்மையான இளஞ்சந்திரனுடன் தோன்றும் சடாமகுடத்தையுடைய சிவபெருமான் நிலைபெற்று எழுந்தருளியிருக்கும், திருக்கோயிலுட் புகுந்து, மனுசரண சக்கிரவர்த்தி முனிவரால் சொல்லப்பட்ட அனந்தன் திருக்குளத்தின் குளிர்ச்சியான தீர்த்தத்தில் முழுகிச் சிவபெருமானது திருவடிகளை வணங்கித்தோத்திரஞ் செய்ய, முன்னே தேடிக் கொண்ட கொலைபாதகத்தோடு பூர்வவினைகளும் நீங்கின. எ-று. (அச)

மதிநுதற்கேதுமதிமகவெடுத்துவளங்கொளுநகர்வயினடைந்து
சதுமறையொலிக்குமெங்கைகோயிலினுட்சார்ந்தனன்சைவநாயகர்தம்
பதமலர்பணிந்துதனையனைக்கிடத்திப்பகர்ந்திடச்சைவநாயகரு
மிதமுறக்கோயினீறறுபூந்தட்டெடுத்தனர்தாமனைக்கையில்.

(இ - ள்) சந்திரன் போன்ற நெற்றியையுடைய கேதுமதியானவள் தன் அறிவுள்ள குமாரனை யெடுத்துக்கொண்டு பலவளங்கள் நிறைந்த பாவநாசப்

பதி வந்து அடைந்து, நான்கு வேதங்களும் முழங்குகின்ற எமது பெருமானுடைய ஆலயத்தைச்சார்ந்து, அங்குள்ள சைவநாயகராகியகுருக்களுடைய திருவடிகளைப்பணிந்து, தனது மகனைப்பூமியின்மேல் கிடத்திச்சங்கதிகளைச்சொல்ல, அவர் இனிமையாகத்திருக்கோயிலுள் இருந்த விபூதியுள்ள அழகிய தட்டத்தைத்தமது தாமரைபோன்ற திருக்கரத்தினலெடுத்துக்கொண்டு வந்தார். எ-று.

புரிகொணூன்மார்பில்விளங்கிட நுதலிற்பொடிதிரிபுண்டரம்விளங்கப்
பரனெனவக்குமணிவடந்தயங்கப்பவளவாய்திறந்தெதிருமைப்பார்
கருதிடேல்வேறென்றிப்பதியிந்துகாந்தமிவ்விலிங்கமேயிந்து
வருள[illegible]ரவிநீரதுவுமச்சிலையகத்துணீர்போலும்.

(இ - ள்) [illegible]ல் முப்புரிநூல்புரளவும் நெற்றியில் விபூதி திரிபுண்[illegible]வும் [illegible]பெருமான் போல ருத்திராக்கமணிவடம் பொலியவும் பவள[illegible] திறவாய் மலர்ந்து, இந்தத்தலம் சந்திரகாந்தம் போலாகும்; இந்[illegible]ந்திரன் போலாகும்; அவரது திருவருளே கிரணம் போலாகும்; மேன்மையாகிய இந்தத்திருக்குளத்தின் தீர்த்தமே அந்தக்காந்தத்திலுண்டாகும் நீர் போலாகும். எ-று. (௮௫)

செல்வமுண்டாக்கும்ஞானமுண்டாக்குஞ்செப்பருந்தெளிவையுண்டாக்கும்
கல்வியுண்டாக்கும்வலிமையயுண்டாக்குங்காதலாஞ்சுற்றமுண்டாக்குஞ்
சொல்லையுண்டாக்குமைந்தருண்டாக்குந்தொலைவிலாவாயுளுண்டாக்கும்
பல்பலவின்பப்பலிப்பையயுண்டாக்குமபாவநாசத்தர்வெண்ணீறு.

(இ - ள்) செல்வம், ஞானம், சிவஞானபோதம், கல்வி, வல்லமை, அன்புள்ள சுற்றம், சொல்வாக்கு, சந்ததி, நீண்ட ஆயுள், இன்னும் பற்பல சுகங்கள் ஆகிய இவற்றை இப்பாவநாசதலத்தின் திருவெண்ணீறு கொடுக்கும. எ-று. (௮௭)

எனவிருவிரலினீற்றினைப்பிடித்தேயீசனைந்தெழுத்துன்னித்
தனையன்மேற்போட்டுத்தாமரைக்கையாற்றடவலுந்துயிலுணர்ந்தவன்போ
னினைவுறவெழலுமீன்றதாய்களிததாணிலத்தோரதிசயித்தார்
பனிமலர்க்கொன்றைப்பரமனாருளைப்பழிச்சியேவணஙகினர்பலகால்.

(இ - ள்) என்று சொல்லித்தமது இரண்டு விரல்களினல் திருவெண்ணீற்றையெடுத்துச்சிவபெருமானது திருபஞ்சாக்கரதைதத்தியானித்து அம்மைந்தன்பேரில் போட்டுத்தமுடைய தாமரை மலர் போன்ற திருக்கரத்தினல் தடவலும், நித்திரை தெளிந்து எழுந்தவன் போல வெழுந்திருத்தலும, அவனைப்பெற்ற தாயு மனமகிழ்ந்தாள், பூலோகத்தார்கள் ஆச்சரியப்பட்டார்கள். குளிர்ந்த கொன்றைப்பூமாலை தரித்த சிவபெருமான் திருவருளை பலதரமும் வாழ்த்திவணங்கினார்கள். எ-று. (௮௮)

மாலயன்போற்றுமக்கரைடைந்துவழுத்துவோர்வந்தநீவினையின்
மூலமேகளைந்துநெறிமுறைவாசம்புரிதலான்முன்னமேநரகிற்
சாலவேதுன்புற்றிளைத்தயாந்திருக்குந்தமர்களைச்சிவபுரஞ்சேர்த்துக்
கோலநன்முத்தியெய்துவதாமுமுடிவினிற்குலம்புவிவிளங்க.

(இ - ள்) பிரம விஷ்ணுக்கள் துதிசெய்யும் அந்தப்பாவநாசத்தைச்சேர்ந்து துதிசெய்கிறவர்கள், ஜனனங்கள் தோறும் விடாமல்தொடர்ந்து வந்த பாவத்திற்கு மூலமாகிய ஆணவமலத்தை வேரறக்களைந்து நன்னெறி முறையால் அங்கே வாசம் செய்வதனால் முன்னமே நரகில் துன்பம் அடைந்து இளைத்து வாட்டமுற்றிருக்கின்ற பிதிரர்களைச்சிவலோகத்திற் [illegible] பூமியில் விளங்கத்தாமும் முடிவில் அழகிய முத்[illegible] வார்கள். எ-று. ([illegible])

மாமனுசரணமென்றுவந்தடையவல்வினைகெடுத்[illegible]
ஞமமாயதற்குத்திசமனுசரணதீர்த்தமென[illegible]
தோமறுபனாட்டவம்புரிந்தரசனன்றலையின்மூன்றையுமெரித்த
சோமசேகரன்பொற்றாணிழலடைந்தானறுவக்குறுபிறவிவேரறுத்து.

(இ - ள்) மகாமனுசரணமென்று வந்து முழுகக்கொடிய வினைகளை நாசஞ்செய்துகோரியவரத்தைத்தருதலால் அந்தத்திருக்குளத்திற்கு மனுசரணதீர்த்தமென்று ஒரு நாமஞ்சூட்டினார்கள். பலநாள் குற்றமற்ற தவஞ்செய்து அவ்வரசன் ஆதி காலத்தில் திரிபுரத்தை யெரித்த சிவபெருமானது அழகிய திருத்தாள் நிழலையடைந்தான். எ-று. (௧௦)

அம்மனுசரணவாவியின்பெருமையளவிடற்கெளிதகொலந்நீர்
மெய்ம்மையோர்திவலையொருவன்மேற்படிலவெவ்வினையெனும்விறகினுக்கழலாம்
கைம்மலிகண்டன்றிருவருண்மலர்ந்துமருவுவண்டானமீதென்ன
வெம்மையாணந்திசனற்குமாரற்கேயிசைத்தனனெம்பவமறவே.

(இ - ள்) அந்த மனுசரண தீர்த்தத்தின் சிறப்பை அளவிட்டுச்சொல்ல முடியாது. அந்தத்தீர்த்தத்தின் ஒரு சிறு துளி யாதாமொருவன் சரீரத்திற் பட்டால் அது அவனது பூர்வவினை யென்னும் விறகை நாசஞ்செய்யும் அக்கினியாகும்; கரியகண்டத்தையுடைய சிவபெருமான திருவருள் சுரந்து எழுந்தருளியிருக்கும் திவ்வியதலம் இதுவென்று எம்மை ஆளாகவுடைய நந்திதேவர் எமது பாவம் நாசமாகும்படி சனற்குமாரருக்குத்திருவாய் மலர்ந்தருளினார். எ-று. (௧௧)

மனுசரணசருக்கம் முற்றும்.



# கிளிச்சருக்கம்.

இருவினைத்தொடரறுத்தின்பமுத்தியைக்
கரதலநெல்லிபோற்கண்டமாதவச்
சரதமோருருக்கொளுஞ்சனற்குமாரற்குத்
தெரிவுறக்கிளிக்கதைதரந்திசெப்புவான்.

(இ - ள்) புண்ணிய பாவமென்னுந்தளையை வேரோடு களைந்து சிவானந்தப்பேற்றை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அபரோக்ஷமாயடைந்த சிறந்த மெய்த்தவமே ஒப்பற்ற வடிவங்கொண்ட சனற்குமார முனிவருக்குக்கிளிக்கதையைத்தெளிவாகத்திருந்தி தேவர் சொல்லத்தொடங்கினார். எ-று. (க)

முன்னு[illegible]தாட்கமழ்முருகின்முண்டகக்
கள்ளவிழ்தோட்டிதழ்கதவநாண்மலர்
வள்ளலுண்மறைகளும்வழங்கும்வாயின
னுள்ளுறுதன்னுலகத்தினோர்பகல்.

(இ - ள்) மூட்கள் செறிந்த தண்டுகள் வாய்ந்த வாசனை மிகுந்த தேன் சொரிய விரிந்த இதழ்கள் பொருந்திய அன்றுபூத்ததாமரைப்பூவில் வாழ்பவனும், நான்கு வேதங்களையும் விளங்கச்சொல்லும் திருவாயையுடைய வனுமாகிய பிரமதேவன் வாசஞ்செய்கின்ற தன் உலகத்தில் ஒரு நாள், எ-று. (உ)

இருக்குமுன்னனமறையீரிரண்டொடு
விரித்தபல்வகைப்படுமெழுத்துமெய்பெறச்
செருக்குறுகலைகளுந்தெய்வநல்லெழி
லுருக்கொடுபொங்கரினிரைகளுற்றிட.

(இ - ள்) இருக்கு முதலான நான்கு வேதங்களுடன் சொல்லாநின்றபல வகையான மந்திரங்களும், மெய்மையாகச்செருக்குற்று விளங்கும் ஆறு கலைஞானங்களும், தெய்வத்தன்மையும். அழகும் பொருந்திய வடிவமெடுத்துக்கொண்டு, சமீபத்தில் பசுக்களாய் விளங்கவே, எ-று. (ங)

இருட்குறள்பிரிதரவிமைக்கும்பன்மணி
யுருக்கிளர்பொன்முடியும்பர்தாடொழ
திருத்தகுதருநிழற்செம்மன்முன்னுறு
தருக்கியதிசையுறுதலைவராகினோர்.

(இ - ள்) அற்பமான இருள் ஒழியும்படி ஒளிவீசும் பலவிதமான பருத்த இரத்தினங்கள் விளங்குகின்ற அழகான கிரீடந்தரித்த தேவர்கள் யாவரும் தனது பாதங்களை வணங்கும்படி கற்பக நிழலில் வாழும் தேவேந்திரனும், விசாலமான ஈசான முதலான எட்டுத்திசைகளில் வசிக்கும் குபேரன் முதலான திக்குப்பாலர்களும். எ-று. (ச)

நாற்றிசையிடந்தொறுநண்ணுவார்க்கெதி
ராற்றுவாய்நான்முகமமைந்தவாற்றினாற்
போற்றுவார்போற்றிடமலர்ந்தபுண்ணிய
மேற்றிகழுருக்கொடேவிளங்கிற்றென்பவே.

(இ - ள்) நான்கு திசைகளிலுமிருந்து வருகின்றவர்களுக்குப் பிரத்தியட்சமாய் ஆறுதல் சொல்லும் திருவாய்களையுடைய நான்கு திருமுகத்துடன் பொருந்தியிருக்கும் தன்மையால் ஐம்புலன்களை அகற்றிகமாய்க்காக்கவல்ல பெரியோர்கள் புகழவிரிந்த புண்ணியமானது மேலாக விளங்கும் ஒரு வடிவங்கொண்டு இருந்தது என்று சொல்லுவார் பெரியோர். எ-று. (ரு)

கல்வியின்பரப்பெலாங்கண்டதெஞ்சுடைப்
பல்பெருந்தவத்தினாற்பரமமாதவர்
நல்லிசைத்திவ்வியாழ்நாதர்விஞ்சையர்
திவ்வியர்தேருடைப்பருதிச்செல்வர்கள்.

(இ - ள்) கல்வியின் விசாலத்தை முழுதுங் கண்டறிந்த தெளிந்த மனதுடைய பற்பல சிறந்த தவத்தினால் மேன்மையுள்ள மகா தவசிகளும், இனிய இசையில வல்லவரான தெய்வத்தன்மையுள்ள மகரயாழையுடைய நாரதரும், விஞ்சையர்களும், ஒற்றைச்சக்கரத்தினால் ஓடும் சிறப்புள்ள தேருடைய பால சூரியர்களும், எ-று. (சு)

தெய்வமாமணியொளிச்சுடிகைச்சென்னியோர்
மைவரைபலவுறழசுரர்மற்றுளோ
ரவ்வண்நிறைதலால்யார்க்குமவ்வுல
கெவ்வுலகோவெனவையமெய்தற.

(இ - ள்) சிறப்பு-பெருமை-அழகு-காந்தி-இவற்றையுடைய மாணிக்கத்தை முடியில் தரித்த நாகலோகத்தவர்களும், மேகம படிந்த மலைக்கு நிகரான புயங்களையுடைய அசுரர்களும், இன்னும் மற்றவர்களும், அந்த இடத்திற்குத்திரண்டு

வந்தபடியால் எவர்களுக்கும் அந்தப்பிரமலோகம் வேறு எந்த லோகமோ என்று சந்தேகங்கொள்ளும்படி, எ-று. (எ)

விண்ணிறையுடுக்கணத்திடையுண்மேவிய
வண்ணல்வாண்மதியெனவளவில்பல்லுல
கெண்ணறுபற்பலரிறைஞ்சியெய்திட
வண்ணவான்பேரவைநாப்பண்வைகினன்.

(இ-ள்) ஆகாயத்தில் நிறைந்துள்ள நட்சத்திரக்கூட்டங்களுக்கு மத்தியில் விளங்கா நின்ற ஒளி பொருந்திய சந்திரனொன்று சொல்லும் கணக்கில்லாத பல அண்டங்களிலுள்ள எண்ணிறந்த பேர்கள் வணங்கும்படி வர, அதனால் அழகு மிகுந்து சிறந்த பெருஞ் சபையின் நடுவில் தங்கியிருந்தார். எ-று. (அ)

இத்தகைப்பற்பலகுழாமிறைஞ்சியே
மொய்த்திடநாளிதழ்முண்டகாசனத்
துத்தமனினிதுவீற்றிருப்பவொப்பிலா
முத்திமாதவரொருமொழிவிளம்பினர்.

(இ-ள்) இவ்விதமான பற்பல கணங்கள் வணங்கிச்சூழ்ந்திட வாசனை தங்கிய இதழ்கள் வாய்ந்த கமலாசனத்தில் பிரமதேவர் மகிழ்ச்சியோடு எழுந்தருளியிருக்கையில் ஒப்பில்லாத ஜீவன் முத்தரான மகா தவசிகள் இந்த வசனத்தைச்சொன்னார்கள்:— எ-று. (கூ)

மெய்யினெவ்வுலகருமேயினரிவ
ணெய்துமோருலகுபோலிசைந்ததில்லையா
லையவெவ்வேறுலகுருவமாக்குநின்
செய்திறம்யாவரோதெரிக்கவல்லவர்.

(இ-ள்) ஐயனே! உண்மையாகச்சகல லோகத்தாரும் இங்கே வந்து சேர்ந்தார்கள். அதனால் இந்த நாள் இந்த உலகம் சகலாத்மாக்களும் முடிவில் வந்து சேரும் முத்தியுலகே ஆயிற்று. பலவேறு உலகங்களைப் படைக்க வல்ல உமது வல்லமையைச்சொல்லவல்லவர் யாவர்? ஒருவருமில்லை. எ-று.

என்றுபற்பலதுதியெடுத்தியம்பலு
மன்றலந்தாமரைவள்ளலோக்குறு
வன்றிஃதற்புதமறையக்கேண்மினீ
ரொன்றுபோலொன்றிலாவுலகமன்றியும்.

(இ - ள்) இவ்வாறு பற்பல தோத்திரங்களை யெடுத்துச்சொல்லவும் வாசனை தங்கிய அழகிய கமல நாயகர் அவர்களைப்பார்த்து "இது ஆச்சரியமானதல்ல ; யான் சொல்லுவதைக்கேளுங்கள். உலகங்களில் ஒன்றைப்போல் மற்றொன்று விளங்கவில்லை ; அதுவுமல்லாமல, எ று. (கக)

ஒருலகத்தினுளொருவர்தம்முருப்
போலும்மற்றொருவருக்கில்லையாதலா
லூர்வனபறப்பனவொழியமற்றுடல்
சார்வனவல்லவாஞ்சகங்கடோறுமே.

(இ - ள்) ஒருலகத்தில் ஒருவருடைய வடிவத்தைப்போல் மற்றொருவருக்கு வடிவம் இல்லை. ஊர்வன-பறப்பன இவைகள் நீங்கலாக மற்றவைகளில் ஒவ்வொரு உலகத்திலும் ஒன்றைப்போல் மற்றொன்றுக்குச்சரீரம் பொருந்தமாட்டாது. எ-று. (கஉ)

இன்னதென்சிருட்டியின்றிறமெனவயன்
சொன்னதுமகிழ்ந்தனர்சுருதிமாதவ
ரன்னதுசெவிப்படவனகமாதவ
மன்னியசுகனெனுநாமமாமுனி.

(இ - ள்) யான் செய்யும் சிருட்டியின் வல்லபம் இப்படிப்பட்ட தன்மையையுடையது என்று பிரமதேவர் சொன்ன சங்கதியினால் வேதமுணர்ந்த மகா தவசிகள் சந்தோஷமடைந்தார்கள். அந்த விவரத்தை கேட்டவுடன் பரிசுத்தமான மகா. தவசையுடைய சுகனென்னும் பெயர் பூண்ட மாமுனிவர், எ-று.

தேற்றமாயெழுந்தனன்விரைவிற்சென்றனனூற்றிருந்தொழுகுதேனுறுவெண்டாமரை
மேற்றிகழ்வஞ்சியிற்சென்றுமெல்லடி
போற்றினனிகழ்ந்ததுபுகலலுற்றனன்.

(இ - ள்) ஊக்கத்தோடெழுந்து, சீக்கிரஞ் சென்று, ஊற்றிலிருந்து பெருகுவது போல் சொரியுந்தேனுள்ள வெண்மையான தாமரை மலரில் வீற்றிருக்கும் சரஸ்வதியிடம் போய், ஸ்ரீபாதங்களை வணங்கி, நடந்த சங்கதியைச்சொல்லத் தொடங்கினர். எ று. (கச)

அன்னைநீகேட்டியோர்மாற்றமம்புய
னுன்னருமவையிடையுலகுயிர்க்கெலாம்
பன்னியவுடலுருப்பலவிதங்களாய்
மன்னியதென்றெழில்வளமதென்றனன்.

(இ - ள்) எனது தாயே! யான் சொல்லும் ஒரு சங்கதியைக்கேட்டருள்க, "உலகத்திலுள்ள உயிர்களுக்கெல்லாம் சொல்லும் சரீரத்தின் வடிவம் பலவேறு தன்மையாயிருத்தலே எனது சிருட்டியின் வல்லபம்" என்று நினைப்பதற்கருமையான பெருஞ்சபையில் பிரமதேவர் சொன்னார். எ-று. (கரு)

அருந்தவர்முனிவரரமரர்யாவரு
மிருந்தபேரவையிடைநிகழ்ந்ததீதென
வுருந்துறழ்வெண்ணகைமுறுவல்பூத்துவெண்
டிருந்திழையுத்தரஞ்செப்பன்மேயினள்.

(இ - ள்) அரியதவசிகளும், முனிவர்களும், தேவர்யாவரும், இருந்த பெரியசபையில் நடந்த சங்கதியீதுவென்று சொல்லவும், வெண்மையானகுருத்துக்கு நிகரான வெண்ணிறத்தந்தங்களினால் புன்சிரிப்பு கொண்டு முத்துமாலை பூணும் சரச்சுவதி விடைசொல்லத்தொடங்கினள். எ-று. (உசு)

ஒருவர்தம்முறுப்பெனவொருவர்க்கில்லது
மரியதோவவரவரறியச்சொல்லையான்
றெரிவுறப்பலபலவிதங்கள்செய்ததே
பெரியவற்புதமெனவாணிபேசினள்.

(இ - ள்) ஒருவருடைய அவயவங்களைப்போல் மற்றொருவருக்கு இல்லாமலிருப்பது ஆச்சரியமானதல்ல; அவரவர்கள் மனதில் நினைத்ததைத் தெரிந்து கொள்ளும்படி வார்த்தைகளை பற்பல விதமாகச்செய்ததே மிகுந்த ஆச்சரியமானதென்று சரச்சுவதி சொன்னாள். எ-று. (கஎ)

மெல்லியன்மொழியினைக்கேட்டுமீண்டவை
யொல்லையினெய்தலுமவனைநோக்குறு
வெல்லையின்மாதவவெங்ஙனேகினை
சொல்லுதியெனச்சொனான்சுருதிசொன்னவன்.

(இ - ள்) சரச்சுவதியின் வார்த்தைகளைக்கேட்டுச் சுகர் திரும்பிச்சபைக்குச் சீக்கிரம் வந்து சேர்ந்தவுடன், அவரைப்பார்த்து அளவில்லாத தவத்தையுடைய

மகா முனிவரோ எவ்விடம்போனீர்? சொல்லுமென்று கேட்க, வேதத்தைத்திரு வாய் மலர்த்தருளிய சுகர் சொல்லத்தொடங்கினர்:—எ-று. (கஅ)

## வேறு.

நறவூற்றெடுக்கும்வெண்கோட்டுகளினப்பொகுட்டிலரசிருக்கு
மறிவேயொருவாமென்னன்னைபக்கலடைக்தேனனைத்துயிர்க்குஞ்
செறியுமுருவம்பலவேறுசெய்தேனென்றுசெப்பியதே
நிறையவிருந்தபேரவையினிகழ்ந்ததென்னுமொழிந்தனன்யான்.

(இ-ள்) தேன் மிகுந்து பெருகும் வெண்மையான இதழ்களையுடைய தாமரை மலரில் அரசிருந்தருளும் அறிவே ஒப்பற்ற வடிவமாகப்பெற்ற எனது தாயாகிய சரச்சுவதிசமுகம்போனேன்; சகலவுயிர்களுக்கும் பொருந்துஞ்சரீரம் பற்பல பேதமாயிருக்கும்படி சிருட்டித்தேன் என்று பிரமதேவர் சொன்னதே நிறைந்திருந்த பெருஞ் சபையில் நடந்த சங்கதியென்று யான் அறிக்கையிட் டேன். எ-று. (கக)

கமலக்கோயில்வாழ்பூவைகவிர்வாய்திறந்துபல்லுயிர்க்கு
மமையப்பலவேறுருச்செய்ததரிதோசொற்களவரவர்க்குத்
தமரக்கடல்சூழ்புவியீன்றதலைவாவன்றுதான்செய்யும்
விமலத்தொழிலேயரிதென்றுனென்னவுரைப்பான்வேதாவும்.

(இ-ள்) ஒலித்தலையுடைய கடல் சூழ்ந்த உலகத்தைப்படைத்த தலைவி னே! தாமரைப்பூவாகிய ஆலயத்தில் வீற்றிருக்குஞ் சரச்சுவதிதேவியார் முருக் கம் பூப்போலும் செவ்வாய் திறந்து எல்லாவுயிர்களுக்கும் பல வேறு விகற்ப மான சரீரங்களைச்சிருட்டித்தது அருமையான காரியமல்ல; அவர் அவர்களுக் குப்பாஷைகளை வெவ்வேறுபடுத்திய எனது பரிசுத்தமான தொழிலே அரு மையுடையது என்று சொன்னாள்; எனப்பிரமதேவரும் சொல்லுவார். எ-று.

பண்ணுங்கிளியாய்த்திலோத்தமைதான்வியாதர்பக்கம்பறந்திட்டே
யுன்னையீன்றாள்சுகனெனப்பேருற்றாய்பிறவிவாதனையாற்
சொன்னசொல்லைச்சொல்லுகின்றசுபாவம்போகாதுனக்குநீ
யின்னேகிளியாகெனச்சாபமிட்டானயர்ந்துமுனிவோனும்.

(இ-ள்) பேசுங்கிளியுருவாய்த்திலோத்தமையென்பவள் வியாசரிடத்துக் குப்பறந்து சென்று உன்னைப்பெற்றாள். அதனால் உனக்கு சுகனென்னும் பெய

ருண்டாயிற்று ; ஒருவர் சொன்ன வார்த்தைகளைச்சொல்லுங்கிளியின் தன்மை உனக்கு நீங்கவில்லை. இப்போதே நீ கிளியாகக்கடவதென்று நான்முகக்கடவுள் சாபமிட்டார். சுகமுனிவர் மனம்வருந்தி, எ-று. (உக)

மலர்த்தாள்வணங்கியருண்ஞானவாழ்வேயிந்தவல்வினையேற்
கலக்கணுற்றவிச்சாபந்தீர்வதென்றோவருளென்னப்
பலித்தநெஞ்சின்முனிவாவிப்பாவநாசமெனுந்தெய்வத்
தலத்திற்றானேதோன்றிலிங்கப்பூசைசெயிற்போஞ்சாபமென்றான்.

(இ-ள்) அவரது திருவடிகளைப்பணிந்து அருளாகிய ஞான வாழ்வையுடைய அரசே! இத்தீவினையேற்குத் துன்பத்தைக்கொடுக்கும் இந்தச்சாபம் எப்போது விமோசனமாகத்தக்கது ? கிருபைசெய்வாய் என்று கேட்க, ஓ முனிவனே! பரிசுத்தமான மனதோடு இந்தப்பாவநாசப்பதியென்னும் திவ்விய தலத்தில் சுயம்பு மூர்த்தியாகிய சிவபெருமானைப்பூசித்தால் சாபம் நீரும் 'என்று சொன்னார். எ-று. (உஉ)

எந்தாய்வன்னியுருக்கொள்ளிலென்கொல்பூசைசெயுமாறு
முந்துமறிவின்றேயென்னமுளரிப்பொகுட்டுமுன்னவனுந்
தந்தேமறிவுநின்றோலேதக்கபூசையியற்றுதிநீ
மைந்தாசெறியெனமொழிந்தான்மலர்த்தாள்பணிந்துமுனிவோனும்.

(இ-ள்) எனது பிதாவே! கிளியுருவைப்பெற்றால் எப்படி சிவபூசை செய்வேன் ? முதன்மையான அறிவு இல்லையே! என்று விண்ணப்பஞ்செய்யக் கமலாசனத்தேவர் உனக்கு அறிவைக்கொடுத்தோம்; உன்னாலியன்ற பூசை செய் போ என்று சொல்லுதலும், அந்தச்சுகமுனிவர் அவரது பாதாரவிந்தங்களைப்பணிந்து, எ-று. (உ௩)

அருநான்மறையின்றுறைவிரிக்குமனந்தஞானிசாபத்தாற்
பருவக்கொண்மூப்படிமதில்சூழ்பாவநாசநகர்க்காவி
லுரியவடிவப்பசுங்கிளியையுருவத்தரசாயுற்பவித்தான்
வருநான்பலவுங்கழித்தேகவளருமதிபோன்மதிவலார.

(இ-ள்) அருமையான நான்குவேதங்களின் வழிகளை விவரித்து எடுத்துச் சொல்லும் சுகமுனிவர் தமக்குநேரிட்ட சாபத்தினால் கார்மேகம் தவழப்பெற்ற மதில்கள் சூழ்ந்த திருப்பாவநாச நகரின் பூங்காவனத்தில் உரிய வடிவமான பச்சைக்கிளியின் உருவத்தைப்பெற்றுக்கிளிகளுக்கு அரசாய்த் தோன்றினர்.

இப்படி பல நாள் கழிந்துபோகச்சுக்கில பக்ஷத்துச்சந்திரன் போல் அறிவு வளர்ந்து வரவும், எ-று. (உச)

செங்கூரலகுப்பசியசிறைக்கிளியின்றிரள்கள்புடைசூழப்
பொங்கரடைந்துகனிகோதிப்புதுத்தேனளிகள்விருந்துண்ணக்
கொங்குமலருந்துணர்க்கொன்றைக்குழகனுறையுமிடத்தன்பாற்
றங்குபராரைவருக்கைகெழுமுந்தருவிலினத்தோடணைந்திடுமால்.

(இ-ள்) சிவந்த கூர்மையான மூக்கையும் பச்சைச்சிறகுகளையும் உடைய கிளிக்கூட்டங்கள் சூழ்ந்து வரசசோலைக்கு வந்து கனிகளைத்தின்று புதியதேனை வண்டுகள் சேர்ந்துண்ணும்படி வாசனை வீசும் கொத்தாகிய கொன்றைப்பூவைச் சூடிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் இடத்தில் இருந்த பருத்த அடியை யுடைய நீண்டபலாமரத்தில்தனது இனத்தோடு அன்புடன் வந்துசேரும். எ-று.

சிறுகாற்பவளக்கூர்மூக்குச்சிறைப்பைங்கிள்ளையினங்கட்குப்
பெறுதற்கரியசிவஞானப்பேறும்பஞ்சாக்கரவிதிய
மறிவுதருநீற்றின்சிறப்புமரன்சீர்த்தியுமவனடியார்
குறைவில்கதையுமனமுருகிக்கண்ணீராறாக்கூறிடுமால்.

(இ-ள்) சிறிய கால்களும் பவளம் போற்சிவந்த மூக்கும் சிறகும் உடைய பச்சைக்கிளிக்கூட்டங்களுக்கு அடைதற்கரியசிவஞானசெல்வத்தையும், திருப் பஞ்சாக்கர மகிமையையும், ஞானத்தைக்கொடுக்கும் திருநீற்றின்பெருமையை யும், சிவபெருமான் கீர்த்தி விசேடத்தையும், சிவனடியார்களுடைய பெருமை மிகுந்த சரித்திரத்தையும், மனங்கரைந்து கண்ணீர் ஆறாகப்பெருக, அன்போடு விவரமாகச்சொல்லும். எ-று. (உசு)

புளகமரும்பமெய்விதிர்ப்பப்பொருவிலகங்கள்குழைந்துருக
அளவிலாசைமீதூறவரகராவென்றறையுமொழி
யுளநெக்குருகியடியார்கதைபலகாலோதவெனக்கேட்டுக்
கிளியின்குழாங்கண்மகிழ்பூப்பக்கிளத்தாநிற்குந்தவக்கிள்ளை.

(இ-ள்) உடம்புவேர்த்து நடுக்கமுற, ஒப்பில்லாத மனமுதலிய உட்கர ணங்கள் கரைந்துருக, அளவில்லாத அன்பு பெருக அரகரா! என்னுமொழியு மாக மனம் நெகிழ்ந்து அடியார் சரித்திரத்தைத்திரும்பவும் பலதரம் சொல் லுக! என்று சொல்லக்கேட்டுக்கிளிக்கூட்டங்கள் மகிழ்ச்சியடையத்தவத்திற் சிறந்த இராசக்கிளி சொல்லும்.—எ-று. (உஎ)

அடைந்தோர்பிறவிப்பெரும்பிணிக்கோரரியமருந்தாயாழிதந்த
விடந்தாழ்கண்டன்வீற்றிருக்கும்பாவநாசவியனகரின்
மடந்தாழ்புள்ளுமெய்ஞ்ஞானமருவுமிந்தமக்களுருப்
படிந்தோரறிவின்சிறப்பெவரோபகரவல்லாரபாரிடத்தே.

(இ - ள்) அடையப்பெற்றவர்களுடைய பிறப்பு என்னும் பெரிய வியாதிக்குச்சிறந்த ஔஷதமாகத்திருப்பாற் கடலிலுண்டான ஆலகாலவிடத்தைத்தரித்த கண்டத்தையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருப்பாவநாசமென்னும் விசாலமான நகரத்தில் அறியாமை பொருந்திய பட்சிகளும் சிவஞானத்தையடையும் என்றால் மானிடவடிவம் பெற்றவர்களுடைய அறிவின்சிறப்பை இத்தப்பூலோகத்தில் சொல்ல வல்லவர் யார்? ஒருவருமில்லை. எ-று. (உஅ)

இன்னதாயபேரறிவினிசைவாற்கிளிகட்கிறைகிளி
பன்னுமிறைவன்றிருப்பூசைமுயலுமென்னப்பசர்ந்திடலு
மன்னவாறேசெய்துமெனவினங்களொழுங்காவன்றுமுத
னன்னர்நெஞ்சத்தன்புவெள்ளநாட்குநாண்மிக்கூறநெடுப்ப.

(இ - ள்) இப்படிப்பட்ட மிகுந்த அறிவுபொருந்தியதால் கிளிகளுக்கு அரசான கிளி வேதங்கள் துதிக்கும் சிவபெருமானைப்பூசித்தல் செய்ய முயலுங்களென்று சொல்லவும், அப்படியே செய்கிறோமென்று கிளிகள் அன்று முதல் கிரமமாக நல்ல மனதில் அன்பின் பெருக்கம் நாளுக்கு நாள் மிகுந்து சுரக்க, எ-று. (உகூ)

புலரிக்காலைநீர்தோய்ந்துபோயெத்திசைகடொறுஞ்சுற்றிப்
பலினக்காய்செங்கனிகுரல்கள்பலவுங்கொணர்ந்துபாவனையா
னிலைப்பரிவிற்கொணர்ந்தவைகொண்டேயாவுநிறைவாக்கி
யிலகப்புனத்துளுறைந்தாரைவழிபாடிவ்வாறியற்றினவே.

(இ - ள்) விடியற்காலையில் சலத்திற் படிந்து எழுந்து பல திக்குகளிலும் பறந்து சென்று, பலவகைக்காய்களையும் சிவந்த கனிகளையும் தினைக்கதிர்களையும் அனேகமாகக்கொண்டு வந்து, மனதினாற் சிந்தித்து அன்பினாற் கொண்டு வந்தவைகளைக்கொண்டு யாவற்றையும் நிறைவாகச்செய்து, பிரகாசிக்கின்ற அந்தச்சுகாரணியத்தில் வசிக்கும் சிவபெருமானுக்கு இந்த வண்ணம் பூசை புரிந்தன. எ-று. (௩௰)

## வேறு.

ஆரியளிவ்வொழுக்காய்வருநாளிடை
வரையடிக்கணவனத்தோர்வனசரன்
திருகுவெஞ்சினச்செந்சிலைக்கையினன்
கருதுநாமமும்வச்சிரகாதனே.

(இ - ள்) கிளிகள் இந்த நல்லொழுக்கத்தில் பயின்று வருநாளில் மலையடிவாரத்திலுள்ள வனத்திற் சஞ்சரிப்பவனும், மாறுபடும் கொடிய கோபத்தையுடைய சிவந்த வில்லைக்கையில் தரித்தவனும், வச்சிரகாதனென்னும் பெயரையுடையவனுமாகிய ஒரு வேடன், எ-று. (௬க)

பரந்ததீப்புனஞ்சுட்டுப்பயோதர
மிரைந்துகால்கொண்டெழுந்துபொழிந்தபின்
விரைந்துசெந்தினைவித்துவிளைவுறப்
பொருந்துகாவல்புரிந்தங்குறைநரனன்.

(இ - ள்) மிகுந்த தீயினால் வயல்களைச்சுட்டு மேகமானது சப்தித்துகால் கொண்டு எழுந்து மழை பெய்தபின் சீக்கிரமாக நல்ல தினைவிதைகளை விதைத்துப்பயிராகும்படி காவல செய்து வந்து அவ்விடத்திலேயே வசித்தான். எ-று.

சூலினன்கதிர்தோன்றிமுதிர்வுற
வேலும்வணபுனமெங்கும்விளைந்தன
மேலவிங்கதின்மேயினபைஞ்சிறைக்
கோலவன்னிக்குழாங்கள்கடியவே.

(இ - ள்) தினைப்பயிர்கள் சூலடைந்து கதிர்களைக்காட்டி முதிர்ச்சியடைய அவனுடையவயல்கள் எல்லாம்விளைந்திருந்தன; பச்சைச்சிறகுகளையுடைய அழகான கிளிக்கூட்டங்கள் சீக்கிரமாக அவ்வயல்களுக்குப்போயின. எ-று (௬௩)

இன்னவாறுபரணிலிருப்புழிப்
பன்னகாரமணிந்தருள்பண்ணவன்
றன்னைமுன்னுறபூசைத்தவத்தினு
லன்னபைங்கிளியாவுமெழுந்தவே.

(இ - ள்) இந்த மாதிரியாய்ப்பரணில் வச்சிரகாதன் இருக்கும் போது சர்ப்பாபரணந்தரித்தருளுஞ் சிவபெருமானைச்சிந்தித்துப்பூசை செய்வதற்காக அந்தப்பசுங்கிளிகள் எல்லாம் புறப்பட்டன. எ-று. (௬௪)

தங்குரல்களடக்கியதத்தைகள்
செங்குரல்கடிருடியெழுந்திடப்
பொஙகுவண்மைப்புனத்திற்பாணுறை
கங்குலாகிறத்தோன்விழிகண்டனன்.

(இ - ள்) தங்களுடைய சப்தத்தையடக்கியகிளிகள் செம்மையானதினைக் கதிர்களைத்திருடிக்கொண்டு பறப்பதை வளமிருந்த தினைப்புனத்தில் பரணிலிருந்த இருட்டிகைகொப்பான நிறத்தையுடைய வச்சிரயர்தன் கேரில் பார்த்தான். எ-று. (கரு)

ஈசனாரடியாற்றியல்பூசனை
நேசமாகநினைந்தபுனத்தினிற்
கூசிடாதுகதிர்கொய்தனசிறை
வீசுகிள்ளைகளென்றுவிளம்பினன்.

(இ - ள்) சிவபெருமான் திருவடிகளுக்குச்செய்யும் பூசையை அன்பாக நினைந்தனவாகிசசிறகுகளை வீசும் கிளிகள் தினைப்புனத்தில் பயப்படாமல் கதிர்களை அறுத்தன என்று சொன்னான். எ-று. (கசு)

கண்டுநெஞ்சங்கனன்றுபுழுங்கவே
கொண்டகைககவண்வீசிபபின்கூவியே
மண்டுகைகவலையாலிவ்வனைத்துயி
ருண்டல்செய்வனெனுநிலமுற்றனன்.

(இ - ள்) தினைக்கதிர்களைக்கொண்டு போவதைப்பார்த்து, மனதில் மிகுந்த கோபங்கொண்டு, தான் வைத்துக்கொண்டிருந்த கைக்கவண் கல்லை விட்டெறிந்து, பின்பு கூச்சலிட்டுக்கைகவலையினால் இவைகள் எல்லாவற்றினுடைய உயிரை உண்ணுவேனென்று நிலத்திற் குதித்தான். எ-று. (கஎ)

பறந்துசெல்லப்படர்கிளியாவுமே
மறைந்துமூன்றுதினம்வழிகண்டனை
னறிந்தவாறெனப்பின்வரவக்கிளி
சிறந்தபுற்றகஞ்சென்றுபுகுந்தவே.

(இ - ள்) கிளிக்கூட்டங்கள் எல்லாம் ப்றந்து கண்ணுக்குத்தெரியாமல் ஓடிப்போகவே, மூன்று தினம் தேடிப்பார்த்தபின் வழியைக்கண்டுகொண்டு அறிந்த பாதையைப்போல் தொடர்ந்து வர, அவைகள் கேர்த்தியான ஒரு புற்றுக்குள் புகுந்து கொண்டன. எ-று. (கஅ)

நடந்துவச்சிரகாதனுநண்ணினு
னடங்கிப்புற்றுளுறைநர்தனவாதலா
லிடங்கொள்புற்றைச்சிதைத்துளிடமெலாந்
தொடர்ந்துகாண்குவனென்னத்துணிந்தனன்.

(இ - ள்) வச்சிரகாதனும் அவ்விடத்துக்கு நடந்து வந்தான். கிளிகள் சத்தமில்லாமல் புற்றுக்குள் பதுங்கிக்கொணடபடியால் விசாலமான இப்புற்றை வெட்டி உள்ளிருக்கும் வழிகளை யெல்லாம் சோதித்துப்பார்ப்பேன் என்று நிச்சயித்தான். எ-று. (௫க)

வரிக்கயிற்றிற்செறிகண்வலையினு
லுரியபுற்றினையுள்ளுறக்கட்டினு
னரியபுட்களெழுந்தகலாவகைக்
கருதிச்செய்துமண்கொட்டுங்கைக்கொண்டனன்.

(இ - ள்) அருங்கிளிகள் ஓடிப்போகா வண்ணம் செய்ய நினைத்து திரித்த கயிற்றினல் நெருக்கமான கண்களையுடைய வலையினல் அங்குள்ள புற்றை உள்ளில் பொருந்தும்படிக்கட்டி மண்வெட்டியையும் கையில் எடுத்தான். எ-று.

மெய்வருந்திவிளைத்தபுனத்திடைச்
செய்யவேனல்கடின்பதுமன்றியே
கொய்துநாடொறுமிவ்வணங்கொண்டுறில
வைகுபுற்றில்வளம்பெரிதாமென.

(இ - ள்) தேகம் வருந்திப்பயிர் செய்த வயலில் சிவந்த தினையைத்தின்னுவதல்லாமல் கதிர்களை யறுத்து இவ்விதமாகதினந்தோறும் கொணடுபோனல் அவைகள் வசிக்கும் புற்றின் வளப்பம் மிகுதியாமென்று, எ-று. (௫௪)

பொலிந்தபல்புழைப்புற்றுச்சிதைத்தலு
மிலங்குபைஞ்சிறைக்கிள்ளைகள்யாவையு ம்
மலர்ந்தகொன்றைவரதனடியினிற்
கலங்கலின்றிக்கருத்தையிருத்தின.

(இ - ள்) விளங்கிய பல வளைகளையுடைய புற்றை வெட்டுதலும் ஒளிமிகுந்த பசிய சிறகுகளுள்ள கிளிகளெல்லாம் சற்றும் பயப்படாமல் மலர்ந்த கொன்றை மாலையைத்தரித்த சிவபெருமான் திருவடிகளையே சிந்தித்தன. எ-று.

அகன்றமண்கொட்டுவாய்படவாருயிர்
புகன்றகிள்ளைகணீத்தனபுன்மைதீர்
மிகுத்தமெய்த்தவக்கிள்ளைமெய்யாரணம்
பகர்ந்தவன்றிருச்சென்னிபடுமென்று.

(இ - ள்) அகலமான மண்வெட்டாயுதத்தின் நுனிபட்டு அதனால் ஜனன மரணமென்னுந்துயரொழிய அந்தக்கிளிகளெல்லாம் உயிரை விட்டு ஒழிந்தன. உண்மைத்தவத்திற் சிறந்த இராச கிளி சத்திய வேதத்தைத்திருவாய் மலர்ந்தருளிய சிவபெருமான் திருமுடியிற் படுமென்று, எ-று. (சுஙு)

பொங்குமன்புபெருகியபுந்தியாற்
றிங்கள்சூடுந்திருமுடிகண்ணியே
தங்குதூவிவிரித்தது சார்ந்ததால்
எங்கள்கோனருள்பெற்றவரென்செய்வார்.

(இ - ள்) பூரணமான அன்பு பெருகிய மனதுடன் இளஞ்சந்திரனை அணிந்த திருமுடியை அடைந்து தன்னிடத்தில் தங்கிய சிறைகளை விரித்துக்காத்துக் கொண்டிருந்தது; எம்பெருமான் திருவருளை நாடியவர்கள் இதையல்லாமல் வேறு என்ன செய்வார்கள்? எ-று. (சுச)

பத்திபூண்டபரமனடியவர்
சித்தமயாதுந்தெரியவரியதே
மொய்த்தகட்சிமைமூடலினூறிடை
யெத்திறத்துமியன்றனசெய்குவார்.

(இ - ள்) சிவபத்தி பூண்டொழுகுஞ் சிவனடியார்களுடைய சித்தத்தின் தன்மையைச்சிறிதும் அறிவது அரிதாகும்; நெருங்கிய கண்ணை இமையினுல் மூடுவதற்குள் துன்பத்தை எவ்விதத்திலாயினும் கூடுமான அன்பு செய்திடுவார்கள். எ-று. (சுரு)

தம்முடற்பொருளாகவுந்தாமெணா
ரிம்மையிற்சுகமென்பதுமுன்னிடார்
மெய்ம்மைசற்றும்விளங்கிடுவாரவ
ரெம்மையாளுமடிகளென்றெண்ணுவார்.

(இ - ள்) தம்முடைய சரீரத்தையொருபொருளாகவும் நினையார்; இவ்வுலகத்திற் சுகம் என்பதையும் எண்ணமாட்டார்; மெய்ஞ்ஞான போதமே சற்றேனும் விளங்க எடுத்து ஏவப்பார்; அவர்களே எம்மை அடிமையாகக்கொள்ளும் சிவபெருமான் என்று எண்ணுவார்கள். எ-று. (சுசு)

மிளிர்பைந்தூவிவிரித்தங்கிருத்தலும்
புளினனோக்கிப்புரைபடவெட்டினான்
கிளியிறந்ததுசீற்றுமதிநிலா
வொளிகொள்சென்னியிலுற்றங்குறைந்ததே.

(இ-ள்) ஒளி தங்கிய பசிய சிறகைவிரித்து அவ்விடத்திலிருக்கவும், அப்புளினன் அதைப்பார்த்து துவாரமுண்டாகும்படி வெட்டினான்; அதனால் அந்தக் கிளி இறந்துவிட்டது. அதுவும் பிறைச்சந்திரன் சந்திரிகையைப்பரப்பும் திருமுடியில் பட்டது. எ-று (சஎ)

உள்ளநான்முகனறியுணரலாத்
தெள்ளுகங்கைசத்திருமுடிமீதினிற்
றள்ளிபாயச்சொரியுங்குருதிநீர்
வெள்ளமாகிப்பரந்துவிரிந்ததே.

(இ-ள்) சிவநாத பிரமதேவர் முதலானவர்களால் அறிய ஒண்ணாத பரிசுத்த கங்கை சூடிய சடாமகுடத்தில் துள்ளி ஓடப்பெருகிய உதிரமானது வெள்ளமாய்ப்பரந்து எங்கும் பரவியது. எ-று (சஅ)

செய்யமேனியொளிருந்திறத்தினான்
மெய்கொள்கங்கைகவிலகிக்கவிழ்ந்ததோ
துய்யசோணநதியையுந்தாமுடி
யையன்சூடினனோவெனலாயதே.

(இ-ள்) சிவந்த சடையில் விளங்கும் தன்மையால் அந்தச்சிவப்பு நிறங்கொண்ட கங்கையானது அவ்விடம் விட்டுப்பூமியில் புரண்டதோ? அல்லது நமது ஐயனாகிய சிவபெருமான் பரிசுத்தமான சோணநதியையும் நிர்மலமான சடைமுடியில் தரித்திருந்தாரோ? என்று சொல்லலாயிற்று எ-று. (சகூ)

மின்பயின்றமுடியுறைமென்கிளி
யன்புவெள்ளம்விறலடைந்தவாறனே
யின்பவாரியெழுந்ததுகொலெனெ
நிறைசொல்லுநிரம்பவழிந்ததே.

(இ-ள்) ஒளிதங்கிய திருமுடியில் மேவியிருந்த மெல்லிய கிளியினது அன்பின் பெருக்கம் வீரமடைந்து அப்படியே ஆனந்தக்கடலாய்த்தோன்றியதோ? என்று சொல்ல நின்ற சொல் அளவையுங்கடந்து பெருகியது அவ்வுதிர வெள்ளம். எ-று. (ரு0)

கண்டெஞ்சங்கலங்கியேயின்னுங்
கொண்டகொட்டையெறிந்துகுழைந்தனன்
தொண்டனேன்செயும்பாவத்தொழிலிஃ
தண்டநாயகயாதென்றறிந்திலேன்.

(இ-ள்) வேடனும் அதைக்கண்டு மனம் கலங்கிக்கையிற் பிடித்தமண் வெட்டியை வீசி எறிந்து மனம் குழைந்து லோகநாயகா! அடிமை செய்த பாவகிர்த்தியமாகிய இதுயாது என்று அறியேன். எ-று. (௩௧)

இந்துசூடுந்திருமுடிக்கென்கொட்டால்
வந்தபுண்ணிலவழியக்குருதிநீர்
நொந்ததோவென்றழுதனனொந்தனம்
வெந்தறிந்திலன்வேறொன்றுசெய்யவே.

(இ-ள்) சந்திரனைத்தரித்த திருமுடிக்கு அடியேனுடைய மண்வெட்டுங் கருவியால் நேரிட்ட காயத்திலிருந்து உதிரம் பெருகுவதினால் இன்னது செய்வதென்று அறியாதவனாய்ப்பெருமானுக்கு நோவுண்டாயிற்றோ? என்று மன வருத்தமுற்று அழுதான். எ-று. (௩௨)

சிந்தையாயயன்றேடியறிகிலா
வெந்தையார்முடிக்கித்துயர்செய்தயா
னுய்ந்திரேனிவ்வுடல்விடுவேனெனப்
புந்தியாயுடைவாளுறைபோக்கினான்.

(இ-ள்) ஊக்கத்தோடு பிரமதேவன் தேடிப்பார்த்தும் கண்டறியாத எனது பெருமானுடைய திருமுடிக்கு இப்படிப்பட்ட துன்பம் செய்த அடியேன் இனி உயிரோடிருக்க மாட்டேன்; இந்தச்சரீரத்தை மாய்த்துக்கொள்வேனென்று மனந்துணிந்து உடைவாளை உறை நீக்கி எடுத்தான். எ-று. (௩௩)

கைக்கருவிக்கழுத்திலுருவிட
மிக்கதன்னுடல்விட்டுவிமானமேன்
மைக்கணார்சிவலோகமடந்தையர்
தொக்குநின்றுபசாரத்தொழிற்செய.

(இ-ள்) உடைவாளினால் கழுத்தையறுத்துக்கொள்ள, அதனால் தனது உடலையொழித்துச்சிவகிருபையால வந்த திவ்விய விமானத்திலேறிக்கொண்டு நீலகண்டன் எழுந்தருளியிருக்கும் சிவலோகத்தில் தேவகன்னிமார்கள் சேர்ந்து நின்றுபணிவிடை செய்ய, எ-று. (௩௪).

நசனாடிநீழல்சென்றெய்தினன்
பேசுகின்ஜையின்கூட்டம்பெறற்கருந்
தேசுலாவுகயிலையிற்சேர்ந்தன
வாசவன்முதலோர்கள்வழுத்தவே.

(இ - ள்) சிவபெருமான் திருவடி நிழலைச்சேர்ந்தான்; சிவநாமத்தையே சொல்லும் கிளிக்கூட்டங்கள் எல்லாம் பிரமன் முதலானவர்கள் துதிக்கும்படி ஒளியுருவான திருக்கயிலாயத்தை அடைந்தன. எ-று. (ருரு)

கூருகிர்சிறுகாற்பசுங்கோக்கிளி
வாரிசன்றருசாபமுமாறியே
சீரியைந்ததிருவுடல்பெற்றவ
ணேரிலானைநிரம்பத்துதித்ததே.

(இ - ள்) கூர்மையான நகங்களும் சிறிய பாதங்களும் உடைய இராசக் கிளி பிரமதேவனால் கேரிட்ட சாபம் நீங்கிச்சிறப்பு பொருந்திய திவ்விய சரீரம் பெற்று, அவ்விடத்தில் தனக்குத்தானே ஒப்பான சிவபெருமானை மிகுதியாகப் போற்றியது. எ-று. (ருசு)

நன்றுசெய்யினுநன்றலசெய்யினு
மென்றுநின்சரணேத்தினுநீங்கினு
மொன்றுமென்செயலின்றியேயுன்செயல்
பொன்றயங்குசடைமுடிப்புண்ணியா.

(இ - ள்) பொன்போலப்பிரகாசமுள்ள சடாமகுடத்தையுடைய புண்ணிய மூர்த்தியே! நன்மையைச்செய்தாலும் தீமையைச்செய்தாலும் எப்போதும் உன. து திருவடிக் கமலங்களை வணங்கினாலும் வணங்காவிட்டாலும் எதுவும் எனது செய்கையாகாமல் எல்லாம் உன் செயலே ஆகும். எ-று. (ருஎ)

அரியதாகியறிவுருவாகிமே
லொருவனாகியுறுதொழின்மூவராய்ப்
பெருகுமண்டப்பரப்புறுபெற்றியாய்க்
கருணையங்கடலாகியகாரணா.

(இ - ள்) அரும் பொருளாகி, அறிவே வடிவமாகித்தனித்த வஸ்துவாகிப் படைத்தல்-காத்தல்-துடைத்தல் ஆகிய முத்தொழில் கர்த்தராகிப்பெரிதான உலகத்தின் தன்மையாய், (அதாவது சராசரமாகி) கருணைக்கடலாகிய காரணப்பொருளே! எ-று. (ருஅ)

நிருவிகாரநிருமலநிற்குண
வொருநிரஞ்சனமாகியவுத்தம
பரவுபாலினெய்போற்பல்லுயிர்க்குமே

(இ - ள்) விகாரமில்லாததாயும், மலமில்லாததாயும், குணமில்லாததாயும், நிரஞ்சனமாயும், விளங்குகின்ற வுத்தமப்பொருளே! பாலில நெய் பொருந்தி யிருப்பதுபோல் எல்லா உயிர்களுக்குள்ளும் பொருந்தி மறைந்தபொலியும்வள்ளலே! எ - று. (ருக)

அருட்டிறத்தைத்துதித்தகலாதுநின்
றிருட்குறும்பைச்சிதைத்தனிணைமலர்
விரைப்பதத்தினிணன்புமென்மேலுறத்
திருக்கண்வைத்தெளிவந்ததென்செப்புகேன்.

(இ - ள்) திருவருளின் தன்மையைப்போற்றி நீங்காமல் நின்று அடியேனது அஞ்ஞானமாகிய பொல்லாங்கைக்கெடுத்து வாசனை மிகுந்த தாமரைமலர்போன்ற இரண்டு பாதங்களுக்கு மேலும் மேலும் அனபு செய்யும்படி கிருபாநோக்கம் எளிதில் வைத்துக்காத்ததை என்னென்று சொல்லுவேன்? எ-று. (சுO)

என்றுபற்பலவாழ்த்தெடுத்தேத்தலுங்
கொன்றைவார்சடையம்பலக்கூத்தனு
நின்றுநோக்கிநின்பூசைமகிழ்ந்தன
மொன்றுநல்வரநகேட்டியென்றோதினான்.

(இ - ள்) இவ்வாறாகப்பலவிதமாய்த்தோத்திரம் பண்ணியபோது, கொன்றைமாலை தரித்த நீண்ட சடாமகுடத்தையுடைய சிவபெருமான் கிருபாநோக்கம் புரிந்து, "நீ செய்த பூசையினால் சந்தோஷமாயினோம்; நன்மையான ஒரு வரத்தைக்கேள்" என்று திருவாய் மலர்ந்தருளினார். எ-று. (சுக)

சிறுமையாயினுஞ்செல்வங்களாயினு
மறுமையிம்மைகளாயினுமற்றினி
யுறுதிநின்சரணென்றொழியாதுறப்
பிறையணிந்தாயருள்செய்யும்பெற்றியே.

(இ - ள்) பிறைசூடிய பெருமானே! அடியேனுக்கு அநுக்கிரகம்செய்யும் தன்மையானது வறுமைவரினும், செல்வம்வரினும், இகபரசுகம் வரினும், இனிமேலும் உன்பாதமேகதி என்று, தவிராது அடைவதேயாம். எ-று. (சுஉ)

மாலயன்மகவான்பெறுவாழ்வுகள்
சாலவெய்தினுந்தள்ளியிகழ்ந்திடக்
கோலுவெந்நரகிற்குடியாயினு
நீலகண்டநிற்காட்செயவேண்மொல்.

(இ-ள்) பிரமனும், மகா விஷ்ணுவும், தேவேந்திரனும் ஆகிய இவர்கள் அடையும் வாழ்வுகள்வலியக்கிடைத்தாலும, அவைகளை இழிவெனத்தள்ளிக்கொடுமையான நரகத்திலிருக்கும்படி நேர்ந்தாலும், கறுத்தகண்டத்தையுடைய கடவுளே! உனக்கு அடிமைத்திறம் செய்யவேண்டும். எ-று. ஆல்-அசை. (கஙஅ)

என்னநெஞ்சங்குழைந்தங்கிருகரஞ்
சென்னிமேற்குவிததன்பினிற்செப்பலு
மன்னவாறுநிற்காகவென்றண்ணலு
மின்னுவெண்கயிலைக்கிரிமேவினன்.

(இ-ள்) என்று மனமுருகி இரண்டு கைகளையும் சிரசிற் குவித்து அன்போடு இரந்து கேட்கவும், அப்படியே யுனக்குக்கிடைக்குமென்று சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளி, ஒளிதங்கியவெண்மையான கைலயங்கிரிக்கு எழுந்தருளினார். எ-று. (கஙசு)

பூவின்மாரிபொழிந்தனர்விண்ணுளோர்
தேவதேவன்றிருவருள்போற்றினார்
பாவைபாகனடியைப்பணிகுவார்
யாவரோனுமடிகளென்றேத்துவாம்.

(இ-ள்) தேவர்கள் பூமாரி பொழிந்து சிவபெருமானுடைய திருவருளை வாழ்த்தினார்கள். பார்வதி பங்கன் திருவடிகளைப்பணியப்பட்டவர்கள் எப்படிப்பட்டவர்களாயினுமஎம்மைஆளாகக்கொண்டருளுமசுவாமிகளென்றே போற்றுவோம் யாம. எ-று. (கஙரு)

கிளித்தலத்திற்கிளிவனமாயதுங்
களிக்கொளீசர்கிளிவனநாயகர்
களிக்குமித்தக்கலியுகநாமமென்
றெளிக்கொணந்திமுனிவற்குரைத்தனன்.

(இ-ள்) பாவநாசப்பதி, கிளிபூசித்தபடியால் கிளிவனமாகவும், கிருபையையுடைய ஈசர், கிளிவன நாதராகவும், சந்தோஷிக்கத்தக்க இந்தக்கலியுகத்தில் வழங்கும் பெயர்கள் ஆமென்றுபுகழ்பெற்ற நந்திதேவர் சனற்குமார முனிவருக்குச்சொன்னார். எ-று. (கஙகூ)

கிளிச்சருக்கம் முற்றிற்று.



# குட்டந்தீர்த்தசருக்கம்.

ஆரணிகங்கைவேணியங்கையின்மழுமான்வைத்த
சீரணிநந்திதேவன்சனற்குமாரற்குச்செப்பும்
வாரணிகொங்கைபாகன்மகிழ்பாவநாசந்தன்னிற்
றீர்விலாக்குட்டந்தீர்ந்தசெய்தியுங்கூறலுற்றான்.

(இ - ள்) யாவரும் புகழ்ந்து பேசும் பார்வதி பங்கனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பாவநாசமென்னுந்தலத்தில் நீங்குதற்கரிய குட்டம் நீங்கிய சரித்திரத்தை அழகியகங்கையைத்திருமுடியில் தரித்துத்திருக்கரங்களில் மழுவையும் மானையும் வைத்தருளிய பெருமைபொருந்திய நந்திதேவர்சனற்குமார முனிவருக்குச்சொல்லத்தொடங்கினார். எ-று. (க)

வயல்விளிம்புடுத்தசோலைமாங்கனியுடைந்ததேந்தே
னயல்வளர்கழைக்குத்தேங்கியரவிந்தவோடைமேவுங்
கயலுகள்மருதவேலிகழிந்திகொன்சூழ்முல்லை
செயலொளிர்முத்தமல்குதென்கடற்பாண்டிநாடு.

(இ - ள்) பிரகாசிக்கின்ற முத்துகள் நிறைந்த தென் கடலால் சூழப்பட்ட பாண்டி நாடானது கழனிகளின் கரை சேர்ந்த சோலையிலுள்ள மாங்கனிகள் விழுந்து உடைந்து பெருகிய மதுரத்தேன் பக்கத்தில் வளரும் கரும்புகளுக்கு பாய்ந்து தாமரை ஓடையில் தங்கும் மீன்கள் குதிக்கத்தக்க மருத நிலமும் வேலியில்லாத காடுகள் நெருங்கிய முல்லை நிலமும் உடையன. எ-று. (உ)

வாளைகடாவும்பச்சைமரகதநிறந்தழைத்த
பாளையங்கமுகிலேறிப்பவளங்கள்படருநாடு
வேளையுமிகழுந்தெய்வமேனியினழகுவாய்ந்த
காளையர்பதினாறாண்டின்மகப்பெறுங்கன்னிநாடு.

(இ - ள்) மன்மதனையுங்குறைவாகச்செய்யும் திவ்வியசரீரத்தின் அழகுள்ள வாலிபர்கள் பதினாறுவயதில் புத்திரரைப்பெற்று வாழும்பாண்டிநாடு வாளைமீன்கள் பாயும் பச்சை இரத்தினத்தின் நிறந்தங்கிய பாளையையுடைய அழகிய பாக்குமரங்களில் பவளக்கொடிகள் ஏறிப்படரும் நாடாகும். எ-று. (ங)

தண்கதிர்வாளினாலேசகத்திருண்மாய்க்குந்தெய்வ
வொண்கலாநிதிக்குலத்திலுற்பவித்தெழுந்தகொங்கை
கண்கவர்வனப்புவாய்ந்தகயற்கணாட்பெறுந்தவத்தோன்
பண்மிகுதமிழ்வளர்க்கும்பாண்டிநாடாளுங்கோமான்.

(இ - ள்) குளிர்ச்சி பொருந்திய கிரணங்களாகிய வாளாயுதத்தைதினாற் சகத்தினிருளைப்போக்கும் தெய்வத்தன்மையுள்ள சந்திரகுலத்திலுதித்ததுப்பருத்த தனங்களையுடைய கண்களைக்கவரத்தக்க அழகு நிறைந்தமீனாட்சி தேவியைப் பெண்ணாகப்பெற்ற தவத்தோன் இசை மிகுந்த தமிழை விருத்தி செய்யும் திருப்பாண்டி நாட்டையாளும் அரசன். எ-று. (௪)

குறைகெடக்கலினப்பாய்மாக்குஞ்சரமணியின்குப்பைத்
திறைகொடுகொடுங்கைமேலாற்றெவ்வர்களணங்குமுன்றி
னிறைவுறுவெற்றித்தோகைநின்றசைந்தாடுமிஞ்சி
யிறைதருகுடிகளாகக்குறுநிலத்திறைவருண்டால்.

(இ - ள்) பகையரசர்கள் தங்கள் குறை தீரும்படி கடிவாளம் பூண்டு பாய்ந்து செல்லும் குதிரைகளையும் யானைகளையும் இரததினக்குவியல்களையும் கப்பமாகக்கொண்டு கையாகிய அணைமேல் தலை சாய்ந்து வாட்டமுற்றிருக்கும் முற்றத்தையும், வானத்தில் நிறைந்திருக்கும் செயக்கொடிகள் நிலையாக இருந்து ஆடுகின்ற மதிலையுமுடைய அரசனாற் காக்கப்படுங்குடிகள் போல் கீழ்ப்பட்டு நடக்கும் சிற்றரசர்கள் இருந்தார்கள். எ-று. (௫)

அக்குறுநிலமன்னர்க்குளறப்பெருங்கான்சூழெல்லைத்
திக்குறுதென்கடற்பாற்றிறலுறுமறக்குலத்துண்
மிக்குறுமுதன்மைகொண்டுவிளங்கிடுஞ்சழக்கனென்போன்
செக்குறுகணையைப்போலச்சுழன்றுளேதிரிந்தநெஞ்சன்.

(இ - ள்) அந்தக்குறு நிலமன்னர்களுக்குள் மிகவும் பெரிய காடு சூழ்ந்த் எல்லை அடுத்த திக்கில் தென் திசைக்கடற் கரையில் திறமையைக்காட்டும் மறவர் குலத்தில் மிகவும் முதன்மை பூண்டு விளங்கும் சழக்கனென்னும் பெயரையுடையோன் செக்கிற் பொருந்திய சுற்றுமரத்தைப்போலத்திருகுஞ்சித்த முள்ளவன். எ-று. (௬)

ஆறலைத்துண்போர்கூட்டத்தருள்புரிந்தரசுசெய்வோன்
வேறொருநிலத்திற்சென்றுவினைபொருள்கவருந்தீயோன்
மாறுடைவஞ்சத்தன்னால்வழிவருவோரைக்கொன்று
தூறுரைத்தவர்பாலுள்ளபொருளெலாஞ்சூறைகொள்வோன்.

(இ - ள்) வழி பறித்துண்ணுங்கூட்டத்தார்ர்களுக்குத்தயவு செய்து தலைமை நடாத்துவோன்; அன்னியருடைய பயிர் நிலத்திற்குப்போய் அதில் விளைந்திருக்கும் தானியங்களைக்களவு செய்யுங் கொடியோன்; விரோதத்தைத்தரும் வைரத்தினால் வழியில் வருபவர்களைக்கொன்று பழிச்சொல் உரைத்து அவர் இடத்துள்ள பொருள்களையெல்லாம் கொள்ளை கொள்வோன்; எ-று. (எ)

கூக்குரல்கேட்டுநெஞ்சங்குலவியவுவகைபூப்போன்
வாய்க்கவேபுள்விலங்குமயானமாம்வயிறுகொண்டா
னேச்சுறுமயல்மின்னாரைநோக்கியேயாசையின்பச்
சேக்கவேகளவின்வவ்விவலிதினிற்சேருங்கையன்.

(இ - ள்) கோ என்று அழும் ஓசையைக்கேட்டு மனதில் மிகுந்த சந்தோஷங்கொள்வோன்; பறவைகளுக்கும் மிருகங்களுக்கும் மயானம் என்னும்படியான வயிறுபடைத்தவன்; அழகுள்ள அன்னிய மாதர்களைப்பார்த்துச் சிற்றின்ப விச்சை மிகுந்து கள்ளத்தனமாய்ப்பற்றி அவர்களோடு பலவந்தமாய்ப்புணரும் கீழோன்; எ-று. (அ)

பாவமேதிரண்டுதோன்றும்படிவத்தோனிடும்பைகொண்டார்க்
காவதோருதவிசெய்யக்கனவிலுமறிந்திலாதா
னாவில்வஃசொல்லேயுள்ளானவிற்றிடானின்சொல்லேதான்
ராவியேமதுவருந்துந்தறுகண்ணனிரக்கமில்லோன்.

(இ - ள்) பாவங்கள் எல்லாஞ்சேர்ந்துதோன்றியவுருவத்தையுடையோன்; தரித்திரர்களுக்குத்தன்னால் கூடிய வுதவியைச்செய்யச்சொற்பனத்திலும் நினையாதோன்; நாவில் கொடுஞ்சொல்லேயுள்ளோன்; இனியசொல் ஒருபோதும் சொல்லாதோன்; ஆசையோடு கள் குடிக்கும் கொடியோன்; கருணையில்லாதோன்; எ-று. (கூ)

முடிவிலாவெவ்வசெய்கைமூர்க்கரின்மிக்கமூர்க்கன்
படிறுகள்விளையும்வாயன்பாவிதன்பேர்சொன்னோருங்
கொடியதாநரகிற்சேர்வர்கொன்றைவார்சடிலக்கூத்த
னடியவர்தம்பாற்செய்ததனவில்பாதகங்களாமால்.

(இ - ள்) முடிவில்லாத கொடுஞ்செய்கையே செய்யும் கொடியர்களில் மிகுந்த கொடியோன்; பொய்யும் கள்ளும் உண்டாகும் வாயோன். இப்பாதகன் பெயரைச் சொன்னவர்களும் கொடுமையான நரகத்தையடைவார்கள். கொன்றைப்பூமாலை யணிந்த நீண்ட சடைமுடிகொண்ட சிவபெருமானுடைய தொண்டர்களுக்குச்செய்த பாதகங்கள் எண்ணிறந்தனவாம். எ-று. (௰)

இப்பிறப்பினிற்செய்பாவமிக்குறிலிம்மைக்கண்ணே
தப்பிலாதவனைத்தாக்கல்சத்தியநீதியாமால்
மெய்ப்படுபெருநோய்கொண்டுவிளங்குகால்கைகுறைந்து
செப்புறுகிருமிதோன்றத்திமிருடலெங்குமானான்.

(இ - ள்) இந்தப்பிறப்பில் ஒருவன் செய்த பாவம் மிகுந்திருந்தால் இந்தப் பிறப்பிலேயே அதன் பயன் தப்பாமல் அவனையடையும் என்னும் நீதி சத்தியமே; ஆகையால் சரீரத்தில் பெருவியாதி தோன்றி, விளங்கும் கால்களும் கைகளும் குறைந்துகொண்டு, சொல்லும் புழுக்கள் காண, முழுதும்திமிர் உடலானான். எ-று. (கக)

இரங்கியேமுன்செய்பாவமெண்ணியேயினைந்துநைந்து
கரங்களைநோக்கித்தேயுங்கால்களைநோக்கியாழி
யுரங்கொளுநல்லோர்பக்கலோதியித்துயரம்போக
மரங்கள்போலுடல்கொண்டார்க்குமருந்துண்டோசொல்லுமென்றான்.

(இ - ள்) அழுகிய கைகளைப்பாராததும் குறையும் கால்களைப்பார்த்தும் மனம்வருந்தி, முன் செய்த பாவத்தையெண்ணித்துயரடைந்து, கடல்போலும் ஞானமுடைய பெரியோரிடத்தில் தெரிவித்து, இந்தத்துன்பத்தை நீக்கக்கருதி, மரங்கள் போல் திமிருடல் கொண்டவர்களுக்கு மருந்துண்டோ? சொல்லுங்கள், என்று கேட்டான். எ-று. (கஉ)

இவ்வண்ணங்கூறிக்கேட்கவியல்வண்ணங்கற்றநல்லோர்
செய்வண்ணமில்லாய்தீர்க்குந்திருமருந்தொன்றுகேளாய்
கைவண்ணநெல்லிபோலக்காண்குவைகாசிக்கேகி
மெய்வண்ணமாறிநல்லமேனியாங்கங்கையாடில்.

(இ - ள்) இவ்விதம் சொல்லிக்கேட்கத்தம்மால் கூடுமான வரையில் சாஸ்திரங்கள் கற்றுத்தேர்ந்த பெரியோர் "செய்யும்காரியம் இல்லாதவனே! உனது வியாதியைப்போக்கும் நல்ல மருந்து ஒன்று சொல்லக்கேள். அதன் பயனை உள்ளங்கை நெல்லிக்கனிபோலக்காண்பாய். காசிபதிக்குப்போய்த்திருக்கங்கையில் ஸ்நானஞ் செய்தால் உன் சரீரம திமிர் நீங்கப்பெற்றுத்திவ்விய தேகமாகும். எ-று. (கங)

ஈதலால்மருந்துவேறிங்கில்லையென்றுரைத்தலோடும்
பேதறுநெஞ்சன்பெற்றபின்னையைநிலைநிறுத்தி
பாதகவினைகடரப்பாவியேன்காசிநோக்கப்
போதுவனென்றேவிட்டுப்புறப்பட்டான்பொருள்கைக்கொண்டு.

(இ - ள்) இது அல்லாமல் வேறேமருந்து இவ்வுலகிலில்லை." என்று பெரியோர் சொல்லவும், வருத்தம் மனதுடையோன் தான்பெற்ற மகனை வீட்டிலிருக்கச்செய்து "பாவியாகிய யான் எனது பாதக வினைகள் நீங்கும்படி திருக்காசிக்குப்போவேன்" என்று போதுமான திரவியம் எடுத்துக்கொண்டுதனது ஊரை விட்டுப்புறப்பட்டான். எ-று. (கசு)

நால்வர்கடுணைவராகநாடியேமெல்லமெல்லக்
கால்களினடந்துசென்றுகமழ்நறுந்தீர்த்தமாடி
மேலுறுதலங்கடோறுமேவியவாறிறைஞ்சிச்
சேலமாநகரில்வந்தான்சிவனருட்டுறையென்றோர்ந்து.

(இ - ள்) நால்வர்களே நல்ல துணைவர்களென்று கருதி, மெல்ல மெல்லக் கால்களால் நடந்து போய், வாசனை மிகுந்த பலதீர்த்தங்களில் ஸ்நானம் செய்து, மேன்மை மிக்க ஒவ்வொரு தலத்திலும் தக்கபடி வணங்கிச்சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் இடமென்று அறிந்து, சேலமா நகருக்கு வந்தான். எ-று.

வந்தவன்பரமன்கோயில்வாயலினயலினோர்பா
னொந்திடுகால்கள்முன்னினதிகமாய்நோவுண்டாகச்
சிந்தையிலரந்தைமூளக்கங்குலேதீருமட்டு
மந்திவண்ணாவுன்றஞ்சமென்றமர்ந்திருந்தானங்கண்.

(இ - ள்) அப்படி வந்தவனுக்குச்சிவபெருமான் திருக்கோயிலின் கோபுர வாயிலுக்கருகில் ஓரிடத்தில் நோவுங் கால்கள் முன்னிலும் அதிகமாய் நொந்ததினால் மிகவும் மனம் வருந்தி, இராப்பொழுது கழியும் வரையில் "சிவபிரானே! அடைக்கலம்" என்று அவவிடத்தில் தங்கியிருந்தான். எ-று. (கரு)

வாவியினூறுகின்றமனுசரணத்தண்ணீரை
யாவியேகுளிரத்தாபமகன்றிடவருந்தினாற்
பாவவெவ்வினைகள்யாவும்பதைத்துமெய்குலைகுலைந்து
போவதுதுணிந்ததன்னைப்பொருந்தினபற்றுவிட்டே.

(இ - ள்) மூவகைத்தாபங்களும் நீங்கி ஆத்துமா சீதளானந்தமடைய மனுசரணத்திருக்குளத்தில் சுரக்கின்ற தீர்த்தத்தை உட்கொண்டதினால் அவனது கொடிய பாவவினைகளெல்லாம் பயந்து, சரீர நடுக்கமுற்று, அவனைப்பற்றிய இச்சையை விட்டு ஓடிப்போகத்தீர்மானித்தன. எ-று. (கசா)

மண்ணிடைவேர்கள்கீண்டுபடர்ந்துமேல்வானினோங்குந்
தண்ணுறுங்கொடியவேரின்முளறுந்தன்மையேபோல்
உண்ணிறைபாவமென்னும்வேர்கெடவுடலமெங்கும்
புண்ணுறுவேர்படர்ந்தநோவுமேபொலிவழிந்த.

(இ - ள்) பூமியில்வேர் ஊன்றிப்படர்ந்துஉயர்ந்த ஆகாயத்தை அளாவிய குளிர்ச்சி மிக்க கொடிகளினுடைய வேரின் அடி அறுந்தன்மைபோல், உள்ளத்தில் நிறைந்த பாவம் என்னுப்பட்ட வேர் அற்றுப்போனதினால உடம்பெங்கும் உள்ள புண்ணில் மிக்க உதிரம் படர்ந்த வியாதியும் வாட்டமுற்றது.எ-று.

புண்ணிடையொழுகுநீரும்புலர்ந்ததுமுகமுங்வாட
உண்ணிறைகவலைத்துன்பமொருவழித்தணததலுற்ற
கண்ணுறுமுடலம்வெந்துகருகுறக்கதுவாநின்ற
எண்ணுறுதீயுமாய்வுற்றிடர்தருதிமிருமாய்ந்த.

(இ - ள்) புண்ணில் வடியும் இரத்தமும் வாடியது. முகமும் வாட்டமடைய உள்ளத்தில் நிறைந்த சஞ்சலங்கள் ஒருபக்கம் ஒழிந்துபோயின. மதிக்கும்படியான சரீரம் வெந்து கருகிப்போகும்படி பற்றிய பெருந்தீயும் மாண்டு இடர் செய்யும் திமிரவாதமும் ஒழிநது போயிற்று. (கக)

பொங்கியவிருள்புலர்ந்துவிடியலும்போதலுன்னு
னங்கதுகண்டுநெஞ்சத்ததிசயமிகவேயெய்திக்
கங்கையென்பதுமிந்நீரோகாசியென்பதுமிவவூரோ
வெங்குளவிதனைப்போலுந்தலமெனவியம்பிப்பின்னும்.

(இ - ள்) மிகுந்த இருள் நீங்கிப்பொழுது விடிந்தவுடன் புறப்பட்டுப்போதலைநினையாதவனாகித்தன்சவுக்கியத்தைப்பார்த்து,மனதில் அதிக ஆச்சரியமடைந்து, கங்கையென்று சொல்வது இந்தத்தீர்த்தமோ? காசியென்று கூறுவது இந்தப்பதியோ? இதைப்போலும் தலம் இவவுலகில் எஙகிருக்கிறது? என்று சொல்லிப்பின்னும், எ-று. (உ0)

மைப்படுகண்டர்கோயில்வலஞ்செய்துதெண்டனிட்டே
யெப்படிவருமோவின்னுமெப்படியாமோய
செப்புதற்கரிதாமென்றுதிருவருள்...
கைப்படுசெல்விபோலக்கண்டனன்றலத்தின்வீறு.

(இ - ள்) நீலகண்டராகுஞ் சிவபெருமானது திருக்கோயிலைச்சுற்றி வந்து தெண்டனிட்டு எவவாறு வருமோ? இன்னும் எப்படியாகுமோ? அது சொல்லுதற்கரிதானதென்றுதிருவருளைத் துதித்து, இத்தலததின் பெருமையை உள்ளங்கை நெல்லிக்கனிபோலக்கண்டான். எ-று. (உக)

மண்டலவாசஞ்செய்தோர்மண்டலங்கொள்வேனிந்நீ
ரெண்டிசையிடத்துமோரூர்க்கேகிடேனிவ்வூர்நீங்கில்
தெண்டிரைமணிமுத்தாற்றின்மூழ்கியேசிவனாரிங்கே
யுண்டெனவிடியற்பானுவுதயத்தேயுழக்குண்பேனீர்.

(இ - ள) இததலததில ஒரு மண்டலம் வாசஞ்செய்து இத்தீர்த்தத்தை ஒருமணடலம் உடகொள்வேன; இப்பதியைவிட்டு எட்டுத்திசையிலுள்ள வேறு எத்தலத்துக்கும் போகேன். இவ்வூர் நீக்க மற்ற தெண்ணிரையுடைய மணிமுத்தாற்றின்கண் மூழ்கிச்சிவபெருமான் இஙகுண்டென்று நிச்சயித்துச்சூரியவுதய காலத்தில் அத்தீாத்தம் உழக்கு அளவுண்பேன். எ-று. (உஉ)

வந்திடுதினங்கள்செல்லமனுசரணத்தண்ணீரைச்
சிந்தையின்மகிழ்சிகூர்ந்துகொள்ளத்தெள்ளமுதமாகி
மூந்துறுகோயுநீங்கிமுன்னையவடிவந்தாங்கிப்
புத்தியர்யப்புடங்கள்வைத்தேயெடுதிடும்பசும்பொன்போன்றான்.

(இ - ள்) இவவிதமாக நாள்கள் செல்ல மனுசரணத்தீர்த்தத்தை மனதில் சந்தோஷம் மிகுந்து உட்கொண்டவர, அது சிறந்த அமுதமாகி; அதனுல்குட்டவியாதி தீர்ந்து, பழைய வடிவம் அடைந்து புத்தியாய்ப்பலபுடங்கள் வைத்து எடுத்த பசும்பொன்னுக்கு ஒப்பானான். எ-று. (உங)

வணங்குவன்றுதிப்பன்பல்கால்மற்றிகழ்ந்துரைப்பன்முன்னைக்
குணங்களைப்பாவநாசமென்னவேகூறுநாம
மிணங்குமித்தலத்துக்கென்பனென்னைப்போற்றலைபுழுத்த
சுணங்கனுய்த்திரிந்தபாவத்தொலைத்தவருண்டோவென்பான்.

(இ - ள்) பலதரம் பணிவான்; போற்றுவான்; தன் பழைய குணங்களை இகழ்ந்து பேசுவான்; பாவநாசமென்று சொல்லும் பெயர் இத்தலத்துக்குப் பொருந்துமென்று சொல்லுவான்; "புழுத்தலையையுடையநாயென அலைந்த பாவத்தை என்னைப்போல் தீர்த்துக்கொண்டவருண்டோ?" என்று சொல்வான். எ-று. (உச)

இன்னன கூறியீசன்றிருவருளெண்ணிப்போற்றிப்
பொன்னகுசிகரக்கோயின்மண்டபம்புதுமையாகத்
தன்னுறுதொழிலிலீட்டும்பொருளெலாந்தருவித்தன்பான்
மன்னியபரமனுக்குத்திருப்பணிமதிலுஞ்செய்தான்.

(இ - ள்) இவ்வாறு சொல்லிப்பரமசிவத்தின் திருவருளை நினைத்துத்துதித்துப்பொன்போல் விளங்கும் சிகரத்தையுடைய ஆலயத்துக்குப்புதிதாக முனமண்டபம்-மதில் ஆகிய திருப்பணிகள் முன்பு கொடுந்தொழிலால் சம்பாதித்த திரவிய முழுவதும் வரவழைத்துச்சகதுப்பொருளாகிய சிவபெருமானிடத்தில் வைத்திருக்கும் அன்பினால், செய்து முடித்தான. எ-று. (உரு)

தினந்தொறுந்தனதுபூசைசெய்திடவேண்டுமென்ன
நினைந்தனனரன்கோயிற்குவடபுறம்நெடியபூமி
தனந்தனைமிகவுந்தந்துவிலையெனத்தானேகொண்டு
கனந்தருகல்லுநட்டுநடத்தினன்கறைக்கண்டற்கே.

(இ - ள்) நாள்தோறும் தன் பெயரால் பூசை நடத்தவேண்டுமென்று எண்ணங்கொண்டு சிவாலயததுக்கு வடபுறத்தில மிருந்த திரவியத்தைக்கொடுத்து விலைக்கு வாங்கித்திடமான கலவெட்டுநாட்டிச்சிவபெருமான் பூசைக்கு ஏற்பாடு செய்தான். எ-று. (உசு)

பருவமோரயத்திருந்துபரமனுர்க்காடல்பாடல்
விரிவுறச்செய்துபின்னர்விதிமுறையரசுசெய்து
புரிகுவன்றருமமென்னப்போயினன்றன்னகர்க்குத்
திருவளர்பாவநாசத்தீசர்தான்சிந்தைசெய்தே.

(இ - ள்) பத்து வருடகாலம் அவ்விடத்திருந்து சிவபெருமானுக்கு ஆடல் பாடல் சிறப்பாக நடத்திப்பின்பு மனுநீதியின்படி ஆளுகை செய்துதருமம்செய்வேனென்று செல்வம் ஓங்கும்சேலபுரத்தில் விளங்கு ம சிவபெருமான் திருவடிகளைத்தியானித்துத்தனது நகரத்துக்குப் போயினன். எ-று. (உஎ)

வெங்கொலைகளவுதீமைவிளைத்தவினிம்மைக்கண்ணே
யங்கவனுட்டிலுள்ளோர்நோய்கொண்டோரளவில்லார்சன்.
பொங்குமூற்குணைகயிலிட்டுப்புடத்தினிலுருக்கிக்கண்ட
தங்கமேபோலமின்னுஞ்சழக்கன்றன்னுடலைக்கண்டார்.

(இ - ள்) களவும்-வெவ்விய கொலையும் இப்பிறப்பிலேயே துன்பத்தைத் தருதலினால் அவனது தேசத்திலுள்ளவர்களில் நோயாளிகளுக்குக்கணக்கில்லை; புடம் வைத்துக்குகையில்விட்டு உருக்கிய தங்கத்தைப்போல் விளங்கும் சழக்கனுடைய சரீரத்தை அவர்கள் பார்த்தார்கள். எ-று. (உஅ)

எத்தவஞ்செய்தானென்பாரீசனார்வரமோவென்பர்
சித்தர்மூலிகைபளித்தசித்தனுமிவனோவென்பர்
கைத்தலக்கழைவில்வேள்போற்கட்டழகுடையனானான்
வைத்தகைக்கானகண்கள்வளர்ந்ததெவவாறோவென்பார்.

(இ - ள்) இவன் என்ன தவம் செய்தான்? என்று சிலர் சொல்வார்கள்; சிவபெருமான் அருளிய வரமோ? என்று சிலர் சொல்வார்கள்; சித்தருடைய மூலிகையைப்பெற்ற சித்தன் இவனோ? என்று சிலர் சொல்வார்கள்; கரும்பு வில்லைக்கையில் தரிக்கும் மன்மதனைப்போல் சிறந்த அழகுடையவனானான்; கைகளும், கால்களும், கண்களும் வளர்ந்த காரணம் யாது? என்று சிலர் சொல்வார்கள். எ-று. (உகூ)

சழக்கனுஞ்சொல்லக்கேட்டாரொன்றினாற்றவிராநோயா
விழுக்குறுமேனிகொண்டாரியாவரும்விரைந்துவந்தே
வழக்குறுபாவநாசவாசத்தான்மணிமுத்தாற்றின்
முழுக்கினால்வாவிநீரால்மூவகையாநோய்தீர்ந்தார்.

(இ - ள்) எவ்விதத்தினாலும் தீராத வியாதியினால் வருந்தும் சரீரமுடையோர் எல்லாரும் சழக்கன் சொன்னவைகளைக்கேட்டுத்துரிதமாகப்புறப்பட்டு வந்து பாவநாசமென்னும் தலத்தில்வாசஞ்செய்ததினாலும், திருமணிமுத்தாநதியில் ஸ்நானம் செய்ததினாலும், மனுசரணதீர்த்தம் உட்கொண்டதினாலும், மூன்று வகையான பிணியினின்று நீங்கினார்கள். எ-று. (௩௦)

குட்டந்தீர்த்த சருக்கம் முற்றிற்று.



# பரிச்சித்துச்சருக்கம்.

பண்டையிற்காதையொன்றுபசுக்கொலைபாவந்தீர்த்த
துண்டொருபாவநாசத்தலச்செய்தியுண்மையென்னக்
கண்டிகைதிங்கள்சூடிக்கைப்பிரம்பெடுக்குநந்தி
கொண்டமாதவச்சனற்குமாரற்குக்கூறலுற்றான்.

(இ - ள்) பாவநாசமென்னும் தலவிசேடத்தால் பூர்வகாலத்தில் பசுவை வதைத்த பாவம் நீங்கியசரித்திரம் ஒன்றுண்டு-என்பது உண்மையே-என்று ருத்திராக்ஷமாலையும், சந்திரனையும் தரித்துக்கையில் பிரம்பையேந்தும் நந்திதேவர் மகா தவத்தையுடைய சனற்குமாரமுனிவருக்குச்சொன்னார். எ-று. (க)

பொருபவரில்லையென்றுபுகன்றெழுபதாகையாட
வரிபுனைபந்துபாவைகைக்கொண்டெங்குமாடத்
திருவிளையாடுமிஞ்சிச்சினகரமாடவீதி
குருமணிவெயிலெறிக்குங்கோகன்னமென்னுமூதூர்.

(இ - ள்) சண்டைச்செய்பவர் இல்லையென்று சொல்லி எழுகின்ற கொடியாடவும், பாவைபோன்ற பெண்கள்வரிந்து கட்டியபந்துகளைக் கையிற்கொண்டு எவ்விடத்தும் விளையாடவும், இலட்சுமிவிளையாடும்படியான மதிலால் சூழப்பட்ட கோவில்களிலும், மாடவீதிகளிலும், சிறந்த இரத்தினங்கள் சூரிய காந்தி வீசும்படியான கோகர்னமென்னும் பழமையான நகரத்தில், எ-று. (உ)

ஓரிடத்தடங்கண்ணாராமமுதினாலொலியினாலு
நீடியகடலையொப்பாய்விரப்பினால்வருவோர்தம்மை
யாடுநுங்கொடிகளென்னுங்கையினாலழைத்தல்போலு
மாடமாளிகைசூழ்மூதூர்வளங்கெழுவணிகர்வீதி.

(இ - ள்) மாடமாளிகைகளால் சூழப்பட்ட கோகர்ன நகரத்தில் செல்வம் மிக்க வைசிய வீதிகள் எண்ணத்தக்க விசாலமான கண்களையுடைய மாதர் என்னும் அமுதத்தினாலும் முழக்கத்தினாலும் பெரிய கடலுக்கு ஒப்பாகி, வறுமையால் வருந்தி வருகின்றவர்களைக்காற்றினால் அசையாநின்ற அழகிய கொடிச்சீலைகள் என்னும் கைகளால் வாருங்கள்! வாருங்கள்! என்று அழைப்பதை ஒக்கும். எ-று. (ங)

மலையிட்டமுலைபடைத்தார்வடியிட்டதேனின்சொல்லார்
சிலையிட்டநுதலார்தேய்ந்தசிற்றிடைக்குவமைகாணார்
நிலையிட்டகற்பினாலேநெடுந்திருநீங்காதன்பால்
விலையிட்டுமணிகள்மாறுமங்காடிவீதியாமால்.

(இ-ள்) மலைக்கு ஒப்பான தனமுடையவரும், வடித்த தேன் போலும இனிய சொல்லுடையவரும், வில்லுக்கு ஒப்பானபுருவமுடையவரும், மெலிந்த சிறிய இடைக்கு ஒப்பில்லாதவருமாகிய அந்நகரதது மாதர்கள் நிலைபெற்ற கற்புடன் மிக்கசெல்வம் படைத்து ஆவலுடன் விலைபேசிப்பண்டமாற்றாக மாணிக்கங்களை மாறும் கடைத்தெருக்கள் உள்ளனவாம். எ-று. (ச)

அக்குடிக்கெல்லாஞ்சார்பாயருமணிநூற்பயின்றோன்
கைக்கொடுநிறுத்துரைாதுக்காணியூதியமாய்க்கொள்வோன்
பொய்க்குணநீங்கிநல்லோர்சங்கமேபுரியொழுக்க
மெய்க்குணவியற்கையாளன்விளங்குபேர்பரிச்சித்தென்பான்.

(இ-ள்) அந்த வணிகர்குலத்திற்கெல்லாம் துணையாய் அருமையான இரத்தின சோதனை நூலில் தேர்ந்தவனும், கையினால் தராசில நிறுதது உரைகல்லில் உரைத்துக்காணி அளவாக லாபம் சம்பாதிப்போனும், பொய்க்குணமில்லாதவனும் பெரியாரோடு சேர்க்கை செய்யும் தன்மையுள்ள மெய்க்குணததை இயற்கையாய் உடையோனும், ஆகிய பரிச்சித்து என்னும் சிறந்த பெயருள்ளவன், எ-று. (௫)

வணிகரிற்றலைமைபூண்டுமாநிதிக்கிழவனென்னத்
தணிவறமணியும்பொன்னுந்தாளாண்மையாலேயீட்டி
யிணைகொளுந்தோழனென்பேரன்காளத்தியெனுன்பேரா
யணைதருசிறப்புகல்விகுலஞ்செல்வமளவின்றானே.

(இ-ள்) வணிகருக்குள் தலைவனாகிக்குபேரனைப்போல் குறைவில்லாத இரத்தினங்களையும்-பொன்னையும்-தன்முயற்சியால் சம்பாதித்தான்; அவனுக்கு நிகராக மதிக்கப்படும்சிநேகன் என்பவன் காளத்தி என்னும் பெயரையுடையவன்; இவன் அடையத்தக்க சிறப்பு-கல்வி-குலம்-செல்வங்களில் அவனுக்குச் சமானமானவன். எ-று. (சா)

சரகங்கள்கூட்டிவைத்ததண்கமழ்தேனிருலை
யொருவன்வத்தயலோன்கொள்ளிகொண்டுசுட்டோட்டிக்கொள்வன்
தமையிலைசலோபர்தேடுந்தனங்களாற்றுனிவிளைத்தே
காவடர்கொடுங்கோன்மன்னராதியர்கருதிகொள்வர்.

(இ - ள்) தேனீக்கள் சேர்த்துவைத்த குளிர்ச்சியான வாசனையுள்ள தேன் கூட்டை அயலோனாகிய ஒருவன்வந்து கொள்ளிக்கட்டையைக்கொண்டு சுட்டு ஈக்களையோட்டி அதைக்கைக்கொள்வான்; அதுபோல, லோபிகள்தேடும்திரவியத்தைக் கள்ளர்கள்-கொடுங்கோல்அரசர்கள் முதலானவர்கள் துன்பத்தைக் கொடுத்துப்பறித்துக்கொள்வார்கள். எ-று. (எ)

இரவுற்றுவந்தார்க்கங்கைகவிதிர்த்திலையிலையென்ப
ரொருகுத்துக்காயிரமபொன்னுதவுவாரலப்புக்காற்றார்
குருவுக்குந்தாய்தந்தைக்குங்கொடுத்திடாகிளையும்பேணா
திருவுற்றுவீணாய்மாய்ந்தசெம்பதிகள்கண்ணிற்கண்டார்.

(இ - ள்) கும்பிட்டுப்போட்டுப்பிச்சை வேண்டி வந்த ஏழைகளுக்குக்கையை அசைத்துப்பிச்சை இல்லை இல்லை என்பவர்களும், கள்ளாமைக்குத்து ஒன்றுக்கு வருந்தம பொறாமல் குப்பிட்டுப்போட்டு ஆயிரம பொன் கொடுப்பவர்களும், குருவுக்கும்-தாய் தந்தையர்க்கும் கொடாதவர்களும, சுற்றத்தாரையும் பாதுகாவாதவர்களும், செல்வம் படைத்து வீணாய் மாண்டுபோனசம்பதிகளை அவவிருவரும் பிரத்தியட்சமாய்ப்பார்த்தார்கள். எ-று. (அ)

திருநிலையாமைகண்டாரறிவினிற்றெளிந்தேயாக்கை
யுருநிலையாமைமேலுமுள்ளதெனறுளளநாடித
தருநிலையானநந்தாவனமொனறுசமையச்செய்தா
ரிருநிலம்புகழக்காவற்றொழிலினோர்க்கைந்துசெம்பொன்.

(இ - ள்) செல்வம நிலையாமையைக்கண்ணாரக்கண்டு, தங்கள அறிவினால் தெரிந்து, சரீரம் நிலையாயிராது ; மேலும் பிறத்தலுடையது; என்று ஆழமாக ஆராய்ந்து, பெரியபூமியில உள்ளவர்கள் புகழ்ந்து பேசக்காவற்காரனுக்கு ஐந்து செம்பொன் கொடுத்து, மரங்களுக்கு இருப்பிடமான நந்தனவனமொன்று ஏற்படுத்திவைத்தார்கள். எ-று. (கூ)

முல்லைபைந்துளவுவண்டுவந்தூதமுகமுறுக்கவிழ்கணவீர
மல்லிகைசாதிமகிழ்நறும்புன்னைமருக்கொழுந்துடனிருவேலி
யல்லியந்தோட்டுவலம்புரிகொன்றையளியுணாதரும்புசண்பகங்கள்
பல்வகைமலர்நந்தாவனஞ்சிலைவேள்படைக்கலச்சாலையைப்போலும்.

(இ - ள்) முல்லையும், பசுமையான துளசியும், வண்டுகள் வந்து ரீங்காரஞ்செய்வதினால் முகமலரும் அலரியும், சாதிமல்லிகையும், வாசனையுள்ள மகிழும், புன்னையும், மருக்கொழுந்தும், வெட்டிவேரும், அழகுள்ள அகவிதழ்களையுடைய நந்தியாவர்த்தமும், கொன்றையும், வண்டு மொய்க்காத சண்பகமும், இன்னும் பல்வகை மலர்களும் நிறைந்த அந்த நந்தனவனம் கரும்பு வில்லையுடைய மன்மதனுடைய ஆயுத சாலையைப்போலிருந்தது. எ-று. (க0)

காலையின்மாலைப்பொழுதினிலிருகாற்கமழுநந்தாவனத்தெய்தி
வேலைகள்செய்வாரவாவர்க்கேற்றபணிகளைவிவரமாயுரைப்ப
ராலமேயுண்டாற்கருச்சனைசெய்யவணிமலர்நிறைவதுகண்டார்
சீலமாயிவவாறொழுகிடுநாளிலோர்பகற்செய்திறமுரைப்பாம்.

(இ - ள்) காலைமாலையாகிய இரண்டு வேளைகளிலும் வாசனை வீசுகின்ற நந்தனவனத்துக்கு வந்து வேலை செய்யும்படியான ஆட்களுக்குத்தகுந்த செய்தொழிலை விவரமாய் எடுத்துச்சொல்வார்கள்; ஆலகால விஷத்தையுண்டருளிய சிவபெருமானுக்கு அருச்சனை செய்ய அழகிய புஷ்பங்கள் பூரணமாயிருப்பதைப்பார்த்தார்கள். பத்தியாய் இவவிதம் நடத்தி வந்த நாட்களில் ஒருநாள் செய்த காரியத்தைச்சொல்வோம். எ-று. (கக)

இருவருமந்திப்பொழுதினீரெற்றவிறைத்தநந்தாவனமொரக்க
விரைவினிற்சென்றூர்காவலரின்றிமேய்ந்தவோர்பசுவினைக்கண்டார்
கருதியேயொதுக்கிமுடுக்கலுமுழையிற்கரந்துறைவரிப்புலிபற்ற
வெருவியேகதறிக்கன்றினைநினைத்துவீய்ந்ததங்கிருவர்மேற்பழியாய்.

(இ - ள்) இரண்டு பேர்களும் சாயுங்காலப்பொழுதில் தண்ணீர் மிகுதியாய் இறைக்கப்பட்டுள்ள நந்தனவனத்திற்கு ஒருமித்துச்சீக்கிரமாகப்போனார்கள்; காவல்காரர்கள் இல்லாதபோது அதில் வந்து மேய்ந்த ஒரு பசுவைப்பார்த்தார்கள்; அதை ஓட்டும்படி நினைத்துப்புறம்பிற் செல்லத்துரத்தவும், குகையில் பதுங்கியிருந்த வரிகளையுடைய புலியானது அதைப்பிடித்துக்கொண்டதனால் பயந்து, தனது கன்றைக்கருதி அலறி அவவிருவர் மேற் பழி சுமரும்படி விழுந்திறந்தது. எ-று. (கஉ)

கண்டனர்கண்ணிற்கலங்கினர்மிகவுங்கருத்தழிந்திங்குநம்மாவி
யுண்டுகோவுயிரைச்செகுத்திடாதொழியிலுறுபழிவந்திடாதென்று
விண்டனரிரங்கியுருகினர்பதைத்துவிம்மினர்கூற்றன்வந்தாவி [ருர்.
கொண்டுபோயெரிவாய்நரகிடைவதைக்குங்கொடுந்துயர்க்கென்செய்வோமென்

(இ - ள்) அதைக்கண்ணினாற்கண்டு கலங்கி, மனவருத்தமடைந்து, இந்தப்புலியானது நம்முடைய உயிரைப்போக்கி இப்பசுவின் உயிரை நீக்காமல் விடுமாகில், நம்மேற்பெரும்பழி வந்து பொருந்தாது என்று சொன்னார்கள்; மனந்தளர்ந்து வருந்திப் பதைபதைத்துத் துக்கித்தார்கள்: இனி இயமன் வந்து நமது உயிரைப்பிடித்துப்போய் எரியும்படியான நரகத்தில் விட்டுத்தொந்தரவு செய்யும் கொடிய துன்பத்துக்கு என்னசெய்வோம்? என்று வியாகுலப்பட்டார்கள். எ-று. (கங)

பாதகதொடர்ச்சிதுவக்குறுமந்தப்பழவினையால்வருகொலையின்
றோடமேதீர்வதெங்ஙனெனிரங்கிச்சுற்றியெண்டிசைச்சிவதலங்க
ளுடிநல்லோரைவினவலுநல்லோர்நாரிசேய்பசுபரிகொன்றோ
ராடெரிதழலினுயிரொடுமூழ்கிவெந்திடினல்லதுநீங்கார்.

(இ - ள்) பாவத்தொடர்ச்சியால் பந்திக்கத்தக்க அந்தப்பூர்வகர்மத்தினால் சேர்ந்த இந்தக்கொலையினால் வந்த தோஷம் நீங்குவது எவவிதம் ? என்று மனம் நொந்து பலவிடங்களிலும் சென்று, எட்டுத்திக்குகளிலுமுள்ள சிவஸ்தலங்களுக்கு விருப்பத்தோடு போய் அங்குள்ள பெரியோரைக்கேட்கவும், அவர்கள் ஸ்திரீ-சிசு-பசு-குதிரை ஆகிய இப்பிராணிகளைக்கொன்றவர்கள் கொழுந்துவிட்டு எரியும் அக்கினியில் உயிரோடு விழுந்து சாம்பலாய்ப்போனால் அல்லாமல் பாவம் நீங்கப்பெறமாட்டார்கள். எ-று. (கச)

மறைபடாநரகத்துயரினுக்கஞ்சிமறுகிடிற்குழியிடைப்புகுந்து
விறகினையடுக்கியெரிதழன்மூழ்கிவெந்துடற்சாம்பலாய்ப்போகிற்
பெறுமகக்குதிரைபசுமினைக்கொல்பெரியபாவங்கள்போமென்னு
மறைநெறிதெரிந்தகல்வியின்வரம்பர்மாதவருரைதலைக்கொண்டார்.

(இ - ள்) ஒழியாத நரகவேதனைக்குப்பயந்து மனம் வருந்தினால் அக்குழியில் பிரவேசித்து விறகுகளை அடுக்கி எரிகின்ற அக்கினியில் விழுந்து சரீரம் வெந்து பஸ்பமாய் விடுமாகில் பெற்ற குழந்தையையும், குதிரையையும், பசுவையும், ஸதிரீகளையும் கொன்ற மகத்தான பாவங்கள் போய்விடும் என்று சொல்லும் வேதமார்க்கததையுணர்ந்த கல்வியின் எல்லையைக் கண்டவராகிய தபசிரேஷ்டர்களுடைய வசனத்தை மேற்கொண்டார்கள். எ-று. (கரு)

முலைததடஞ்சுமந்துகொடிச்சியர்நுசுப்புமுரிந்திறுமிறுமெனவிரங்கி
யலத்தகச்செஞ்சிறடிமிசைச்சிலம்புபுலம்பல்கேட்டழுவனபோன்று
மலைத்தலையருவியிழுமெனவிழிந்துவருபுனற்கோகனவைப்பில்
நிலைத்தநன்னெறிக்காளத்தியென்பவனுமிகர்பரிச்சித்தையேநோக்கி.

(இ - ளீ) குறப்பெண்களுடைய சிறிய இடைகள் பெரிய தனபாரஞ்சுமத்தலால் முரிந்து ஒடியும்-ஒடியும் என்று தளர்ந்து செம்பஞ்சுஊட்டிய சிவப்பான சிறிய அடிகளின்மேல் அணிபப்பட்டிருக்கும் தண்டைகள் புலம்புவது போன்று மலைமேல் உள்ள அருவிகள் இழும் என்னும் ஓசையுடன் இழிந்துவரும் நீர்வளம் பொருந்திய திருக்கோகரணத்தில் நல்லொழுக்க வழியில் நிலைத்துள்ள காளத்தியென்பவனும்தனக்குச்சமானமானபரிச்சித்து என்பவனைப்பார்த்து,எ-று,(கசு)

ஆழ்பெருங்குழிகளோரிரண்டாக்கியடுக்கியேமூடவிந்தனங்க
டாழ்வறக்கொணர்ந்தேயிக்குழியதனுட்சாவனியானீதழன்மூட்டென்
றாழ்வினைக்கொலையைநீக்கிடக்குழிபுக்குறைதலுமொருபரிச்சித்துக்
காழ்விறகடுக்கியெரிந்திடக்காலக்கடுந்தழல்கொணர்ந்துமூட்டினனால்.

(இ - ள்) ஆழமான பெரிய குழிகள் இரண்டு உண்டாக்கி, அடுக்கி மூடுவ தற்கு விறகுகளைக்குறைவில்லாமல் கொண்டு வந்து இத்தக்குழியில் நான் இறந்து விடுவேன், நீ நெருப்பு மூட்டுவாய்; என்று ஊழ்வினையால் நேரிட்டகொலைப் பாதகத்தை நீக்கும்படி குழியில் புகுந்திடவும், ஒப்பற்ற பரிச்சித்து வயிரமுள்ள விறகுகளைக்கொண்டு வந்து அடுக்கி ஊழிக்காலத்து நெருப்புப்போல் பற்றி எரிய மூட்டினான். எ-று. (கஎ)

அணைத்திடுபருவமாதுபோற்கனலையணைத்தனனரில்காளத்தி
நிணந்தழலுருக்கவுருகியேயொழுகுநெய்யின்மேன்மேற்கொழுந்தெழலு
முணர்ந்தபேரறிவாற்கண்ணினீரவாரவுமையரகரவெனவுரைத்துக்
கணந்தரியேன்யானினியுடன்வருவேன்கருதுகாளத்தியென்றுரைத்தான்.

(இ - ள்) குற்றமில்லாத காளத்தி என்பவன் பருவமுள்ள பெண்ணை ஆலிங்கனம் செய்வதுபோல் மகிழ்ந்து அந்த அக்கினியை ஆலிங்கனஞ்செய்தான்; அக்கினியானது கொழுப்பை உருக்க உருகிப்பெருகும் நெய்யிலிருந்து மேன் மேலும் கொழுந்து விட்டெழுந்தவுடன்பரிச்சித்து எனபவன்கண்ணீர் பெருகப் பல நூல்களையும் கற்றுணர்ந்த பேரறிவினால் ஹர! ஹர! என்று மொழிந்து 'இனி ஒரு கணமேனும் தரிக்கமாட்டேன், உடனே நானும் வருவேன்; காளத்தி! நீய றிவாய்; என்று சொன்னான். எ-று. (கஅ)

அன்பினாற்கண்ணீரருவியேசோரவாவியேசோர்ந்துளமயர்வான்
முன்புநான்வேவுமுறைதவிர்த்தேனுன்மொழியினைக்கடக்கமாட்டேனாற்
பின்புநானிருந்ததிக்கினைநோக்கிப்பெருந்துயரனுபவித்திடவோ
வென்பெருந்துயரந்தீர்ப்பவரெவரென்றேங்கியேகதறினழுதான்.

(இ - ள்) அன்பினால் தனது கண்களிலிருந்து நீர் அருவிபோல் பெருக உயிர் சோர்வு அடைந்து, மனம் வருந்தி, உன் சொல்லைக்கடக்கக்கூடாதவனாய் முதலில் நான் அக்கினி பிரவேசமாகும் ஒழுங்கினை நீக்கினேன். உனக்குப் பின் நீ இருந்த திசையைப்பார்த்துப்பெருந்துயரமடையவோ? மிகுதியான என் துயரத்தைத்தீர்ப்பவர் யார்? என்று ஏக்கமுற்றுப் புலம்பி அழுதான். எ-று. (கக)

சிகையுமுந்நூலுநுதலிடைத்திரிபுண்டரத்திருநீற்றினல்லொளியும்
தருமெனக்கையிற்றிகழ்செபவடமுந்தண்டொடுகுடையுமேகொண்டு
பகைசினமயக்கங்காமமேயறுத்தபடிமையாமபிங்கலமுனிவ
னகனெடுங்கானினயல்வழிச்செல்வோனழுகுரல்கேட்டுநின்றிரங்க.

(இ - ள்) சிகை முடியும், முந்நூலும் நெற்றியில் திரிபுண்டரமாகத்தோன்றும் திருவெண்ணீற்றுப்பிரகாசமும், தரும் என்று யாவரும் சொல்லும் கரங்களில் விளங்கும் செபவடமும்-தண்டமும்-குடையும்-கொண்டு, பகை-கோபம்-மயக்கம்-காமம் ஆகிய குற்றங்களை நீக்கிய தவவொழுக்கமுடைய பிங்கலமாமுனிவர் விசாலமான நீண்ட காடுகளின் பக்க வழியில் நடந்து அழுகுரலோசையைக்கேட்டு நின்று இரக்கப்படுகையில், எ-று. (௨0)

கண்டனன்விழியாற்கயிலைவிட்டெய்துங்கண்ணுதற்பரமனோவருளே
கொண்டிவணெய்துஞ்சிவகணத்தலைமையாங்கணநாதனோகுறிக்கிற்
பண்டையோரியற்றுந்தவங்கொலிப்படிவம்பசுக்கொலைதீர்க்குமென்றெண்ணி
யண்டியேதாண்மேல்வீழ்ந்தவனழலுமஞ்சலையென்றுகையமர்த்தி.

(இ - ள்) பரிச்சித்து தன் கண்களால் அவரைப்பார்த்து திருக்கைலாயத்தை விட்டு எழுந்தருளிய கண்ணுதற்கடவுளோ? கிருபையால் இவ்விடத்திற்கு வந்த சிவகணங்களுக்குத்தலைமையான கணநாதனோ? யோசிக்குமிடத்தில் முன்னோர்கள் செய்த தவமோ? இவ்வடிவம் பசுவைக்கொன்ற பாவத்தைத் தீர்க்கும் என்று கருதி, அருகில்வந்து அவரது திருவடிகள்மேல் விழுந்து அழுதலும் "பயப்படாதே" என்று திருக்கரத்தால் ஆறுதல் செய்து, எ-று (௨௧)

அவ்வழியணுகிக்குழியுமக்குழியிலங்கமும்வெந்தவெண்ணீறுஞ்
செவ்விதினோக்கியிங்கிதுவென்கொல்செப்பிடாயெனமலர்ந்தோட்ட
மவ்வியமின்றிச்செய்ததுங்கொலையுமக்கொலையகற்றிடுமோறு
வெவ்வியவழலிற்புகுந்ததுந்தழன்மேல்வெந்ததுஞ்சொலுமுனங்கேட்டு.

(இ - ள்) அவ்விடத்தில் நெருங்கிக்குழியையும்-அதிலிருந்த எலும்புகளையும்-வெந்த சாம்பலையும்-செம்மையாகக்கண்டு, இனி என்ன? சொல்லென்றுகேட்க, நல்லமனதுடன் நந்தனவனம்வைத்ததும், குரோதமின்றிப்பசுவைத்துரத்தியதும், அது கொலையுண்டதும், பசுக்கொலை நேர்ந்ததும், அதை நீக்கும் பொருட்டுக்கொடிய தழலில் பிரவேசித்ததும், அதில் வெந்ததும் ஆகிய சங்கதிகளைச் சொல்வதற்குமுன் கேட்டுத்தெரிந்து, எ-று. (௨௨)

பரவவல்வினையாம்பசுக்கொலைதீரப்படரெரிபுகுந்தனனிவனீ
வேவமேலெண்ணியிருந்தனையோசொல்விவரமாய்க்கேட்டியென்றுரைப்பான்
யாவரோவெனினுமறிந்துதீங்கியற்றிலதற்கிலையேபரிகார
மேவவேதன்னெஞ்சறிந்திடாதுற்றவெவ்வினைக்கேபரிகாரம்.

(இ - ள்) கொடிய செய்கையாகிய பசுக்கொலைப்பாதகம் நீங்கும்படி யடர்ந்த தீயில் இவன் பிரவேசித்தான்; நீ பிறகு நெருப்பில் விழுந்துவேக நினைத்திருந்தாயோ? யாம் விவரமாகச்சொல்லக்கேள் என்று சொல்லத்தொடங்கினார்.—எப்படிப்பட்டவர்களாயிருந்தாலும் மனதாரத்தீங்கு செய்தால் அதை நீக்குதற்குப்பரிகாரமில்லை; ஆனால் மனமறியாமற்செய்தகொடியபாவச்செயலைப் போக்குவதற்குப்பரிகாரமுண்டு. எ-று. (உ௩)

## வேறு.

இந்தவாறுபரிகாரஞ்செய்தாலிதுமாத்திரமகலு
முந்துபிறவிபலகோடிமுயன்றபாவமளவிலையாம்
நிந்தைகொலைகள்பொய்காமநிறைவடமூடவுயிரறிவு
வந்தேழ்பிறவிக்கடனரகின்மறுகுற்றொழிந்துபிறந்துழலும்.

(இ - ள்) இம்முறைமையாகப்பரிகாரம் செய்தால் இந்தப்பாவ மாத்திரம் தீரும்; முந்திய அனேக பிறப்புகளில் செய்த பாவங்களுக்கு கணக்கு இல்லை; குரு தூஷணம்-கொலை-பொய்-காமம்-ஆகிய பாவங்கள் நிறைவதனால், மூடபுத்தியுள்ள ஆத்மாக்கள் ஏழுவகைப்பிறவிக்கடலில் தோன்றி நரகத்தில் விழுந்து வருந்தி நீங்கிப்பிறந்து அலையும். எ-று. (உ௪)

எல்லாவினைக்கும்பரிகாரமியற்றுமாறுமுண்டதுதான்
சொல்வேன்கேட்டுநெஞ்சினிடைச்சரதமென்றேதணிவுகொள்வா
யல்லூடேற்றும்விளக்கெனவேமயக்கமெல்லாமகற்றுவிக்குங்
கல்லாலடியிற்சோதியுருக்காணும்வீடுங்கரநெல்லி.

(இ - ள்) பாவங்கள் எல்லாவற்றிற்கும் பரிகாரம் செய்து கொள்ளு மார்க்கமும் உளது; அந்தமார்க்கம் சொல்லுகிறேன்; அதைக்கேட்டுச்சததியம் என்று மனதில் நிச்சயித்துக்கொள்வாய்; இருட்டில் ஏற்றிய விளக்குப்போல், எல்லா மயக்கங்களையும் நீக்கும் கல்லால விருட்சத்தின் அடியில் குருமூர்த்தமா யெழுந்தருளிய சோதி உருவம் தோன்றும்; மோட்சமும் உள்ளங்கை நெல்லிக்கனி போலாகும். எ-று. (உ௫)

என்னஞானிபிங்கலமாமுனிசொல்வானிவவங்கமெல்லா
முன்னியெடுத்தோர்குடத்திலிட்டுமுகிலைத்தாவியெட்டுமூசிக்
கன்னலுடைந்ததீஞ்சாறுகழனிநிரம்பக்கமலக்காட்
டன்னநடையார்நடமாடுமெரங்கார்சேலம்வரக்கடவாய்.

(இ - ள்) என்று ஞானியாகிய பிங்கலமுனிவர் பின்னும் சொல்வார்: இந்த அங்கமுழுவதும் தெரிந்து எடுத்து ஒரு குடத்தில் வைத்து மேகங்களைத்தாவி ட்டுகின்ற சோலையுடைய கரும்புகள் முறிந்து அதனால் உண்டான தித்திப்

பான சாறு வயல்களில் நிறையவளரும் தாமரைக்காட்டில் வசிக்கும் அன்னங்கடையுள்ள மாதர்கள் நடனமாடும் சாலைகள் நிறைந்திருக்கின்ற சேலத்திற்கு வரக்கடவாய். எ-று. (உசு)

அங்குநாமுமுடன்வருதும்வேதமுறைமுறையிட்டலறியின்னும்
பொங்குமுருவமறிவரியபுனிதன்கோயிலுட்புகுந்து
சங்குசூல்கொண்டீனுமுத்துவயல்சூழ்சேலத்தலமகிமை
யெங்குமறியவிளங்குவிப்போமென்னவந்தாரிருவோரும்.

(இ - ள்) அவ்விடத்திற்கு நாமும் வருகிறோம்; நான்கு வேதங்களும் முறையிட்டு அலறியும் இன்னமும் திருவுருவத்தை அறிவதற்கு அரிதான சிவபெருமான் வீற்றிருக்கும் திருவாலயத்திற் பிரவேசித்துத்தொழுது, சங்குகள் கருவுற்று முத்துகளைப்பெறும் வயல் சூழும் சேலமென்னும தலத்தின் மகிமையை எவ்விடத்திலும் எல்லாரும் அறிய விளங்கும்படி செய்வோம் என்றுசொல்லி இருவரும்வந்தார்கள். எ-று (உஎ)

கரைகொன்றிரைத்துவரும்பஞ்சாக்கரநீர்நதியினிடைமூழ்கி
யரகராவென்றுரைத்தணிவுற்றகத்தினன்புகசிந்துருகிக்
கருணையுருவாம்பட்டீசர்தாளைக்கருதிக்கோயிலெய்தி
யிருவல்வினையின்றுவக்கறுத்தமுனிபிங்கலனுமிசைக்கின்றான.

(இ - ள்) கரையை அடித்து ஆரவாரித்துவரும் நீண்டதிருப்பஞ்சாக்கர நதியில் ஸ்நானம்செய்து ஹர! ஹர! என்றுசொல்லித்திருநீறணிந்து மெய்யன்பு பெருகிக்காருண்யமே திருவுருவமாகக்கொண்ட சுகவனேசர் திருவடிகளைச் சிந்தித்துத்திருக்கோயிலுள் புகுந்துபாவபுண்ணியமென்னும் இருவினையின் குற்றம் நீக்கிய பிங்கலமாமுனிவர் சொல்லத்தொடங்கினார் :—எ-று. (உஅ)

கனைக்குங்கயவாய்ப்பனைமருப்புக்கடாவையுகைக்குங்கூற்றஞ்சச்
சினத்திணுதைத்தசிவனுண்டுசேலத்திறக்கின்முத்தியுண்டு
நினைத்துவாசஞ்செயிற்பாவநீங்குமிவைகண்மூன்றுமுண்மை
யெனிற்காளத்திசத்தியமென்றெதிராய்த்தோன்றுகென்றிசைத்தான்.

(இ - ள்) ஆரவாரிக்கும் பெருவாயும்-பனையொத்த கொம்புகளையும் உடைய எருமைக்கடாவின்மேல ஆரோகணிக்கும் யமன் பயப்படும்படி கோபித்து உதைத்த சிவன் உண்டு; சேலத்தில் இறந்தால் முத்தியுண்டு ; கருத்துடன் தலவாசம் செய்தால் பாவம்தீரும் ; இந்த மூன்று சங்கதிகளும் உண்மையானால் காலம்சென்ற காளத்தி என்பவனே! சொல்லிய மூன்றும் சத்தியம் என்று எமக்கு எதிரே வரக்கடவாய் என்றுசொன்னார். எ-று. (உகூ)

குடமுமுடைந்தவெந்தவென்புகூடியொன்றாயுருக்கொண்டு
வடிவாய்ச்சிவனுண்டிலகிறக்கின்முத்திவாசம்வினைநீங்கு
முடிவுமூன்றுஞ்சத்தியஞ்சத்தியஞ்சத்தியமாமுக்காலும்
படிபுளோர்களறிகவெனப்பகர்ந்தானின்றுகாளத்தி.

(இ-ள்) குடம் உடைந்து வெந்த எலும்புகள் ஒன்றாய்ச்சேர்ந்து உருவமாகிப்பழையவடிவத்தோடெழுந்து "சிவனுண்டு" "சேலத்தில்இறந்தால்முத்தி" "தலவாசம் செய்தால் இருவினைகள் நீங்கும்" இவைமூன்றும்மூக்காலும், சத்தியம்! சத்தியம்! சத்தியம்! பூலோகத்திலுள்ளவர்கள் அறியக்கடவர் என்றுகாளத்தி எழுந்து நின்று சொன்னான். எ-று. (௩0)

வேதமுடிவுகண்டுண்மைவிளங்கக்கண்டமுனிபரமர்
பாதமலரைத்துதித்திறைஞ்சிப்பன்னாள்வாசஞ்செய்தகன்று
நாதரருளாற்பரிச்சித்துநற்காளத்தியென்பவரு
மாதவங்கண்முயன்றுமுத்தியடைந்தாருலகுவாழ்ந்திடவே.

(இ-ள்) வேதமுடிவை யுணர்ந்து உண்மைப்பொருள் விளங்க உணர்ந்த பிங்கலமுனிவர் சிவபெருமான திருவடிகளைப் போற்றி வணங்கிப் பலநாள் தலவாசம்செய்து பின்பு நீங்கினார். பரமசிவத்தின் திருவருளால் பரிச்சிதனும் நல்ல காளத்தி எனபவனும் மகாதவங்களைப்புரிந்து இவ்வுலகம்வாழும்படி முத்தி அடைந்தார்கள். எ-று. (௩க)

## வேறு.

சங்கரன்புகழேவாழிசதுர்மறையினிதுவாழி
மங்கையர்கற்புவாழிமன்னவன்செங்கோல்வாழி
திங்கண்மும்மாரிபெய்யச்சேலமாநகரம்வாழி
சிங்கரனடியார்வாழியித்தலபுராணம்வாழி.

(இ-ள்) சிவபெருமான் திருப்புகழே வாழ்க! நான்கு வேதங்களும் சுகமாய் வாழ்க! மாதர்களுடைய பதிவிரதா தருமம் வாழ்க! இராஜ நீதி வாழ்க! மாதம் மும்மாரி பொழிந்து சேலமா நகரம் வாழ்க! இவ்வுலகத்தில சிவனடியார்கள் வாழ்க! இந்தத்தலபுராணம் வாழ்க! எ-று. (௩உ)

பரிச்சித்துச்சருக்கம் முற்றிற்று

ஆக பாயிரம் உள்படச்சருக்கம் கஉ-க்குத்திருவிருத்தம் ௬எ௨.

++++++++++++++++++++++++++

‡ பாவநாசத்தலபுராணம் சம்பூரணம். ‡

++++++++++++++++++++++++++



உ

# புராணசாரப்

# போற்றித்திருவகவல்.



சிகரமாமலையுஞ் - சினகரமாடமும்
மகரமீனுகளும் - மணிமுத்தாநதியும்
திகழ்பல்வளங்களாற் - சிறந்திடுஞ்சேல
நகரினாமமும் - நாலோடிரண்டாய்
விளங்கவைத்த - வித்தகபோற்றி
களங்கமிலடியார் - கனவிலுமறவாக்
கனியேபோற்றி - கதியேபோற்றி
தனியேபோற்றி - தயாபரபோற்றி
நித்தியநிரஞ்சன - நிராமயபோற்றி
சத்தியஞானத் - தற்பரபோற்றி
வேதப்பயனும் - விகிர்தாபோற்றி
நாதமுங்கடந்த - நாயகபோற்றி
உச்சிதவெளியி - லொளியேபோற்றி
சச்சிதாநந்த - சதாசிவபோற்றி
முப்புரமெரித்த - முக்கணாபோற்றி
செப்பருஞ்சின்மயச் - சிவமேபோற்றி
திங்களங்கண்ணிச் - செஞ்சடையோற்றி
மங்கையோர்பங்குடை - மணாளபோற்றி
தக்கன்மகத்தாற் - சார்ந்திடப்பெற்ற
துக்கமனைத்துந் - தொலைந்திடவேண்டு
நதியிடைமூழ்குபு - நலமுறப்பன்னுன்
விதிமுறைதலத்தில் - மேவியேயமர
ஆலவாய்ப்பூசை - யாற்றிடவன்னே
பாவநாசஞ்செய் - பரஞ்சுடர்போற்றி
மாதவவசிட்டன் - வனத்திடைவந்த
மேதகுகௌசிக - வேந்தன்றனக்கும்
வீரர்களுக்கும் - விருந்துகடிதிற்
சீரதாய்ப்புரிவெனச் - செப்பியவண்ணம்
அரியவிண்ணுவும் - ஆற்றியதிறத்தாற்
பெரியதோருவகை - பெற்றவனை



அருந்தவனேயிவ் - வாவினையெனக்குத்
தருகெனவேண்டியுந் - தராதிருந்ததனால்
வலிந்துபிடித்த - வலையாலக்கணம்
பொலிந்துவிளைந்த - போரிடையாவின்
பலத்தாலரசன் - பரிசனரனேகர்
நிலத்துயிர்நீங்க - நேர்ந்தபாவமும்
நீரவேகாம - தேனுவும்பூசை
நேரதாய்ச்செய்த - நெறியினன்மகிழ்ந்து
பலவரமளித்த - பட்டீசபோற்றி
மலவிருளகற்றும் - மகத்துவமுடைய
மறைகளோர்நான்கும் - மறைந்திடநாகர்க்
கிறையெனுமனந்த - னிரக்கமுற்றந்தண
வடிவந்தாங்கி - வளர்பாவநாசக்
கடிநகர்ச்சிருக்கு - க்கற்பித்திடுவேன்
என்றுதிரண்ட - விளைஞருக்கருமறை
துன்றுதிரைக்குட் - டொல்லைமேனியனாய்
இருந்துமொழிந்ததை - யெட்டிப்பார்த்த
திருந்தறிவில்லாச் - சீடர்கள்யாரும்
வெந்துமரித்த - விதத்தாற்பாவம்
வந்ததையொழிக்க - வளர்பாவநாச
ஆலயமதனுள் - அகழ்ந்தொருகேணி
சாலப்புரியுந் - தவத்தினைநோக்கிக்
கங்கணவராப்போற் - கனமுறுவாழ்வுந்
துங்கநல்முத்திச் - சுகமுமருளி
வாவியிற்றவளை - வதிவுறுதென்றும்
வாவியிற்றிவலை - வாய்மடுப்புறினும்
குட்டப்பெருநோய் - விட்டிடுமென்றுங்
காசக்கடும்பிணி - நாசமாமென்றும்
பாசத்தலையறு - பட்டிடுமென்றும்
நல்வரமளித்த - நாகீசபோற்றி
அல்லுறுகண்டத் - தானேபோற்றி
மணிமுடியனந்தன் - மறைந்தமாமறைகள்
திணிபெறவிளங்கச் - செய்தவிறற்சதுர்
வேதமாமங்கல - மேதகுநாமமும்
ஓதவேயருளிய - வுத்தமபோற்றி

# போற்றித்திருவகவல்.

வனசக்கோயிலின் - மன்னியகடவுள்
தனதருந்திறலைச் - சத்தியவுலகிற்
சார்ந்திடுஞ்சபைக்குச் - சாற்றினனோர்பகல்
ஓர்ந்தசுகமுனி - யுரைத்துவாணிக்குப்
பன்னியவண்ணம் - பகருங்குணமுடை
வன்னியின்றன்மை - மாறுமுறையால்
தன்னையுருக்கொள் - சாபமடைந்து
மெத்தவணங்கி - விளங்குமறிவொடு
திகழும்பான்மையுஞ் - சேர்ந்திடப்பெற்று
மகமுயல்சைல - வளநகர்க்காவிற்
கிளிகளுக்கரசாய்க் - கிளர்புனத்திருந்து
களிப்புடனினது - கனமுறமாடலைத்
திருந்தினத்திற்குச் - செப்பித்தினைக்கதிர்
வருந்திக்கொணர்ந்துன் - மலரடிப்பூசை
புரிந்துவருநாட் - புனத்துறுகுரல்களை
அரிகளிவண்ண - மழித்தலைநோக்கி
வனசரனாகிய - வச்சிரகாதன்
சினமதுகொண்டித் - திருட்டினைக்காண்பான்
பரணிலிருந்து - பாதுகாக்கையில்
விரவியகிளிகள் - மேதகுபூசனை
செய்யவேகினைந்து - தீரமாய்க்குரல்களைக்
கொய்திடக்கைக்கவண் - கொண்டெறிந்தவற்றைப்
பின்னுந்தொடர்ந்தனன் - பெட்புறமேவித்
துன்னுமோர்புற்றிடைத் - தோன்றுபான்றன்
அடைந்தங்கிருக்க - வாயுதமெடுத்தே
யுடைத்துப்புடைத்த - வுறுதொழிலதனாற்
கிள்ளைகளெல்லாங் - கிளருமின்பதங்கள்
உள்ளியதன்மையா - லுயர்சுகமுறவும்
அன்னவடிவா - யயனறியாநின்
பொன்முடிக்கூறு - பொருந்திடாவண்ணம்
பசியசிறகினைப் - பரிவுடன்விரித்துக்
கசிந்திடுமன்பாற் - காத்தலைக்கருதி
யிருந்ததவக்கிளி - யிணையிலாவருளாற்
றிருந்தியபண்டைத் - திருவுருப்பெற்றுத்
திகழுஞ்சுகமுனி - செய்தவமதனால்

அகமகிழ்ந்தென்று - மழிவிலின்புதவிச்
சுகவனமேவிய - சுடரேபோற்றி
சகமெலாமுய்யவோ - தண்ணளிவிளங்கவோ
மின்னேர்வளமுலை - மென்முடிசொரிந்த
செந்நீர்ப்பெருக்காற் - றிகைத்துத்தெளிந்து
வன்மையைப்புரிந்துபின் - வாழ்வதுகூடா
தென்னவேகருதி - யிறக்கத்துணிந்த
வனசரற்கின்ப - வாழ்வினையளித்த
பனகாபரணப் - பரனேபோற்றி
பிறப்பிறப்பென்னும் - பெருங்கடனீந்தச்
சிறப்புறுபுணையாஞ் - செம்மையைத்தெழுத்தை
யாவரேயாயினும் - எழிற்றலவாசம்
மேவிடிலவர்கள் - மேலனாட்செய்த
பாவங்களெல்லாம் - பாற்றிமெய்த்தூய
பாவனாசமாம் - பதியிடைகதியாய்த்
திகழ்வுறப்புரிந்து - திருப்பஞ்சாக்கரப்
புகழ்பெறுநாமமும் - பொலிந்திடச்சூட்டிய
போதவாகந்தம் - பொருளேபோற்றி
வேதவிதிப்படி - விரும்புசங்கற்பம்
ஓதியேயாயினு - மோதாதாயினுஞ்
சீதளப்புனலிற் - றிளைப்பார்வினையெலாம்
நீங்கிடவருளிய - நீதனேபோற்றி
பாங்காமமரர் - பரிந்ததில்மூழ்கக்
கொடியபாவமும் - கூவுங்காக்கையின்
வடிவுகொண்டேனே - மரித்திடப்புரிந்த
ஈசனேபோற்றி - எந்தையேபோற்றி
மாசொன்றில்லா - மணியேபோற்றி
தமகுணவஞ்சகச் - சரவதிபவத்தால்
யமபுரத்தொருசா - ரெரிவாய்நரகில்
வருந்தும்பொழுது - வலியவேஞமலி
யொருத்தியவெயிற்றுற் - புவிதனிலிறந்த
மற்றவளுடம்பில் - வெற்றெலும்பொன்றைப்
பற்றிப்பலமணி - யுற்றிமெதியில்
விட்டவக்கணமே - விமானமிழிந்து
கிட்டவதிவேறிக் - கின்ரிலவலோகி

# போற்றித்திருவகவல்.

மெய்திடவருளிய - விறையேபோற்றி
அவனியின்மாந்தருக் - கன்னையேபோலுந்
தவத்துயரவ்வை - தானவதரித்தவிப்
பதியின்வீறும் - நதியின்சீரும்
மதிதனிலுணர்ந்து - கதிதருவாசஞ்
செய்திடவமைத்த - திருமுகப்படியே
யுய்திறனோர்ந்த - வுத்தமச்சோழனுஞ்
சிலம்பொலிசேட்கத் - தினம்பூசித்த
கலந்திகழ்சேரர் - நாயகக்கோனும்
வீரபாண்டிப்பேர் - வேந்தனுமாகிய
தீரமூவரசருஞ் - சேர்ந்தவணமுட்முடித்
தலைவாசலென்னச் - சாற்றுமோர்நகருங்
கலைமதிதவழுங் - கவினுறுசிகரத்
தளியுமங்கமைத்த - தருமமன்னவலாக்
களிப்பாடெதிர்கொளக் - காதலித்தடைந்த
அவ்வைசொல்படலா - லறுத்தமுத்தண்டமு
செவவியபனையாய்த - திரண்டெழுந்த
பதியொடுகெதியுங் - கதிபாலிக்கும்
இதிற்சமுசயமே - வில்லையென்றுணர்ந்
காலோடொன்று - கணேனுமிலிங்கம்
பாலதாய்விளங்கும் - பஞ்சாக்கரத்தின்
பொற்பார்புனல்ற் - பொருந்திப்பன்றன்
அற்புதாபோற்றி - யமிர்தேபோற்றி
என்றுதொழுதநா - வினிதுடன்வாழ்ந்து
மன்னரிருவோர் - மாண்புறுசிவகதி
யெய்தினர்சேரர்க் - கிறையெனப்படுவோன்
சைவமெய்ச்சமயந் - தரணியிலவிளங்கவும்
வேதியப்பின்னையை - வென்சாவுமிழவும்
ஓதியதாயோ - னுயர்வன்றொண்டன்
தனதருந்தோழனுஞ் - சாபினைமருவி
மனத்தினுவிசைவுடை - வாரணபரியூர்ந்து
திருக்கயிலாயமே - சேர்ந்திடவருளிய
மருக்கினர்கொன்றை - மதிதவழ்வேணிப்
பிரானேபோற்றி - பிஞ்ஞகபோற்றி
சராசரம்யாவுஞ் - சத்தாஞ்சிவமாய்

# போற்றித்திருவகவல்.

விளங்குங்காட்சியை - விமலவாரூரற்
குளமகிழ்ந்தருளிய - வொருவாபோற்றி
ஆத்திசூடிமுத - லளவிலாநீதி
சாத்திரமியற்றிய - தண்குணவவ்வை
அரியதோர்பதவி - யடையவேயருளிய
கரியுரிபோர்த்த - கடவுளேபோற்றி
மனுகுலவேந்தன் - மகதநாடுடையோர்
தனுசிறுல்மாய்ந்த - தனையனைக்கேது
மதியெனப்படுவோன் - வளர்பாவகாசப்
பதியிடைக்கொணர்ந்து - பற்பவெண்ணீற்றை
ஆலயகுருக்களா - லாக்கையிற்றடவலும்
பாலன்றுயினீத்த - பரிசெனவெழுந்திட
வரந்தருமுக்கண் - மணியேபோற்றி
கரந்தையைச்சூடுங் - கண்ணுதல்போற்றி
நீதகலனந்தன் - றிருப்புளோருய்ந்து
பாதகமிரியவப் - பார்த்திபற்கருளிய
சிற்றம்பலத்திற் - றிகழொளிவிளக்கே
பெற்றமூர்ந்தருள் - பிரானேபோற்றி
இப்பிறப்பொருவ - னினிதலாவினைகள்
ஒப்புறப்புரியி-லுறு - பயனுறல்லெனத்
தப்பிலாதடைவது - சரதமேயாகவின்
வெப்புறுசிந்தையான் - விகயமேயில்லான்
அறத்தினைக்கனவினு - மாற்றிடாக்கொடிய
மறக்குலத்தலைமை - வகித்தசழக்கன்
அடியர்பாலியற்றிய - வநீதியதனாற்
கொடியதாங்குட்டங் - கொண்டடல்வருந்தி
செறிபிணிதீர்க்குஞ் - செவவியமருந்தினை
அறிஞர்மொழிதர - வாதரவாய்ப்பல
பதிகளிற்படர்ந்து - பரவிவருகான்
விதிமாலிறைஞ்சும் - விமலாவுனைத்தொழ
திருப்பாவகாசத் - திருநகரணைந்து
கருத்தனேயடியனைக் - காத்தருளென்னுஞ்
சிந்தையோடிருக்கத் - தீர்கிலாவெங்நோய்
தந்திடுவருத்தந் - தணிவுறக்கண்டு
அந்திவண்ணநின் - னடியிணையணிந்து

# போற்றித்திருவகவல்.

வெங்நோயகற்றும் - வித்தகவாவியின்
நன்னீர்படிந்து - நலிபிணிதவிர்ந்து
பொன்போல்மேனி - பொலிவுறமகிழ்ந்து
முன்னெழில்மண்டப் - முதற்பலபணிகள்
தன்னுறுபொருளாற் - றகவாயமைத்திடச்
செய்சுகவனத்தச் - செல்வாபோற்றி
யுய்வகைநாயேற் - குவந்தருள்போற்றி
மனத்திணராது - வனப்பாலைமலா
வனத்திடைவரிப்புலி - வதைத்திடப்புரிந்த
தீவினைதீர்வுறச் - செந்தீநாப்பண
மேவியேவெந்திடு - வியன்காளத்தியின்
அங்கந்தனைக்கொணர்ந் - தரும்பரிச்சித்து
துங்கமிகுசேலத் - தொல்பதியிலுய்க்கச்
சேலப்பதிதனிற் - சிவமுண்டென்பதுஞ்
சேலத்திறந்திடிற் - சிவபதமுறுவதுஞ்
சேலத்திருத்தல - வாசஞ்செய்திடிற்
சாலச்சுகமெனற் - சத்தியமாமெனில்
என்புகள்வடிவா - யெழுந்திடுமென்று
நன்முனிபிங்கல - ஞானிகவிறலும்
விண்டலத்தோரும் - மேதினிமாந்தரும்
கண்டதிசயிக்கக் - காளத்தியுயிர்த்தெழத்
திருவருள்புரிந்தமா - தேவாபோற்றி
கருணையங்கடலெழு - கலைமதிபோற்றி
அன்பாகவிரு - ளகற்றவொளிருஞ்
சின்மயக்கிரணத் - தினகராபோற்றி
சராசரமெலைவக்குந் - தலைவாபோற்றி
புராணகாரணப் - பொருளேபோற்றி
இத்தலபுராணம் - யாவருமுணர்ந்து
பத்திமைபுரிந்து - பலநலந்துய்த்துச்
சித்தியுமுத்தியுஞ் - சேர்ந்திடவருளாற்
சுத்தசைவனுஞ் - சொக்கலிங்கப்பேர்
வித்துவான்முன்றவ - வேடம்புனைந்து
செப்பெனப்பணித்த - சிவயோகிபோற்றி
சொப்பிரகாசச் - சுடரேபோற்றி
சுகவனமென்னஞ் - துதிசெய்வோர்க்குச்

# போற்றித்திருவகவல்.

சகலனமளிக்குந் - தாயனேபோற்றி
அடியார்குழுவெனு - மளிசனகலைக்
கடியார்கமலக் - கவினேபோற்றி
கூற்றினைச்செற்ற - குழகாபோற்றி
காற்றாய்விண்ணாய்க் - கலந்தாய்போற்றி
பொன்னம்பலத்துப் - புண்ணியாபோற்றி
சொன்னம்மைபாகச் - சகவனேசபோற்றி
அத்தாபோற்றி - அமலாபோற்றி
முத்தாபோற்றி - முதல்வாபோற்றி
அங்கணாபோற்றி - அரசேபோற்றி
சங்கரபோற்றி - சம்புவேபோற்றி
போற்றிபோற்றி - புனிதாபோற்றி
போற்றிபோற்றி - சிவசிவபோற்றி.

முற்றிற்று.

—✻—

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 16, 23 | கட்டுதறி | கட்டுத்தறி. |
| 2 | 12 | பாவநாசப்புரத்திற் | பாவநாசபுரத்தின். |
| 4 | 20 | வழுத்திறைா | வழுத்தினேனா. |
| 5 | 23, 34 | தகூஷிணமூர்த்தி | தக்ஷிணமூர்த்தி. |
| 7 | 23 | தடுத்ததலாற்றலெ | தடுத்ததனாற்றலெ. |
| 9 | 26 | பிதப்புட் | பிறப்புட். |
| 9 | 32 | யருள் | அருள். |
| 12 | 4 | நாகீச்சுமாய் | நாகீச்சுரமாய். |
| 13 | 28 | வெண்டேனிடைபொதிவர் | வெண்டேனிடைப்பொதிவர் |
| 13 | 29 | காகத்திடைபெய்வர் | காத்திடைப்பெய்வர். |
| 15 | 13 | காறை | காலை. |
| 19 | 7 | சைடமுடி | சடைமுடி. |
| 76 | 32 | வன்திரதிறைன் | வன்திரத்திறைல். |
| 99 | 6 | அலெவிடமுணடோர் | அலெவிடமுணடோர். |
| 99 | 7 | வுள்குவார் | யுள்குவார. |
| 101 | 25 | வாரித்திருவாய் | வாரிதிருவாய். |
| 101 | 26 | நிகர்க்கை | நிகர்கை. |
| 106 | 6 | வைத்தான் | வைத்தான். |
| 156 | 5 | குறிஞ்சி | குறிஞ்சி. |
| 170 | 33 | திருவருளைபல | திருவருளைப்பல. |
| 171 | 7 | பாவந்திற்கு | பாவதிற்கு. |
| 176 | 17 | உசு | கசு. |
| 191 | 6 | வாளாயுதத்தைதிறைற் | வாளாயுதத்திறைற். |
| 192 | 13 | படைதான் | படைத்தவன். |

| | | ரூ. | அ |
|---|---|---|---|
| செவ்வாய்ப்பேட்டை... | ம-ள-ள-ஸ்ரீ கா. இரகுநாதசிங்கவர்கள் ... | க | |
| | ,, மா. சண்முகஞ் செட்டியார்... | உ | |
| | ,, கிஷ்ணசுவாமி நாய்க்கர் ... | க | |
| | ,, வை சு குப்பண்ணமுதலியார் | க | |
| | ,, நாராயணசாமி நாய்க்கர் ... | க | |
| | ,, மே.கி சுப்பராய செட்டியார். | க | |
| | ,, சி. இரத்தினஞ் செட்டியார்... | க | |
| | ,, கொ.தா.அரியபுத்திரசெட்டியார். | க | |
| | ,, மா. குமரவேல் செட்டியார்... | க | |
| | ,, வெ. வெங்கட்டராம்செட்டியார். | க | |
| | ,, பொ. முருகப்ப செட்டியார் ... | க | |
| | ,, சீதாராம நாய்க்கர் ... | ச | |
| | ,, மு. வைத்திலிங்க பண்டாரம் . | க | |
| | ,, அ. குட்டி செட்டியார் ... | க | |
| | ,, வை ஆறுமுகஞ் செட்டியார் . | க | |
| | ,, அ. முத்துசாமி செட்டியார்... | க | |
| | ,, கெ.அ. வையாபுரிசெட்டியார். | ரு | |
| | ,, மு குருநாத செட்டியார் ... | க | |
| | ,, மு. குப்புசாமி செட்டியார் ... | க | |
| | ,, ம வை. வேலாசாமி செட்டியார். | க | |
| | ,, உச்சப்ப செட்டியார் ... | க | |
| | ,, கெ. முத்துசாமி ஆசாரி ... | க | |
| | ,, அ கோவிந்த முதலியார் ... | க | |
| | ,, வி. பழனியாண்டி ஆசாரி ... | க | |
| | ,, மு. பெரியதம்பி உடையார் ... | க | |
| | ,, ம.சொ. முத்துச மி பிள்ளை ... | க | |
| | ,, ம தொ. முத்தழகு பிள்ளை ... | க | |
| | ,, கா. இராமசாமி செட்டியார்... | க | |
| | ,, அ சொ. அப்பாவு செட்டியார். | க | |
| | ,, வா ப. அங்கப்ப செட்டியார்... | க | |
| | ,, அ. வேணுகோபாலசெட்டிய ர் | க | |
| | ,, வே. இராமசாமி முதலியார் ... | க | |
| | ,, சகு சுப்பராய செட்டியார் ... | க | |
| | ,, பொ. இராமலிங்க செட்டியார் | க | |
| | ,, தா கஞ்சப்ப செட்டியார் ... | க | |
| | ,, வீ. முத்துசாமி முதலியார் ... | க | |
| | ,, க சுப்ரமண்ய ஆசாரி ... | க | |
| | ,, ராகவ பத்தர் ... | க | |
| | ,, குமரவேல் செட்டியார் ... | க | |
| | ,, தி. வெங்கடாசல செட்டியார். | க | |
| | ,, தி. குப்புசாமி செட்டியார் ... | க | |
| | ,, தொ சுப்ரமண்யசெட்டியார்... | க | |
| | ,, அ. செங்காத செட்டியார் ... | க | |

